KALKI
21.2.99
ரூ. 4.50

# கல்கி

## தூக்கி நிறுத்திய தெற்கு!



# ஸ்ரீ டிராவல்ஸ்

12/A ரெட்ஹில்ஸ் ரோடு, கொளத்தூர், சென்னை - 99.
Ph: 5378620/5584866 Fax: 5584866
E-மெயில் : Sritrave@ md3.vsnl.net.in

## கோடை விடுமுறையை உங்கள் குடும்பத்துடன் களித்து மகிழ

## ஸ்ரீ டிராவல்ஸ் மூலம் இப்பொழுதே திட்டமிடுங்கள்

---

அனல் பறக்கும் கோடையில் குளு குளு மலைப் பிரதேசங்கள்!

**ST 4** புறப்படும் தேதி 21.04.1999

சென்னை - கல்கத்தா - டார்ஜிலிங் - கேங்டாக் (சிக்கிம்) - காத்மாண்டு (நேபாளம்) - வாரணாசி - அலகாபாத் - சென்னை.

பயணத் தொகை ரூபாய் 6,600/- 12 நாட்கள்

---

**ST 5** புறப்படும் தேதி 7.05.1999

சென்னை - ஆக்ரா - டில்லி - சிம்லா - குலு - மணாலி - சண்டிகார் - ஹரித்துவார் - ரிஷிகேஷ் - டில்லி - சென்னை.

பயணத் தொகை ரூபாய் 5,600/- 12 நாட்கள்

---

**ST 6** பக்தி மணம் பரப்பும் பரவச இறை உலா!

புறப்படும் தேதி 24.05.1999

சென்னை - காசி - சாரநாத் - அலகாபாத் - ஜம்மு வைஷ்ணவி தேவி - அமிர்தசரஸ் - ஹரித்துவார் - ரிஷிகேஷ் - கர்ணபிரயாக் - ருத்ரபிரயாக் - பத்ரிநாத் - கேதாரிநாத் - டில்லி - ஆக்ரா - சென்னை.

பயணத் தொகை ரூபாய் 6,600/- 15 நாட்கள்

---

- அனைத்து இடங்களிலும் தரமான ஹோட்டல்களில் பிரத்தியேக ரூம்கள்
- மூன்று வேளையும் டூர் முழுவதும் தரமான சைவ உணவு
- எல்லா இடங்களிலும் நுழைவுக் கட்டணம் உட்பட
- நட்சத்திர ஹோட்டலில் பிரத்தியேக விருந்து
- ஊர் சுற்றி பார்க்க தரமான பஸ் வசதி

கோடையில் கடுமையான நெரிசல் இருக்கும் என்பதால் பயணத் தேதிக்கு இரண்டு மாதங்களுக்கு முன்பே முன் பணம் ரூபாய் 3,000/- செலுத்துபவர்களுக்கு மட்டுமே கண்டிப்பாக இடங்கள் கிடைக்கும்

**அனைத்து கிரெடிட் கார்டுகளும் ஏற்றுக் கொள்ளப்படும்.**

**L.T.C. வசதி உண்டு**

(இரயிலில் II tier A/C வேண்டுபவர்களுக்கு பிரத்யேக வசதி செய்து கொடுக்கப்படும்)

ஒருமுறை ஸ்ரீ டிராவல்ஸ் மூலம் பயணம் செய்திடுங்கள்.

சுகமான அனுபவம் உங்களுக்கு காத்திருக்கிறது.

ஏமாற்றத்தைத் தவிர்க்க! உடனே முந்துங்கள்!



• பொதுக் கூட்டம்

அத்வானி விசிட் செய்த 6.2.99 அன்று கோவை நகரமே காவல் துறையின் 'சேஃப்டி' லாக்கருக்குள். வரலாறுகாணாத கெடுபிடிகள். வீட்டிலிருந்து கொண்டு ஜன்னலில் எட்டிப் பார்க்கவே பலருக்கு யோசனை!

பீளமேடு விமான நிலையத்தினுள் தலா 40 உயர் அதிகாரிகள், பத்திரிகையாளர்கள், அரசியல் பிரமுகர்களுக்கு மட்டுமே அனுமதி. முப்பது அடிக்குள் மூன்று வித செக்-அப்புகள். ஈ, எறும்புகளைக் கூட போலீஸார் மேலிருந்து கீழ்வரை சோதனை செய்து பார்க்காமல் விட்டிருந்தால் உலக அதிசயம்.

சரியாகக் காலை 11:05க்கு கோவை மண்ணில் கால் பதித்த அத்வானி, சூழ்நிலை கருதி மரியாதை நிமித்தம் கலெக்டரிடம் 'பொக்கே' வாங்கிக்

## கோவையில் அத்வானி:

# உந்திலிருந்து சென்றது உரை..!

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

கொண்டு, குண்டு துளைக்காத காரில் ஏறிக் கொள்வார் என்றுதான் அனைவரும் எதிர் பார்த்தனர். அவரோ தமது அன்பு மகளுடன் விமானத்தள வாயில் வரை நடந்தே வந்து (சுமார் 100 மீட்டர் தூரம்) அனைவரிடமும் கேஷுவலாகப் பேசியது பலருக்கும் ஆச்சர் யம். 'என்ன இருந்தாலும் படு தைரியசாலி சார்!' பத்திரிகையாளர்களிடம் கூட இத் தகைய பேச்சு.

ஒரு கி.மீ. தூரத்தில் குண்டுகள் இருந்தால் கூட கண்டுபிடிக்கக்கூடிய கார் முன்னே தாவ, பின்னால் குண்டு துளைக்காத காரில் அரசு விருந்தினர் மாளிகைக்கு விரைந்தார். வழி யெங்கும் மூங்கில், சவுக்கு மரத்தடுப்புகள். தூணுக்கு நாலு போலீஸாரும் உண்டு. நாற் பதும் உண்டு. சாலையோரம் 'கடைகள் வெறிச்'. விருந்தினர் மாளிகை வாயிலில் மறு படியும் காக்கிச் சட்டைகளின் சோதனைகள். பிரித்துக் காட்டப்படும் கேமரா பைகள்.

"பேட்ஜை முன்னால மாட்டுங்க சார்!"

"ஏய். நீ எங்கே!"

"நகரு. நகரு, மினிஸ்டர் வர்றார்!"

"பிரஸ்காரங்களை தொந்தரவு பண் ணாதீங்க, விடுங்க!"– சொல்லியபடி வந்தவர் ரங்கராஜன் குமாரமங்கலம். "விட்டா அவரை யும் தடவிப் பார்த்து சோதனையிடுவாங்க போல...!"– ஒலிக்கும் கமெண்ட்.

கொஞ்ச நேரம் முக்கியப் பிரமுகர் கள். அதிகாரிகள் சந்திப்பு. அரை மணி நேர ரெஸ்ட். விருந்தினர் மாளிகையிலேயே ஓர மாய் நீண்ட ஷாமியானா. அதில் குண்டு வெடிப்பில் பாதிக்கப்பட்டவர்களின் காத் திருப்பு. 170 பேராம். "கலெக்டர், கமிஷனர், மருத்துவ அதிகாரி, உள்ளூர் அமைச்சர் என்று எல்லாரையும் பார்த்தாச்சு. சி.எம்முக் குக் கூட பெட்டிஷன் கொடுத்தாச்சு. கடைசி நம்பிக்கையா இங்கே வந்திருக்கோம். ஏதாச் சும் கிடைக்குமா பார்ப்போம்."

– நம்பிக்கையில்லாத குரலில் பலர். கையில் அடையாள அட்டைகள். அத்வானி குறைகேட்புக்கு அழைக்கப்பட்ட கடிதங்கள். மருத்துவச் சான்றிதழ்கள். ட்ரீட்மெண்ட் விவ ரங்கள்.

அவர்களைச் சந்தித்த அத்வானியின் பேச்சில் உணர்ச்சிப் பிரவாகம். அவரிடம் பார்வையை இழந்த ஒருவர் அழைத்து வரப் பட, இரண்டு கால்களை இழந்த ஒருவர் தூக்கி வரப்பட, தமது ஒரே மகளை இழந்த தாய் பேச விடப்பட, அவர்களின் தமிழை ஆங்கி லப்படுத்தி அருகிருந்த ரங்கராஜன் குமார மங்கலம் அத்வானியிடம் சொன்னார். ஹுசைன் என்பவர் உருதுமொழியில் பேச, அத்வானி உருதுவிலேயே பதிலளித்தார்.

"இது எனக்கு விடப்பட்ட சவால்; எங்கள் அரசாங்கத்திற்கு விடப்பட்ட சவால். ஒரு நல்ல அரசாங்கத்திற்கு அடையாளம் சராசரி ஜனங்களுக்குப் பாதுகாப்பு. ஒரு மணி நேரத் தாமதம், பிப்ரவரி 14-ஐ மறக்க முடியாத நாளாக உருவாக்கி விட்டது" என நிறையப் பேசினர் உள்துறை அமைச்சர், "நம் தமிழக அரசு பாதிக்கப்பட்டவர்களுக்குச் செய்த மருத்துவ உதவி, நிதி உதவி போதாது" என சுட்டிக்காட்டவும் தயங்கவில்லை. கலெக்டர், உள்ளூர் எம்.பியுடன் கலந்து ஆலோசித்து அவர்களுக்குத் தேவைப்பட்ட உதவியைச் செய்ய வேண்டும் என கோரிக்கையும் வைத் தார்.

சம்பிரதாயம் போல் படு ஸ்பீடாய் குறை கேட்பு. அதைவிட படு ஸ்பீடாய் கூட்டத்தில் சலசலப்பு. உள்ளூர் கமிஷனருக்கும், எம்.பிக் கும் புகைச்சல். என்ன விஷயம்? பா.ஜ.க. பிரமுகர்கள் சிலரை உள்ளே விட மறுத்து விட்டனராம் அதிகாரிகள். உள்ளே வந்தவர் கள் மீதும் கெடுபிடி பாய்ச்சல் கொஞ்சம் அதிகம். 'எங்க தலைவரைப் பாதுகாத்து அனுப்ப எங்களுக்குத் தெரியும்!' தடித்த வார்த் தைகள். முகத்தைக் கடுப்பாக்கிக் கொள்ளும் காவலர்கள்.

"ராமேஸ்வரத்தில் ராஜீவ் வந்தப்ப, விடுதலைப் புலிகள் எதிர்ப்புக்கு மத்தியில கூட இருந்திருக்கேன். இவங்க மாதிரி யாருமேயில்லை!" மனவேதனையுடனும் கொஞ்சம் ரோஷத்துடனும் பேசும் ஓர் உயர் அதிகாரி.

"என்ன சார். பாதுகாப்புங்கற பேர்ல ஜனங்களையே வெளிய வரவொட்டாம பண்ணீட்டாங்க. சாயங்காலம் கூட்டம் எப்படி சார் நடக்கும்? தொண்டர்கள் எப் படி வருவாங்க. இங்கே ஆளுங்கட்சிக்காரங்க திட்டமிட்டே போலீஸை விட்டு இப்படி சதி செய்யறாங்க. நாங்க விட மாட்டோம்."

இன்னொரு மூலையில் பா.ஜ. தொண்டர் ஒருவரிடம் கொதிப்பு. எண்ணி சிலரிடம் மட்டுமே குறைகேட்பு. பிறகு உள்ளூர் எம்.பி யிடம் கொடுக்குமாறு பணித்தல். அத்வானி நகர்ந்ததும் பா.ஜ.க. எம்.பி. ராதாகிருஷ்ண னைச் சூழும் மனிதர்கள்.

"அத்வானிஜி சொல்லீட்டார்ல. கால் லயா? பிரச்னையில்லை. ஆபரேஷன் செஞ் சுடலாம். நா பார்த்துக்கறேன். கவலையை விடுங்க!"

அவர்கள் அகன்ற கொஞ்ச நேரத்தில் ஷாமியானா பந்தலிலேயே பிரஸ் மீட். சென்னை, கேரளா, கர்நாடகாவிலிருந்து கூட பத்திரிகையாளர்கள் ஆஜர். மதியம் 1:25

மணிக்கு ஆரம்பித்த கேள்விக்கணைகள் 'பாகிஸ்தானுக்கு பஸ்ஸில் பயணம் செய்வது, சல்மான் ருஷ்டி விவகாரம், திருச்சி ஸ்ரீதர் படுகொலை என உலகந்தழுவிய விஷயம் முதற்கொண்டு, உள்ளூர் விஷயம் வரை கேட்கப்பட்டது. கிட்டத்தட்ட 50 நிமிட நேர வினா, விடையில் கொசுறாய் ஒன்று.

"நீங்கள் வரும்போது பீளமேடு விமான நிலையத்திலிருந்து விருந்தினர் மாளிகை வரை 'டைட் செக்யூரிட்டி'. அதனால் பொது மக்களுக்கு பாதிப்பு. உங்களுக்கு சந்தோஷமளிக்கிறதா?"

"இல்லை. அது எனக்கு ஆச்சர்யமாகவே உள்ளது. அது குறித்தும் என் எண்ணங்களை அதிகாரிகளிடம் பேசியுள்ளேன்."

அரசு மத்திய அரசுடன் கைகோத்து செயல்பட்டு அம்மாநிலத்தை சகஜ நிலைக்குக் கொண்டு வந்துள்ளது. தமிழ்நாட்டிலும் நாங்கள் அதைத்தான் எதிர்பார்க்கிறோம். ஆனால் இங்கே ஸ்ரீதர் கொலையின் பின்னணியில் இங்கும் ஏதோ செய்ய வேண்டியுள்ளது என்று எண்ணுகிறேன்!"

– கொஞ்சம் டென்ஷனுடே எச்சரிக்கை செய்தார்.

அத்வானி பேசி முடித்ததும் எழுந்தது 'தமிழ் தேசிய கீதம்!' என்ன ஆச்சர்யமாகவுள்ளதா? நம்புங்கள். 'வாழிய செந்தமிழ்' ஒலித்தது! 'அடேயப்பா பா.ஜ.கவிற்கு எப்போது வந்தது தமிழ் அக்கறை?' என்று



• பலத்த பாதுகாப்புடன்....

**மா**லை 4:00 மணிக்கு அத்வானி வ.உ.சி. மைதானத்தில் பேசுவார் என்று அறிவிக்கப்பட்டிருந்தாலும் 6:00 மணி வரைக்குமே முக்கால் மைதானம் காலி. 50,000 பேரை உள்வாங்கிக் கொள்ளக்கூடிய அம் மைதானம் கிராமத்து ஆட்டுப்பட்டி, மாட்டுப்பட்டி போல, பத்து மீட்டர் நீள அகலத்தில் தடுப்பு மரச் சட்டங்களாகப் பின்னப்பட்டு, அதற்குள் தொண்டர்கள், பொது மக்கள் விடப்படும் அவலம். மைதானத்தைக் கவனமாகக் கண்காணிக்கும் வீடியோ கேமராக்கள். அங்கங்கே சிவில் உடையில் கண்காணிப்புக் குழுக்கள். இங்கேயும் மூன்று கட்ட சோதனைகள்.

மேடையிலிருந்து 100 – 150 மீட்டர் தூரத்திற்கு எதுவுமேயில்லை. ஓர் ஓரமாய் தீயணைப்பு வண்டி, ராட்சசப் பையில் நிறைந்திருக்கும் நீர். மேடைக்கு முன்புறம் நூறு மீட்டர் தொலைவில் பத்திரிகையாளர்கள், வி.ஐ.பிக்கள், கொஞ்சமாய்ப் பெண்கள். எல்லோருமே மரச்சட்டங்களுக்குள்.

அத்வானி பேசும்போது ஏறத்தாழ மைதானம் ஹவுஸ்ஃபுல். உள்ளூர் போலீசாரைப் பற்றி உள்ளூர் பா.ஜ.கவினர் நிறைய உள்துறை மந்திரியிடம் போட்டுக் கொடுத்து விட்டனர் போலும். அத்வானி கலைஞர் அரசு மீது 356-ஐ கட்டிக்காட்டி எச்சரிக்காத குறை.

"பத்து வருடங்களாக சுதந்திர தினவிழா, குடியரசு கொண்டாடப்படாத ஜம்மு காஷ்மீர், சுற்றுலாவாசிகள் வரத் தயங்கின அந்த மாநிலம் தற்போது பா.ஜ.க. ஆட்சியில் தான் சுதந்திர, குடியரசு விழாக்களைக் கொண்டாடியுள்ளது. அந்த அளவு மாநில

நம்முள் கேள்வி எழுந்த விநாடிக்குள் பாடல் முடிந்து ஓங்கி ஒலித்தது.

"பாரத் மாதா கி ஜே!"

**அ**த்வானி பேசி விட்டுச் சென்ற பிறகு, அரை கி.மீ. கடந்தால் ஒரு பெருங்கூட்டம்.

"மைதானத்திற்குள் நாங்க போகவேயில்லை. ஏந் தெரியுமா? ஒரு செக்ப்டிக்குத் தான். போதுமடா சாமி. போன தடவை பட்டதே!"

அத்வானி கோவை மண்ணில் கால் பதித்து இரவு 8:15க்குத் திரும்பிச் செல்லும் வரை காவல் துறை மட்டுமல்ல, கோவை மக்களும், ஏன் பா.ஜ.க. தொண்டர்களும் கூட மடியில் நெருப்பைக் கட்டிக் கொண்டிருந்தனர் என்றே சொல்லலாம். அவர் திரும்பிச் சென்றதும் 'அப்பாடா' என்று கோவையே நிம்மதிப் பெருமூச்சு விட்டதென்றும் சொல்லலாம்!

கட்டுரை, படங்கள் :

**கா.சு. வேலாயுதன்.**

# தூக்கி நிறுத்திய தெற்கு!






சென்னையில் தோற்றுப் போன நமது கிரிக்கெட் அணி தில்லியில் என்னவாகும் என்ற சஸ்பென்ஸுடன் ஆரம்பித்தது. முடிவு? இந்தியாவுக்குச் சாதகமாக அமைந்தது. பத்தொன்பது ஆண்டுகளுக்குப் பிறகு, பாக். அணியை வென்றிருக்கிறது இந்தியா. (1979-80ல் சென்னையில் நடைபெற்ற பந்தயத்தில் பத்து விக்கெட்டுகள் வித்தியாசத்தில் இந்தியா வெற்றி பெற்றது).

இந்த வெற்றிக்கு இரண்டு பேரை முக்கிய காரணமாகச் சொல்லிப் பாராட்டலாம். அவர்கள் : சடகோபன் ரமேஷ்; அனில் கும்ளே. இருவரும் தமிழ்நாடு, கர்நாடகாவைச் சேர்ந்த தென்னிந்தியர்கள்!

கிரிண்ட்லேஸ் பேங்கில் உத்தியோகம் பார்த்து, வாலண்டரி ரிடையர்மெண்ட் வாங்கின சடகோபனின் நான்கு புதல்வர்களுள் கடைக்குட்டி ரமேஷ். கிரிக்கெட் பாணியில் சொன்னால் சடகோபன் ரமேஷ். ஐந்தடி பதினொரு அங்குல உயரம். பிறந்த தேதி 13 அக்டோபர் 1975.

டெல்லி டெஸ்ட்டை முடித்து விட்டு, சென்னை திரும்பிய ரமேஷை, பத்திரிகையாளர்கள் மொய்த்துக் கொண்டார்கள்.

''இந்த திடீர் புகழ்வெளிச்சம், மீடியா கவனம் இதெல்லாம் எப்படி இருக்கிறது ரமேஷ்?''

''எல்லோரும் பேட்டி எடுக்கிறார்கள். இவையெல்லாம் வேண்டாமே என்று சொல்லித் தவிர்க்கப் பார்த்தால், பத்திரிகையாளர்களை நான் உதாசினப்படுத்துகிறேனோ என்று தவறாக நினைக்கலாம். கொஞ்சம்

சங்கடமாகத்தான் இருக்கிறது."

ரமேஷ், இந்திய அணியில் இடம் பெறுவது ஒரு மாதம் முன்பாகவே, ஏறத்தாழ உறுதியாகி விட்டது. எனவே, இவரும், எந்த நிமிஷமும் அறிவிப்பு வரக்கூடும் என்று எதிர்பார்த்து, அதற்கேற்ப தம்மைத் தயாராக்கிக் கொண்டு விட்டார். இந்திய அணியின் ஆட்டக்காரர்கள் பட்டியல் வெளியானவுடன், ரமேஷ் அதில் இடம் பெற்றிருக்கும் மகிழ்ச்சியான செய்தியை ஒரு பத்திரிகையாளர், ரமேஷ் வீட்டுக்குத் தெரிவிக்க, ரமேஷின் அப்பா, ஐ.ஐ.டி. கிரவுண்டில் பிராக்டிஸிலிருந்த ரமேஷை, செல்போனில் கூப்பிட்டுச் சொன்னாராம்.

"மேட்ச்சின்போது - முதல் தடவையாகக் களமிறங்கியபோது, அதுவும் தொடக்க ஆட்டக்காரராகக் களமிறங்கியபோது, ரொம்ப டென்ஷனாக இருந்ததா?"

"அப்படியெல்லாம் இல்லை. நான் இது வரை நம் நாட்டிலேயே முப்பத்து மூணு முதல் தர மாட்சுகள் ஆடியிருக்கிறேன். இரண்டாயிரத்து அறுநூறு ரன்கள் எடுத்திருக்கிறேன். துவக்க ஆட்டக்காரராகத்தான் நான் ஆடுவேன். எனவேநான் கூலாகத்தான் இருந்தேன்."

"இப்படி ஆட வேண்டும், இத்தனை ரன்கள் எடுக்க வேண்டும் என்று திட்டமிட்டுக் கொண்டீர்களா?"

"நான் திட்டம் எதுவும் போட்டுக் கொள்ள வில்லை. வரும் பந்தை கரெக்டாய் ஜட்ஜ் பண்ணி ஆட வேண்டும் என்பதில்தான் குறிப்பாக இருந்தேன். பதினைந்து ரன் என்பது என் இலக்கின் முதல் படி. அதன் பின் இன்னும் பத்து என்று வைத்துக் கொள்ளுவேன். அப்புறம் அரை செஞ்சுரி. அதைத் தாண்டினால், மிகுந்த தன்னம்பிக்கை வந்து விடும். செஞ்சுரி என் லட்சியமாகி விடும்!"

"டெல்லி டெஸ்ட்டில், தொண்ணூற்றாறு ரன்களில் அவுட் ஆனபோது, செஞ்சுரியை மிஸ் பண்ணிவிட்டோமே என்று மிகவும் வருந்தினீர்களா?"

"தொண்ணூறு ரன்களைத் தாண்டிய போதெல்லாம் நூறு நிச்சயம் என்று ரொம்பத் தன்னம்பிக்கையோடுதான் இருந்தேன். ஆனால், அந்த ஃபுல்டாஸ் பந்தை நான் எதிர்பார்க்கவில்லை. வலுவாய் ஒரு ஷாட் கொடுத்திருக்க வேண்டும். ஆனால் நான் அதைத் தடுத்து ஆட நினைத்து விட்டேன். அப்படியானால் நான் கொஞ்சம் லூசாக பேட்டைப் பிடித்திருக்க வேண்டும். அப்படிச் செய்யாமல் டைட்டாக பேட்டைப் பிடித்துக் கொண்டு அடித்தபோது அது நேரே கேட்ச்சுக்குப் போய் விட்டது. அந்த ஃபுல்டாஸ் பந்தை வேகமாய் அடித்திருக்கலாமே என்று நான் ரொம்ப வருந்தினேன்."

("தொண்ணூற்றாறு ரன்கள் எடுத்துவிட்ட சூழ்நிலையில் வீட்டில் டீவியில் பார்த்துக் கொண்டிருந்த அனைவருமே, அடுத்தது நாலு ரன் எடுத்துவிட்டதாகத்தான் முதலில் நினைத்து விட்டோம். அப்புறம்தான் தெரிந்தது ரமேஷ் அவுட் என்று!" என்கிறார் ரமேஷின் அப்பா சடகோபன்.)

"மேட்ச் அனுபவம் எப்படி இருந்தது? புதியவரான உங்களுடன் மற்ற ஆட்டக்காரர்கள் எப்படிப் பழகினார்கள்?"

"நான் கொஞ்சம் ரிசர்வ்டு டைப். ரொம்ப எளிதில் மற்றவர்களுடன் மிங்கிள் ஆக மாட்டேன். நானே வலியப்போய் எல்லாருடனும் பழகுவதைவிட, நான் என் திறமையைக் காட்டுகிறேன். மற்றவர்கள் அதைப் பார்த்தபின் என்னிடம் வரட்டும் என்று நினைப்பவன் நான். ஆனாலும் டீமில் அனைவருமே என்னிடம் நன்றாகப் பழகினார்கள். சௌரவ் கங்குலிதான்

## கிரிக்கெட் செண்டிமெண்ட்!

**சென்டிமெண்ட் - 1**

சடகோபன் ரமேஷ், ஸ்ரீகாந்தைப் போலவே களத்தில் இறங்கி ஆடுகிற போது, அடிக்கடி, சூரியனைப் பார்க்கும் பழக்கம் கொண்டவர். அதே போல, முதலில் இடது காலில் pad அணிந்து கொண்ட பின்தான், வலது காலில் அணிந்து கொண்டு, அப்புறம் கிளவுஸ் அணிவார்.

**சென்டிமெண்ட் - 2**

டெல்லி டெஸ்ட்டின் போது, கும்ளே முதல் விக்கெட்டை வீழ்த்தியதும், சச்சின் அவருடைய ஸ்வெட்டரையும், தொப்பியையும் வாங்கிக் கொண்டு போய் அம்பயரிடம் கொடுத்தார். அடுத்த விக்கெட் விழுந்தவுடனும் அப்படியே. பார்த்தார் சச்சின். கும்ளே பந்து வீச வந்தவுடன், 'ஒரு விக்கெட் விழ வேண்டும்' என்று சொல்லி, ஸ்வெட்டர் + தொப்பியை அம்பயரிடம் கொண்டு போய்க் கொடுப்பார். விக்கெட் விழும். இது சச்சினும், கும்ளே வும் கண்டு பிடித்த சென்டிமெண்ட். அடுத்த மேட்ச்சுகளிலும் இது ஒர்க் அவுட் ஆகுமா?

**— சி.எம்.**

# சின்னத் திரையில் பார்த்தது...



– கர்நாடக இசைப் பாடகி ஆர். வேத வல்லி விமர் சிக்கிறார்...

◆ பொதுவாக தூர்தர்ஷன் தயாரிக்கும் நாடகங்களில் சம்பவம் நடக்கும் வேளைக்கு ஏற்ற ஒளி அமைப்பு, இயல்பான செட் போன்றவற்றில் கவனம் செலுத்துவதில்லை. நடு இரவில் சத்தம் கேட்டு, எழுந்திருக்கும் பெண்மணியைச் சீரான கொண்டையுடனும், கசங்காத பட்டுப் புடவையுடனும் காட்டு வதுண்டு. அந்தவிதத்தில் ஸ்பான்ஸர் நிகழ்ச்சிகளில் ஒருவித நம்பகத் தன்மை தெரிகிறது. அதேபோல் தமிழர் பண்பாடு என்று முழங்கும் நாடகங்களில்கூட குழந்தைகள், பெற்றோரை "டாடி, மம்மி" என்று அழைக்கும்போது எரிச்சலாக இருக்கிறது.

◆ 'இசை அரங்கு' நிறைவான நிகழ்ச்சிதான், என்றாலும் அலுவலகம் செல்பவர்கள் காதுகளை எட்டாத அளவுக்கு, நண்பகல் பன்னிரெண்டு மணிக்கும், நிகழ்ச்சியில் பாடியவர்களே கேட்க மாட்டார்கள் எனுமளவுக்கு இரவு 11.30 மணிக்கும் ஒளிபரப்பினால் எப்படி? காலை 5.30 மணிக்கு மீண்டும் இதை ஒளிபரப்பத் தொடங்கியிருப்பது ஆறுதல்தான் என்றாலும், குழந்தைகள் காதில் இவை விழுந்து, அவர்களுக்கும் நம் தொன்மையான இசையில் ஈடுபாடு வருமளவுக்குத் தோதான ஒரு நேரத்தை – மாலை 7 லிருந்து 7.30 – இந்த மாதிரி – இதற்கு ஒதுக்கக் கூடாதா?

◆ மதியம் இரண்டரை மணிக்கு ஒளிபரப்படும் 'குறள் நெறி' மிகவும் உபயோகமானது. குறள் இன்பம் மட்டுமல்ல, வாழ்வியலுக்கும் அரிய யோசனைகளையும் தருகிறது.

– ஜி.எஸ்.எஸ்.

என் ரூம் மேட். கிரிக்கெட் பற்றி மட்டுமில்லாமல், பல்வேறு விஷயங்கள் பற்றியும் நாங்கள் பேசிக் கொண்டோம்."

"மறக்க முடியாத அனுபவம்?"

"இந்திய அணியில் இடம் பெற்று ஜனாதிபதி, பிரதமர் இருவரையும் சந்திக்க வாய்ப்புக் கிடைத்தது. அத்வானியைச் சந்தித்தபோது, செஞ்சுரி போடுவாய் என்று எதிர்பார்த்தேன்! பரவாயில்லை. 'ஆல் தி பெஸ்ட்' என்றார். என்னைப் பாராட்டும் விதமாய் அசாருதீன், ஒரு ஜோடி ஷூஸ் கொடுத்தார். அதே போல சச்சின் ஒரு பேண்ட் அளித்தார்."

"கும்ளே, பத்து விக்கெட் வீழ்த்தி சாதனை புரிந்தபோது, கூடவே இருந்த உங்களுக்கு எப்படி இருந்தது?"

"ரொம்ப சந்தோஷமாக இருந்தது. உடனடியாய் அவருக்கு என் பாராட்டுகளைத் தெரிவித்தேன். இன்னும் சில ஆண்டுகளில் அவர் 300 விக்கெட்டுகள் வீழ்த்திச் சாதனை புரிவார் என்று எனக்கு நம்பிக்கை இருக்கிறது. உலகத்திலேயே இத்தகைய சாதனை புரிந்த இரண்டாவது கிரிக்கெட் கும்ப்ளே என்கிறபோது ரொம்பப் பெருமையாக இருக்கிறது."

சடகோபன் ரமேஷுக்கு மியூசிக் கேட்பது முக்கியமான ஹாபி. ஆங்கிலத்தில் ஆக்ஷன் படங்கள், தமிழில் ரஜினி, கமல் படங்கள் பார்க்கப் பிடிக்கும். "நீண்ட காலம் இந்திய அணிக்காக ஆட வேண்டும். ஒரு நாள் பந்தயங்களிலும் ஆட வேண்டும் என்பது என் லட்சியம். அதைச் சாதிக்க முடியும் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. செஞ்சுரி அடிக்காமல் மிஸ் பண்ணி விட்டோமே என்று கூட நான் ரொம்பக் கவலைப் படவில்லை. ராகுல் திராவிட் கூட முதலில் மூன்று தடவை தொண்ணூறுகளில் அவுட் ஆனார்" என்கிறார்.

சுனில் காவஸ்கர் கூட, ரமேஷைப் பாராட்டிவிட்டு, "டெஸ்ட் மேட்ச் என்றால் முதலில் கொஞ்சம் நிதானம் தேவை" என்று அட்வைஸ் செய்தாராம்.

**1993-94**ல் லக்னோவில் நடந்த மேட்ச்சில் ஏழு விக்கெட்களை வீழ்த்திய சாதனையாளரான அனில் கும்ளே, டெல்லி டெஸ்ட் மேட்ச்சில் ஒரே இன்னிங்சில் பத்து விக்கெட்களையும் வீழ்த்தி, விஸ்வரூபம் எடுத்து விட்டார். டெல்லி டெஸ்ட்டின் இரண்டு இன்னிங்சிலுமாக பதினாறு விக்கெட்களையும், சென்னை, மற்றும் டெல்லி டெஸ்ட் மேட்ச்களில் மொத்தமாக இருபத்தியொரு விக்கெட்களையும் வீழ்த்தி இந்தியா வெற்றி பெற பெருந்துணை புரிந்திருக்கிறார் கும்ளே.

"இப்படியொரு சாதனை புரிவேன் என்று நான் கனவிலும் நினைத்துப் பார்த்ததில்லை. எனக்குக் கிடைத்துள்ள மாபெரும் கௌரவம் இது" என்று கூறும் கும்ளேவை டெல்லியிலிருந்து பெங்களூர் திரும்பி வந்த விமானம், ஆறு மணி நேரம் லேட். ஆனாலும் கூட, நூற்றுக் கணக்கான பேர்கள், பெங்களூர் விமான நிலையத்தில் வரவேற்கக் காத்திருந்தனர். ரசிகர்கள் பட்டாசு வெடித்துத் தங்கள் மகிழ்ச்சியை வெளிப்படுத்தினார்கள். நிருபர்களிடம் கும்ளே கூறினார்: "வரும் ஜூன் 22ம் தேதியும் இந்திய அணிக்கு இதே போன்ற வரவேற்பை நீங்கள் கொடுப்பீர்கள்; காரணம் மே-ஜூனில் நடக்கவிருக்கும் உலகக் கோப்பை ஒரு நாள் போட்டியில் இந்தியா கோப்பையை வெல்லும்!"

இந்தியக் கிரிக்கெட்டர்களே! ஆல் தி பெஸ்ட்!

— எஸ். சந்திரமௌலி

அட்டை வண்ணப் படங்களும் படமும் : சாரி

# வைர வைர ஐரோப்பா

ஜெயஸ்ரீ ராஜ்

கிட்டத்தட்ட மூன்று வாரங்கள் ஓடியதே தெரியவில்லை. மும்பையிலிருந்து புறப்பட்ட நாங்கள் நால்வர் மட்டும் மற்றவர்களுடன் திரும்புவதாயில்லை. பிஸினஸ் விஷயமாக நாங்கள் (நான்+ராஜ்) ஜெர்மனிக்கும், அவர்கள் (நண்பியும் அவள் கணவர் ராமச்சந்திரனும்) ப்ரான்சிலேயே பிரிதோரிடத்திற்குச் சென்று விட்டு, இரண்டு நாட்களில் ஃப்ராங்பர்ட்டில் சந்தித்து, சேர்ந்து மும்பை திரும்புவதாக ஏற்பாடு.

அன்று காலை மற்றவர்கள் 'பாக்'கிங்கில் பிஸியாக இருக்க, நாங்கள் பாரிஸின் தெருக்களில்

ஆனால் ஸேலில் நூறிலிருந்து ஐநூறு வரையிலான ஆடைகள் பலவற்றை நம் சின்னத் திரை நட்சத்திரங்கள் அணிந்து பார்த்ததாக நினைவு.

ஒரு சைனாக்காரி நடத்திய கடையில் ஸூட்கேஸ்களை வாங்கிக் கொண்டோம்; பலசரக்குக் கடையில் குங்குமப்பூ! காஸ்மெடிக்ஸ் கடைகளில்தான் திண்டாடி விட்டோம். ஒருவருக்காவது ஆங்கிலம் புரியவில்லை. விற்பனைப் பொருள்களில் எல்லாமே ஃப்ரெஞ்சில் எழுதியிருந்தன. ''கண்ணைச் சுற்றி கருவளையங்களைத் தவிர்க்க...''



• பாரீஸில் பழைய புத்தகக்கடை

நடந்து காற்று வாங்கினோம். கூட்டமில்லாத, சுத்தமான தெருக்கள். நடக்க நடக்கத்தான் ஒவ்வொரு கடையிலும் கிறிஸ்துமஸை முன்னிட்டு எக்கச் சக்கமாக ஸேல் போட்டிருந்தது தெரிந்தது. ஒரிஜினல் விலையில் மூவாயிரத்துக்குக் குறைவான ட்ரெஸ்களேயில்லை;

என்பதை நாம் ஞாயிறு நியூஸ் பார்த்த அனுபவத்தில் அபிநயிக்க, அந்தப் பெண் ''ஓ swollen eyes'' என்று அரைகுறை ஆங்கிலத்தில் கண்களால் திருதிருக்க... வெறுத்துப் போய் 'நிவியா' போன்ற தெரிந்த பிராண்டுகளைத் தேடிப் பிடித்தோம்! பெரிய டிபார்ட்மெண்ட் ஸ்டோர்களில் எஸ்கலேட்டரில் ஏறி இறங்கி, லிப்ஸ்டிக், நெயில் பாலிஷ் போன்ற... தெரிந்த விஷயங்களை வாங்கிக்



• பாரீஸில் எங்கும் அழகு மயம்தான்!

# பை-பை ஐரோப்பா!

## 19

கொண்டோம்.

ட்ரெயின் பயணத்தை ருசி பார்க்க எண்ணி, ஏதோ ஒரு 'பாஸை' வாங்கிக் கொண்டு பயணித்தோம். காலியான ரயில்கள்; சில இடங்களில் தமிழர்கள் ஏறினார்கள். பேச்சுக் கொடுத்தோம்.

"என் பெயர் ஸில்வன்..."

"ஓ செல்வனா..."

"இல்லை ஸில்வன்." ஸ்ரீலங்காவிலிருந்து வந்திருப்பவர்கள் ஏராளம். பாரீஸ் பிடித்திருக்கிறதா என்றால் "போரடிக்குதுங்க. வெதரே சரியில்லை" என அலுத்துக் கொண்டார் ஓர் இளைஞர்.

"இங்க ஆஃப்கானிஸ்தான்காரங்க இருப்பாங்க; அவங்க கிட்ட ஜாக்கிரதையா நடந்துக்குங்க..." என அட்வைஸ் கொடுத்தனர் சிலர்.

நாங்கள் அங்கு தங்கப் போவதாக நினைத்து உற்சாகமாகப் பேசினர் சிலர். "இங்கே திருப்புகழ் க்ளாஸ் கூட நடக்கும்" என்றார் ஒருவர். 'காரேடினார்ட்' என்ற பெயர்ப் பலகை கொண்ட இடத்தில் 'நல்லி சில்க்ஸ்' 'குமரன் சில்க்ஸ்' என்று தமிழ் போர்டுகளே இருந்தன. ஒரு தெரு முழுதும் தமிழர் கடைகள்.

**ம**தியத்துள் திரும்பி விட்டோம். எல்லோரும் பிரியா விடை பெற்றனர். அட்ரஸ் பறிமாற்றங்கள் நடந்தன. ஜப்பானியக் கிழவி மிக அன்பொழுக எங்களை ஜப்பானில் அவள் வீட்டிற்கு வந்து தங்கும்படி அழைத்தார்.

டூர் டைரக்டருக்கும் டிரைவருக்கும் ஒரு நாளைக்கு இரண்டு டாலர் (குறைந்த பட்சம்) என்ற விகிதத்தில் டிப்ஸ் கொடுக்க வேண்டும் என முன்பே காஸ்

மாஸ் அறிக்கைகள் தெரிவித்தன.

'காஸ்மாஸ்' டூரைப் பற்றிய எங்கள் கணிப்புகளைக் கேட்டு க்வெஸ்சினேர்' தந்திருந்தனர்.

நாங்கள் ஆண்ட்ரூஸுக்கும் மரியாவுக்கும் தனித் தனியாக கவர்களில் நன்றியறிதலையும் டிப்சையும் வைத்துக் கொடுத்தோம். ஆண்ட்ரூஸ் கை குலுக்கலுடன் வாங்கிக் கொண்டார். மரியாதான் எங்களிடம் வெகு நேரம் சிரித்துப் பேசி, வாழ்த்தி விடைபெறும் தருவாயில்.. முதலில் ராமச்சந்திரனை அணுகி, முகத்தருகே குனிந்து முத்தமிட்...

## நேரம்



ஒரு மொட்டு
மௌனமாய் இருப்பது
புரியவில்லை

ஒரு விதை
மண்ணில் இருந்து
முளைத்தெழ... இன்னும்
அடம்பிடிக்கிறது

கார்மேகம்
நீர்த்துளிகளைச்
சுமந்து கொண்டு
நெடு நேரமாய்...
மறந்து போனதா?

கட்டுக்குள் அடங்கி
கூட்டுக்குள் ஒரு புழு...
இத்தனை தாமதமா?

புரிகிறது...
ஒரு நேரத்திற்காகவே
அவை காத்திருக்கின்றன.
நாமும் நேரம் கனியக்
காத்திருப்போம் கண்ணே!

– கருமலைப் பழம் நீ

சட்... என்னவோ நினைத்துக் கொண்டு (வேறென்ன! நாங்கள் இந்தியர்கள் என்பது தான்). பின்வாங்கிக்... கையைக் குவித்து 'நமஸ்தே' என்றார், ஆண்கள் இருவரையும் நோக்கி. என்னையும் லலிதாவையும் கட்டித் தழுவி முத்தமிட்டார். (முகத்துக்கெட்டியது உதட்டுக்கெட்டாத கதையை நாங்கள் சொல்லிச் சொல்லி சிரித்தது வேறு கதை).

எல்லோரும் பஸ்ஸில் ஏறிக் கொண்டு கையசைக்கையில்... மனசு வேதனைப்பட்டதென்னவோ உண்மை!

அதன் பிறகு ஐரோப்பாவின் தூய்மை, அழகு, உயர் ரக வாழ்க்கை முதலியவற்றுடன் இந்தியாவை ஒப்பிடும் வழக்கமான பேச்சுகள்.

"அட... நெதர்லாண்ட்ஸ் மாதிரி ராத்திரி பத்து மணிக்கு மேல விமானம் பறக்கக் கூடாது, நாய்ஸ் பொல்யூஷன்னு, சட்டம் போட வேணாம்; அட்லீஸ்ட் லவுட்ஸ்பீக்கரை அலற வைக்கிறது, ஹார்ன் அடிக்கிறதையாவது குறைக்கலாமே?"

"எத்தனை அரசியல்வாதிங்க இங்கே வந்து போறாங்க? ஒத்தருக்காவது நம் நாட்டையும் இப்படி மாத்தணும்னு நினைக்கத் தோணாதா?"

"நம் நாட்டுல என்ன குறைச்சல்? இயற்கை வளம் இல்லையா? அறிவாளிகள் இல்லையா... அப்படியும் ஏன் பின் தங்கியிருக்கோம்?"

"இருக்கு... எல்லாமே அதிகமா இருக்கு; முக்கியமா ஜனத்தொகை ரொம்ப அதிகமா இருக்கு. அதனாலதான் நம்மால முன்னுக்கு வர முடியல்ல" என்பன போன்ற அங்கலாய்ப்புகளை முடிவில்லாமல் அரற்றியவாறே, நாங்களும் 'பாக்' செய்ய ஆரம்பித்தோம்.

அவரவர் வேலைகளை முடித்துக் கொண்டு, ஃப்ராங்க்பர்ட்டில் சந்தித்து, மும்பை திரும்புகையில்.. மரியா சொன்னதை அசைபோட்டோம்.

"ஒரு டூர் என்பது பூஃபே டின்னர் சாப்பிடுவது மாதிரி; எல்லாவற்றையும் 'ஜஸ்ட் டேஸ்ட்' பண்ணிப் பார்க்கலாம் முதலில்; எது பிடிக்கிறதோ அதை மட்டும் அடுத்த ரவுண்டில் நிதானமாக ருசித்து ரசிக்க வேண்டும்!"

உண்மைதான்; எனக்கு ருசித்தது ஸ்விட்ஜர்லாந்து; என் கணவருக்கோ ரோமாபுரி; இரண்டையும் ஆர அமரப் பார்த்துக் களிக்க வேண்டுமென்ற ஆவல் ஆழ் மனத்தில் ஒட்டியிருக்க –

மும்பை திரும்பியதும், 'டூர் எப்படி இருந்தது?' என்ற விசாரிப்புகளிடையே ஸான் ஃப்ரான்சிஸ்கோவிலிருந்து ஒரு கால்..

"ஹலோ... யுரோப் ட்ரிப்பெல்லாம் என்ஜாய் பண்ணினீங்களா? அட்லாண்டிக்கை க்ராஸ் பண்ணியாச்சு; அடுத்து பஸிபிக் தானே... அமெரிக்கா எப்போ வரப் போறீங்க?"

"அடுத்த ட்ரிப் அமெரிக்காதான்..."

ஆசை யாரை விட்டது?

(குட்-பை!)

— சொல்கிறார்,

**நா**ன் ஒரு திரைப் படப் பாடலாசிரியன் ஆவேன் என்று எண்ணிப் பார்த்ததில்லை. ஆனால், எல்லா இளைஞர்களையும் போல எனக்கும் பிளஸ் டூ முடித்ததும் சினிமா ஆசை வந்தது – பாடலாசிரிய னாகப் போவதற்கல்ல; எடிட்டிங் கற்றுக் கொள்ள! ஆசையோடு சரி. திரைப் படக் கல்லூரியில் இடம் கிடைக்காமல் பத்திரிகை யாளனாக மாறி, பிறகு தற்செயலாகப் பாடலாசிரியனாகவும் ஆகி, இன்று அதுவே தொழிலாகவும், வாழ்க்கையாகவும் ஆகிவிட்டது. எண்ணிப் பார்த்தால், ஒரு நேர்ப் பாதையிலிருந்து வேண்டுமென்றே விலகி, சுற்றுப் பாதையில் சற்று அலைந்து விட்டு மீண்டு வந்தாற்போல்தான் இருக்கிறது.

காரணம், கவிதை – பாடல் என்பது என் தந்தை மூலம் நான் பெற்ற சொத்து. பள்ளி நாட்களிலிருந்தே உணவுடன் கவிதையை உண்டு வளர்ந்தவன் நான்.

என் தந்தை சாமி. பழனியப்பன் ஒரு சிறந்த மரபுக் கவிஞர். பாரதிதாசனின் நேரடி மாணவர். 'பாரதிதாசன் பரம்பரை' என்று வந்த கவிஞர்களுள் மூன்றாவதாகவோ, நான்காவதாகவோ சொல்லப்பட்டவர். சுமார் இருபத்தைந் துக்கும் மேற்பட்ட நூல்கள் எழுதியவர். எனக்குக் கவிதை யின் மேல் காதல் பிறக்க அவர்தான் காரணம்.



எத்தனை புத்தகங்களை எனக்கு அறிமுகப்படுத்தியிருப்பார்! எத்தனை கவிஞர்களுடன் அவர் மூலமாகப் பரிச்சயம் ஏற்பட்டிருக்கிறது! எத்தனை எத்தனை கவியரங்கங்களுக்கு அவருடன் சென்றிருப்பேன்!

இப்போது எண்ணிப் பார்த்தால் சிரிப்புத்தான் வருகிறது. எட்டாம் வகுப்பு படிக்கிற வயதில் அவர் மூட்டிய கவிதை ஆர்வம் என்னுள் கனன்று எரிய, 'கவிதை எப்படி எழுதுவது?' என்று மாறாத குழந்தைத்தனத்துடன் அவரைக் கேள்விகளால் குடைந்திருக்கிறேன். சொல்லிக் கொடுத்து வருகிற விஷயமா அது?

ஆனால், என் தந்தை பொறுமையாக, திறமையாக என்னைக் கையாண்டிருகிறார் என்பது இப்போது புரிகிறது. குறிப்பிட்ட சில கவிதைத் தொகுதிகளைத் தேடித் தந்து படிக்கச் சொல்வார். ஆர்வமுடன் அவற்றைப் படித்துப் பார்ப்பேன். அத்தனையும் மரபுக் கவிதைகள். கடும் யாப்பும் சந்தமும் மிக்க அக்கவிதைகளில், யாப்பை உடைத்துக் கொண்டு அர்த்தம் தேடிச் செல்வதில் எனக்கு மிகுந்த சிரமம் உண்டாயிற்று.

கவிஞர் பொன்னடியான் நடத்திய கடற்கரைக் கவியரங்குகளுக்குப் போவேன். வேறு பல கவியரங்கங்களுக்கும் என் தந்தை அழைத்துச் செல்வார். அந்தக் கவியரங்கங்களில்தான் பல கவிஞர்களின் அறிமுகம் எனக்குக் கிடைத்தது.

யாப்புடன் மரபு மீறாத கவிதைகளை எதுகையுடன் படிப்பார்கள், அவர்கள். முற்றிலும் மாறுபட்ட விதமாக, யாப்பில்லாத புதுக் கவிதை படிப்பார் ஒரு கவிஞர்.

அத்தனை பேர் நடுவிலும் அவர் என்னை வசீகரித்தார். 'அட! இந்தக் கவிதை பிரமாதமாக இருக்கிறதே! அர்த்தமும் புரிகிறது; அழகாகவும் இருக்கிறதே! இது மாதிரி நாமும் முயன்று பார்க்கலாமே!' என்று நினைப்பேன்.

பதினான்கு வயதில் என்னை ஈர்த்த அந்தக் கவிஞர், வைரமுத்து. 'பழனியப்பன் மகன்' என்கிற தகுதியால் பல கவிஞர்களின் அன்பும் அரவணைப்பும் எனக்குத் தானாகவே கிடைத்தன – வைரமுத்து உட்பட.

ஏணிப்படிகள் படம் வெளியாகியிருந்த நேரம் அது. சினிமாப் பாடல்களை வெறுமனே முணுமுணுத்துக் கொண்டிராமல் வரிகளுக்கிடையில் புகுந்து அர்த்தத்தை ரசிக்கும் வழக்கம் உருவாகியிருந்தது எனக்கு. அந்தப் படத்தில் கண்ணதாசன் ஒரு பாடல் எழுதியிருந்தார்: 'கண்ணிழந்த பிள்ளைக்கு தெய்வம் தந்த தரிசனம்'.

முதலில் பாடலைக் கேட்டேன். பிறகு படத்தைப் பார்த்தேன். ஒரு முழுப் படத்தின் செய்தியை அந்த ஒரு பாடல் தாங்கி வந்த நேர்த்தியில் கிறுகிறுத்துப் போய் சிந்தை முழுவதும் கண்ணதாசனை நிரப்பிக் கொண்டேன்.

அப்பாவை நச்சரிக்க ஆரம்பித்தேன்: ''கண்ணதாசனைப் பார்க்கணும்!''

பார்க்கலாம், பார்க்கலாம் என்று சொல்லிக் கொண்டிருந்தவர், ஒருநாள் கவிஞரின் வீட்டுக்கு திடீரென்று அழைத்துப் போய் விட்டார்.

காலை நேரம். வெறும் பனியனும் வயிறு வரை புரளும் தங்கச் சங்கிலியும் பொட்டு வைத்த முகமும் புன்னகைத்த இதழ்களுமாக எங்களை வரவேற்றார், கவிஞர்.

என் தந்தை, என்னை அவருக்கு அறிமுகம் செய்து வைத்து, ''உங்க பரம ரசிகன்'' என்றார் சிரிப்புடன்.

ஒரு குழந்தையின் மகிழ்ச்சியுடன் புன்னகைத்து என்னை அருகே

அழைத்துத் தட்டிக் கொடுத்து விசாரித்தார். ஏணிப்படிகளில் நான் கேட்ட அவர் பாடலைக் குறிப்பிட்டு, அது என்னை பாதித்த விதத்தைச் சொன்னேன்.

பதினாலு வயதுதான் எனக்கு!

ஒரு சிறுவனின் பிரமிப்பு என்று ஒதுக்காமல் அதையும் உரிய முக்கியத்துவம் தந்து ஏற்ற அவரது பெருந்தன்மை என்னை வியப்பிலாழ்த்தியது. ஆட்டோகிராஃப் கேட்டேன். 'நீடு வாழ்க' என்று எழுதி, கையெழுத்திட்டுத் தந்தார்.

பிறகு கண்ணதாசன் கவிதைகளைத் தேடித் தேடிப் படிக்க ஆரம்பித்தேன்.

'அவனை எழுப்பாதிர், அப்படியே தூங்கட்டும்' என்கிற ஒரு கவிதை என்னை நிலைகுலையச் செய்தது. மரபுக் கவிதைதான். சந்தம் உள்ளதுதான். கருத்துச் செறிவும் மிக்கதுதான். ஆனால் மரபில் கூட இத்தனை எளிமையாகவும் கண்டி இழுக்கும் விதமாகவும் எழுத முடியுமா என்று திரும்பத் திரும்பப் படித்து வியந்தேன். நாமும் கவிதை எழுதிப் பார்க்கலாம் என்கிற எண்ணம் எழுந்தது. அப்போது தான். சில குழந்தைக் கவிதைகளுடன் என் கவிதை முயற்சி தொடங்கியது.



"நா எழுதி அனுப்பிச்ச ஜோக் காப்பினு ஆசிரியருக்கு தெரிஞ்சு போச்சு..."

"ஐயையோ... அப்புறம்?"

"ஏற்கெனவே ஜோக் பிரசுரமானப்ப போட்டிருந்த கார்ட்டூனை கத்திரிச்சு அனுப்பி வைக்க முடியுமான்னு கேட்டு லெட்டர் எழுதிருக்கார்!"

– அம்பை தேவா

பிளஸ் டூவின் போது நவீனத் தமிழ்க் கவிதைகளுடன் சரியான, நல்லதொரு அறிமுகம் எனக்கு முழுமையாகக் கிடைத்திருந்தது. வானம்பாடிக் கவிஞர்களான மேத்தா, அப்துல்ரகுமான், மீரா போன்றவர்களின் கவிதைகளுடன் நல்ல பரிச்சயம் ஏற்பட்டிருந்தது. மேத்தாவின் 'கண்ணீர்ப் பூக்கள்' தொகுதியில், 'செருப்புடன் ஒரு பேட்டி' என்கிற கவிதை மிகவும் பாதித்து, புதுக் கவிதையில் இன்னும் தீவிரமாகச் செயல்பட முடியும் என்கிற நம்பிக்கை பிறந்தது.

பதினெட்டு வயதில் முதல் கவிதைத் தொகுதி – நெருப்புப் பார்வை – வெளியிடும் துணிச்சலைப் பெற்றேன்.

அதற்கு, அற்புதமான ஒரு அணிந்துரையை வைரமுத்து வழங்கியிருந்தார் :

'நம்மூரில்
முதியவர்களெல்லாம்
குழந்தை போல்
எழுதிக் கொண்டிருக்கையில்
ஒரு குழந்தை
முதியவன் போல்
எழுதுகிறது' – என்கிற அவரது பாராட்டு வரிகள் எனக்கு மிகுந்த தன்னம்பிக்கையையும் உற்சாகத்தையும் அளித்தன.

இலக்கியம் அறிமுகமாகும் முன்பே இலக்கியவாதிகளின் அறிமுகம் என் தந்தையால் கிடைத்ததன் பயனை எண்ணிப் பூரிப்படைந்தேன்.

அப்போதுதான் சினிமா ஆசை வந்தது. சினிமாவில் ஏதாவது செய்ய வேண்டும். என்ன செய்யலாம்? பாடலாசிரியனாகலாம் என்று ஒருகணமும் தோன்றிய தில்லை. தொழில்நுட்பம் கற்றுக் கொள்ளலாம் என்று நினைத்து, எடிட்டிங்கைத் தேர்ந்தெடுத்து, திரைப்படக் கல்லூரிக்கு விண்ணப்பித்தேன். ஆனால், நேர்முகத் தேர்வில் நான் தேர்வாகவில்லை.

அடுத்தபடியாக நான் செய்யக்கூடியது இரண்டே காரியங்கள். ஒன்று, மேற்படிப்பைத் தொடருவது அல்லது, ஏதாவது வேலை தேடிக் கொள்வது.

பி.ஏ. தமிழ் சேரலாம் என்று நினைத்தேன். ஆனால் காலம் கடந்து, அட்மிஷன் எல்லா இடங்களிலும் முடிந்து விட்டது. தேவை – உடனடியாக ஒரு வேலை.

அப்போது எஸ்.டி. சோமசுந்தரம் (முன்னாள் அமைச்சர்) 'போர் வாள்' என்றொரு பத்திரிகையைத் தொடங்கியிருந்தார்.

என் தந்தைக்கும் அவருக்கும் பொதுவான நண்பரான நல்லரசு என்பவர் மூலம் எனக்குப் 'போர் வாளில்' வேலை கிடைத்தது. கவிதை எழுதத் தெரியும் என்பதுதான் எனக்கிருந்த தகுதி.

ஒரு பத்திரிகைக்குக் கவிதை எழுதத் தெரிந்தவன் மட்டும் போதாது அல்லவா?

நான் அங்கு சேர்ந்தபின் ப்ரூஃப் பார்ப்பது முதல் அனைத்துப் பணிகளையும் பழகிக் கொண்டேன்.

திருச்செந்தூர் இடைத் தேர்தல் நேரம். எம்.ஜி.ஆர். ஜெயித்துக் கொண்டிருந்தார். நிச்சயம் வெற்றி அவருக்குத்தான் என்பது உறுதியாகிவிட்ட சமயம்.

"எம்.ஜி.ஆரின் வெற்றியை வாழ்த்தி ஒரு கவிதை எழுது" என்று என்னிடம் சொன்னார்கள்.

தேர்தல் முடிவு வரத் தொடங்கிய போதே அலுவலகத்தில் அனைவர் முகமும் பிரகாசமடையத் தொடங்கியிருந்தது - என் ஒருவனைத் தவிர.

காரணம், அடிப்படையில் திராவிட முன்னேற்றக் கழகத்தின்பால் பற்றுமிக்கக் குடும்பத்தில் பிறந்து வளர்ந்தவன் நான். என் தந்தை, கலைஞரின் நீண்ட நாள் நண்பர். நானும் அவரது எழுத்தின் மேல் மரியாதை உள்ளவன்.

இது ஓர் அரசியல் நிகழ்வுதான் எனினும் அந்தச் சமயத்தில் ஏனோ, எம்.ஜி.ஆரை வாழ்த்திக் கவிதை எழுத என் மனம் சம்மதிக்கவில்லை. எழுதச் சொன்ன பிறகு எழுத முடியாது என்று ஒரு துணையாசிரியர் சொல்லக் கூடாதுதான். ஆனாலும் நான் சொன்னேன் : "இதற்கெதற்குக் கவிதை?" என்று.

அலுவலகத்தில் அனைவர் முகங்களிலும் நிழல் படிந்தது. யாரும் பிறகு பேசவில்லை. என்னைக் கவிதை எழுதச் சொல்லி, பிறகு வற்புறுத்தவும் இல்லை.

மறுநாள் அலுவலகத்துக்குப் போனபோது என்னை வேலையில் சேர்த்து விட்ட நல்லரசுவை போய்ப் பார்க்கச் சொன்னார்கள். போனேன்.

என் நலன் விரும்பியான அவர், நான் எப்படி எழுத மாட்டேன் என்று சொல்ல முடியும் எனக் கடிந்து கொண்டார். அவர் சொல்வதில் இருந்த நியாயம் எனக்குப் புரியாமல் இல்லை. ஆனாலும் என் மனத்துக்கு விரோதமான ஒரு காரியத்தைச் செய்ய நான் எப்போதும் தயாராக இருந்ததில்லை - அந்த வேலை எனக்கு இன்றியமையாத ஒன்றாக அப்போது இருந்தபோதிலும் கூட! 'போர் வாள்' பணியிலிருந்து உடனடியாக விலகினேன்.

தோதாக, எம்.ஜி.ஆருடன் கருத்து வேறுபாடு கொண்டு அப்போதுதான் விலகி வந்திருந்த அடியார், 'நீரோட்டம்' என்கிற பத்திரிகையைத் தொடங்கவே, நான் நீரோட்டத்தில் இணைந்தேன்.

அடியார் என்பால் கொண்டிருந்த அன்பும் நம்பிக்கையும் இவ்வளவு அவ்வளவல்ல! என் எழுத்தின் மீது உயர்ந்த அபிப்பிராயம் கொண்டிருந்த அவர், சில சமயங்களில் தமது பத்திரிகையின் தலையங்கங்களையே என்னை எழுதச் சொல்வார். சுதந்திரமாகவும் உற்சாகமாகவும் 'நீரோட்டத்'தில் எழுதி வந்தேன்.

ஆனால் அந்தப் பத்திரிகை நீண்ட நாள் செயல்பட முடியாமல் முடங்கி விடவே அந்த வேலையும் நிலைக்கவில்லை.

ஏதாவது ஒரு வேலை. அதுதான் எனது அத்தியாவசியத் தேவையாயிருந்தது. மூன்று அக்கா, ஒரு அண்ணனுக்குப் பிறகு ஐந்தாவதாகப் பிறந்தவன்தான் நான் (எனக்கு ஒரு தங்கையும் உண்டு) என்பதால் சம்பாதித்துக் குடும்பத்தைக் காப்பாற்றும் நிர்ப்பந்தம் ஒன்றுமில்லைதான். ஆனாலும் இடைவிடாமல் எனக்குள் ஓர் உறுத்தல் - (நாம் சும்மா இருக்கக் கூடாது என்று) இருந்து வந்தது.



"நீங்க எழுதின கதையைப் படிச்சுட்டு உங்க மனைவி திட்டினதா சொல்றீங்களே, நீங்க எழுதறது அவங்களுக்குப் பிடிக்கலையா?"
"ஹி... ஹி... தெரியாத்தனமா அவ எழுதின கதையையே காப்பியடிச்சுத் தொலைச்சுட்டேன்!"
- பா. ஜெயக்குமார்

தரமணியில் இருந்த தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவன கொடோனில் கணக்கெழுதும் உத்தியோகம் கிடைத்தது - இதுவும் என் தந்தை மூலமாகத்தான்.

ஆனால் சுமார் ஒரு மாதத்துக்கு மேல் அங்கும் தாக்குப்பிடிக்க முடியாத நிலை வந்து விட்டது. லாரிகளில் ஏற்றப்படும் சரக்கை எண்ணிக் கணக்கெழுதும் பணி என் இயல்புக்கு விரோதமாக இருந்தது. விலகி விட்டேன்.

இந்தச் சமயத்தில்தான், என் தந்தை ஒரு கூட்டத்தில் வலம்புரிஜானைச் சந்தித்த

போது என் கவிதைத் தொகுதி 'நெருப்புப் பார்வை'யை அவரிடம் தந்து படித்துப் பார்க்கச் சொன்னார்.

நான் எதிர்பாராத ஒரு சம்பவம் அப்போது நடந்தது. என் கவிதைகள் அவருக்கு மிகவும் பிடித்துப் போய்விட, மறு வாரமே 'தாய்' வார இதழில் என்னைப் பற்றியும் என் கவிதைகள் பற்றியும் பிரமாதமாகப் புகழ்ந்து எழுதி விட்டார், ஜான்.

நான் அவரைச் சென்று சந்தித்த போது, "என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" என்று விசாரித்தார்.

சொன்னேன்.

"கவிதை எழுதுபவன் கணக்கெழுதுவதா? தாயில் சேர்ந்து விடட்டும்" என்று என் தந்தையிடம் சொல்லி விட்டார்.

என்னிடம் அவர் கேட்ட ஒரே கேள்வி, "ஃப்ரூஃப் பார்க்கத் தெரியுமா?" என்பதுதான். நான் 'தெரியும்' என்று பதில் சொன்னதும் மறுநாளே என்னை வேலையில் சேரச் சொல்லி விட்டார்.

தாய் அலுவலகத்தில் ஒரே ஒரு வாரம்தான் நான் ப்ரூப் திருத்தும் வேலை பார்த்தேன். "போதும் நீ ப்ரூஃப் பார்த்தது; ரிப்போர்டிங் செய்" என்று



கொடுத்து விட்டார், ஆசிரியர்.

இலக்கியத்தின் மீதான என் பார்வை விசாலப்படத் தொடங்கியது அப்போதுதான். ஒரு நிருபராக நிறைய இலக்கியக் கூட்டங்களுக்குச் சென்று வந்து எழுதுவேன். சென்னையில் இலக்கியவாதிகளுக்கிடையே நடக்கும் எந்த ஒரு சர்ச்சையையும் 'தாயி'ல் பதிவுசெய்து விடுவேன்.

எக்கச்சக்கமாகப் படித்தேன். எந்த ஒரு புதிய புத்தகம் வெளியானாலும் அப்போது என் கவனத்துக்கு வராமல் போகாது. தாயில் புத்தக மதிப்புரைகளும் எழுதினேன். என்னை உரமேற்றிக் கொள்ள எல்லாவிதமான ஆயத்தங்களையும் அங்குதான் செய்து கொண்டேன். கூடவே கவிதையையும் விடாமல் எழுதி வந்து, 'வெளிநடப்பு' என்கிற இரண்டாவது தொகுதியையும் வெளியிட்டேன். பரவலான வாசகர்களை எனக்குப் பெற்றுத் தந்த தொகுதி அது!

சுமார் மூன்று, நான்கு வருடங்கள் - வலம்புரிஜான் ஆசிரியராக இருந்த வரை நானும் தாயில் பணியாற்றினேன். நிர்வாகத்துடன் ஏற்பட்ட பிணக்கால் அவர் அங்கிருந்து வெளியேறியபின் என்னால் தொடர்ந்து தாயில் இருக்க முடியவில்லை. நானும் வெளியேறி விட்டேன்.

தொடர்ந்து பத்திரிகையாளனாக நீடிப்பதா? கவிஞனாக மட்டுமே இருப்பதா என்று எனக்குள் நானே யுத்தம் செய்து கொண்டிருந்த காலம் இது. பத்திரிகைத் துறை எனக்குப் புதுப்புது அனுபவங்களையும் பல நண்பர்களையும் சம்பாதித்துத் தந்தது உண்மைதான். ஆனாலும், 'நானொரு கவிஞனல்லவா?' என்கிற எண்ணம்தான் மேலோங்கி நின்றது.

இந்த நேரத்தில் குமுதம் வார இதழின் ஒரு வார இதழை இயக்குநர் விக்கிரமன் பொறுப்பேற்றுச் செய்வதாக அறிவிப்பு வெளியானது. குமுதத்தில் ரிப்போர்டிங் செய்து கொண்டிருந்த என் நண்பன்; சந்தானம், விக்கிரமனுக்கு உதவியாக அந்த இதழ் தயாரிப்பில் ஈடுபட்டிருந்தார்.

தற்செயலாக, கவிதைகள் - பாடல்கள் பற்றிப் பேச்சு வந்தபோது, "என் நண்பன் பழனிபாரதி பிரமாதமாகப் பாடல் எழுதுவான் சார்!" என்று விக்கிரமனிடம் கூறியிருக்கிறார் சந்தானம்.

புது வசந்தத்தின் இமாலய வெற்றிக்குப் பிறகு அவர் 'பெரும் புள்ளி' ஆரம்பித்திருந்த

நேரம்.

"அழைத்து வாருங்களேன். நம் படத்தில ஒரு பாடல் எழுதச் சொல்லிப் பார்ப்போம்" என்று விக்கிரமன் சொல்லியிருக்கிறார்.

சந்தானம் என்னிடம் வந்து விஷயத்தைச் சொன்னபோது, "அதெல்லாம் வேண்டாம். சினிமாவெல்லாம் சரிப்படாது" என்றுதான் பதில் சொன்னேன்.

என் குடும்பத்தினர் கூட, "ஆமா. இவனுக்கு சில்வர் தட்டு, துண்டு கொடுத்தாத்தான் கவிதை வரும். சினிமாவுல பணம் குடுப்பாங்க இல்ல. அதெல்லாம் பழக்கமில்லை" என்று கிண்டல் செய்தார்கள்.

கவியரங்குகளுக்கு நான் அடிக்கடி சென்று கவி பாடுவதும் எவர்சில்வர் தட்டு - அன்பளிப்பாகப் பெற்று வருவதையும் தான் அவர்கள் அப்படிக் குறிப்பிட்டார்கள்.

சரி, போய்த்தான் பார்ப்போமே என்று சந்தானத்துடன் சென்று திரு. விக்கிரமனைச் சந்தித்தேன். ட்யூனை கேஸட்டில் வாங்கிக் கொண்டு வந்து கேட்டேன்.

'தனனா, தன்னா, தானா' என்பது போன்ற தத்த காரங்களுக்குச் சொற்கள் அமைக்கிற வித்தை எனக்குச் சுத்தமாக வரவில்லை. ஒருநாள் முழுவதும் அந்த ட்யூனைக் கேட்டுக் கேட்டுப் பார்த்தேன். ம்ஹூம்! ஒரு சொல் கூட எழுத வரவில்லை!

அலுப்பும் வியப்பும் ஒருங்கே தாக்க, மறுநாள் மணி என்கிற என் நண்பனை அழைத்தேன். அவர் சவுண்ட் ரிக்கார்டிஸ்டாக இருந்தவர். அவரிடம் ட்யூனைப் போட்டுக் காட்டி, "இதற்கு டம்மி சொற்கள் அமைத்துப் பாட"ச் சொன்னேன்.

அர்த்தமில்லாமல் வெறுமனே ட்யூனுக்குப் பொருந்தக் கூடிய தகுதி மட்டுமே கொண்ட ஒரு 'பாடலை' அவர் 'செய்து' தர, சட்டென்று மெட்டுக்குள் சொற்களைப் பொருத்தும் லாகவம் பிடிபட்டாற்போலிருந்தது.

உடனே தாளை எடுத்து விறுவிறுவென்று ஒரு பல்லவி எழுதினேன்.

'இளமையின் விழிகளில்
வளர்பிறைக் கனவுகள்
பௌர்ணமி ஆகிறதே
வனங்களின் கிளைகளில்
கிளிகளின் கரங்களில்
சூரியன் மலர்கிறதே!

எழுதியதை எடுத்துக் கொண்டு போய் விக்கிரமனிடம் தந்தேன். படித்துப் பார்த்தவர், துள்ளிக் குதிக்காத குறையாக, "பிரமாதம்! பிரமாதம்!" என்றார். தம் ஐந்து உதவியாளர்களையும் உடனே அழைத்து, அதனைப் படித்துக்காட்டி, "ரொம்பப் பிரமாதம் பாரதி! இந்தப் பாட்டை நீங்கதான் எழுதறீங்க! சரணம் ரெடி பண்ணுங்க!" என்று சொல்லி விட்டார்.

எனக்கு ஒன்றும் புரியவில்லை. நான் பாடலாசிரியன் ஆகிவிட்டேனா? உண்மையாகவா? நம்ப முடியவில்லை.

வீடு வந்து, அந்தப் பாடலின் சரணங்களுக்காக யோசிக்கத் தொடங்கினேன்.

ஆனால் இரண்டு மாதங்கள் யாரும்




என்னைத் தொடர்பு கொள்ளவே இல்லை. 'சரி; அவ்வளவுதான்' என்று நினைத்த வேளையில் திடீரென்று வந்து, 'நாளை ரெக்கார்டிங்' என்று சொல்லிவிட்டுப் போனார்கள்.

'முகவரி தேடும் வார்த்தை ஒன்று
இசைமடி தேடும் காலம் இன்று'

என்று அந்தப் பாடலில் நான் எழுதிய சரணம் ஒன்று, எனக்கே சொல்லிக் கொள்வது போலவும் தற்செயலாக அமைந்து விட்டது!

டைரக்டர் விக்கிரமனுக்கு என் பாடல் மிகவும் பிடித்துப் போனது. நா. காமராசன், புலமைப்பித்தனிடமெல்லாம் என் வரிகளைப் படித்துக் காட்டி, என்னைப் பாராட்டியபோது, அவரது பெருந்தன்மை என்னை வியக்கச் செய்தது.

ஆனால் படம் வெளியானபோது பாடல் அதில் இடம் பெறவில்லை. கேஸட்டில் பாடல் இருந்தது. திரையில் இல்லை. படமும் துரதிர்ஷ்டவசமாகத் தோற்றுப் போக, என் அறிமுகம் யாருக்கும் தெரியாமலே போனது!

ஆனால் இந்தப் பாடலைக் கேட்ட டைரக்டர் பொன்வண்ணன், தாம் எடுத்துக் கொண்டிருந்த 'அன்னை வயல்' படத்துக்கு என்னை ஒரு பாட்டெழுதச் சொன்னார். எழுதினேன். அந்தப் படமும் ஃபெயிலியர்!

தயாரிப்பாளர் தரப்பிலிருந்து நிர்ப்பந்தங்கள் இல்லாமல் இருந்திருந்தால் அந்தப் படம் இன்றளவும் பேசப்படும் படமாக வந்திருக்கும். அழுத்தமான கதையும் சிறந்த



"இன்றைய சிறுவர்கள் தான் நாளைய வாலிபர்கள்னு தலைவர் நல்லா புரிஞ்சுக் கிட்டார்னு நான் சொன்னது சரியாப் போச்சா!"

– அம்பை தேவா

பாடல்களும் நல்ல இசையும் கொண்டு உருவான படம் அது! ஆனால் விதி அந்தப் படத்தையும் தோற்கடித்தது.

விக்கிரமன் தனது மூன்றாவது படத்தைத் தொடங்கினார். 'நான் பேச நினைப்பதெல்லாம்.' என் திறமையை மதித்த அவர், இந்தப் படத்திலும் நான் பாட்டெழுத வாய்ப்புத் தந்தார். ஆனால் பணச் சிக்கல் காரணமாக, படம் வெளிவருவது தாமதமாகிக் கொண்டே இருந்தது.

ஆகவே, விக்கிரமன் குறுகிய காலத் தயாரிப்பாக 'கோகுலம்' படத்தைத் தொடங்கினார்.

முதல் முறையாக, எல்லா பாடல்களையும் என்னையே எழுதச் சொன்னது இந்தப் படத்தில்தான்.

பாடல்கள் சிறப்பாக அமைந்தன. படமும் சூப்பர் ஹிட்! ஆனால் டைட்டில் கார்டைப் படம் தொடங்கும் முன் போடாமல் படம் முடிந்தபின் rolling title ஆக ஓட விட்டதால் 'யார் பாடல்களை எழுதியது' என்பதைப் பார்க்காமலே மக்கள் சென்று விட்டார்கள்.

முன்பு டெக்ஸ்ட் புக் சொஸைட்டியில் என்னுடன் பணியாற்றிய சிநேகிதிகள் இருவர், என் பெயரைத் திரையில் பார்ப்பதற்காகவே உதயம் தியேட்டருக்கு வந்திருந்தனர்.

படம் முடிந்து டைட்டில் கார்டு ஓட ஆரம்பித்தது. ஆர்வமுடன் அவர்களுடன் நானும் காத்திருந்தேன். ஆனால், என் பெயர் வருவதற்கு முன்னதாகவே தியேட்டரில் ப்ரொஜக்டரை அணைத்து விட்டார்கள்!

முதல் இரு படங்கள் தோல்வி. நான் பாடல் எழுதிய மூன்றாவது படம் வெளிவந்திருக்கவே இல்லை. நான்காவது படம் – அத்தனை பாடல்களும் எழுதியவன் பெயர் மக்களுக்குத் தெரியாமலே போய் விட்டது.

நியாயமாக என் இடம் துடைத்துப் பெருக்கி அலம்பி விடப்பட்டிருக்க வேண்டும். பழனிபாரதி என்றொரு பாடலாசிரியன் வந்து போனான் என்பதே யாருக்கும் தெரியாமல் போயிருக்கும்.

அப்போதும் எனக்குக் கைகொடுத்துத் தூக்கிவிட்டது விக்கிரமன்தான். 'புதிய மன்னர்கள்' படம்; ஏ.ஆர். ரகுமான் இசை.

ரகுமான் என் பாடல்கள் இடம்பெற்ற முந்தைய படங்களின் கேஸட்டுகளைக் கொண்டு வரச் சொன்னார். கொண்டு போய்க் கொடுத்தேன்.

"ட்யூனுக்கு எழுதுவீர்களா?" என்று கேட்டார்.

"எழுதுவேன்" என்றேன் தயக்கமில்லாமல்.

ஆனால் முதலில் ட்யூன் இல்லாமல், என்னையேதான் எழுதி வரச் சொன்னார். அப்போது எழுதியதுதான் "வானில் ஏணி போட்டு- கட்டு, கொடி கட்டு" பாடல்.

இயக்குநருக்கும் ரகுமானுக்கும் அந்தப் பாடலில் இருந்த தன்னம்பிக்கை தொனிக்கும் வரிகள் பிடித்துப் போயின.

உடனே ரகுமான் வேறொரு ட்யூனைக் கொடுத்தார். அந்த ட்யூனுக்கு வேறொரு கவிஞர் முன்னதாகப் பாடல் எழுதித்

தந்திருந்தார். ஆனால் ரகுமானுக்கு அது அவ்வளவாகப் பிடிக்காமல், அதே ட்யூனுக்கு என்னை எழுதச் சொன்னார். எழுதினேன் : "எடுடா அந்தச் சூரிய மேளம்"

இந்தப் பாடலும் பிடித்துப் போக, இன்னொரு பாடலையும் எழுதச் சொன்னார்கள். எனக்கொரு அடையாளம் தேடித் தந்த 'நீ கட்டும் சேலை மடிப்புல நான் கசங்கிப் போனேனே' பிறந்தது.

மிகவும் எதிர்பார்க்கப்பட்ட அந்தப் படமும் துரதிர்ஷ்டவசமாகத் தோல்வி கண்டது.

நான் உடைந்து போனேன். நல்ல பாடல். நல்ல இசை. நல்ல இயக்குநர். நல்ல கதை. எனினும் தோல்வி என்பதுதான் திரையுலகின் புரியாத புதிர்.

கால் வைக்கும்போதெல்லாம் சறுக்கல் என்பது முதல் படத்திலிருந்தே என்னைத் தொடர்ந்து வந்தாலும் மனத்துக்குள் ஒரு சின்ன ஒளி நிரந்தரமாகச் சுடர்விட்டுக் கொண்டேதான் இருந்தது. திறமையைக் கொஞ்ச காலம் மறைக்கலாம். ஆனால் அழிக்க முடியாதல்லவா?

எங்கோ தூரத்தில் தமது இரண்டாவது பட டிஸ்கஷனில் அமர்ந்திருந்த டைரக்டர் சுந்தர். சி., என் புதிய மன்னர்கள் பாடல் கேஸட்டைக் கேட்டு விட்டு என்னைப் பற்றி விசாரித்திருக்கிறார். இருவரும் சந்தித்தபோது, " என் அடுத்த படத்துல நீங்க எழுதறீங்க" என்றார் நம்பிக்கை தரும் விதமாக.

ஆனால் அவரது இரண்டாவது படமான, 'முறை மாப்பிள்ளை'யில் கவிஞர் வாலிதான் பாடல் எழுத வேண்டும் என்பது தயாரிப்பாளரின் விருப்பமாக இருந்ததால், மூன்றாவது படமான 'உள்ளத்தை அள்ளித் தா'வை எனக்குக் கொடுத்தார்.

பெரிய வாய்ப்பு. சிறப்பாகச் செய்து, நிலைநிறுத்திக் கொள்ள வேண்டிய அவசியத்தை உணர்ந்தேன். பாடல் ஹிட் ஆக வேண்டும். கவிஞனாக நானும் அதில் தெரிய வேண்டும். அதே சமயம் சற்று வித்தியாசமான தோற்றம் காட்ட வேண்டும் என்று முடிவு செய்து, சில ஆங்கிலச் சொற்களைக் கலக்க முடிவு செய்தேன்.

டைரக்டர், படத்துக்கு அரேபிய இசையை உபயோகிக்க முடிவு செய்திருந்தார். 'அழகிய லைலா'வில் அநேக ஆங்கிலச் சொற்களைக் கலந்தேன். அதே சமயம், "அட்டா பூக்களின் மாநாடா? அழகுக்கு

இவன்தான் தாய்நாடா?" போன்ற பேசப் படும்விதமான வரிகளின் மூலம் என்னையும் நிலைநிறுத்திக் கொண்டேன்.

அந்தப் படம் சூப்பர் ஹிட் ஆனது. பாடல்களை ரசிகர்கள் அள்ளிக் கொண்டார்கள்.

உடனே விக்கிரமனின் 'பூவே உனக்காக'வில் முற்றிலும் கவித்துவத்துக்கு முக்கியத்துவம் தந்து அழகான பாடல்கள் எழுதினேன். பாமர ரஞ்சகமாகவும் எழுத முடியும்; சற்று உயர்தரமாகவும் செயல்பட முடியும் என்று இந்த இரு படங்களில் நிரூபித்தாலும், நான் ஆங்கிலச் சொற்கள் கலந்து

அடுத்த இதழில்...

# படகில் ஒரு பெண்!

சுபா எழுதும்

விறுவிறுப்பான மினி தொடர் ஆரம்பம்!

எழுதியதையே பெரும்பான்மையான இளம் இயக்குநர்கள் விரும்பினார்கள். அதையே அடுத்தடுத்து நானும் செய்யப் போக, குறுகிய காலத்தில் மீண்டும் சரிவடைய வேண்டியதாகி விட்டது!

அப்போதுதான் யோசித்தேன். சினிமாப் பாடல்களை 'ஹிட்'ஆக்கும் ரசிகர்கள் பண்டிதர்கள் அல்லர். அதிகம் ஆங்கிலம் படித்தவர்களும் அல்லர். சென்னைக்கு அப்பால் உள்ள ரசிகர்களுக்கு என் பாடல்களில் இடம்பெற்ற ஆங்கிலக் கலப்பு – புரிவதில் சிக்கல் தரவேதான் அடுத்தடுத்து பல தோல்விகளைச் சந்திக்க வேண்டியதானது. இதை உணர்ந்த விநாடியில் சட்டென்று நிறுத்தி விட்டேன். இனி வரும் பாடல்களை அழகிய தமிழில் மட்டுமே தருவது என்று முடிவு செய்தேன்.

சினிமா உலகம் விசித்திரங்கள் நிறைந்தது. நிலைத்திருப்பதற்காகச் சகலவித தந்திரோபாயங்களும் செய்கிற வித்தகர்கள் நிறைந்த உலகம் இது.

ஆனால், வாய்ப்புக் கேட்டு நேரில் கூடப் போகாத குணம் உள்ளவன் நான். நம் தொழில் எழுதுவது. எழுதுவதைச் சிறப்பாக எழுதுவது. நேரிடையான மொழி. அழகான சொற்கோவை. உடைத்த தேங்காய் போலப் புலப்படும் கருத்துகள். கொஞ்சம் இலக்கியத்தரம். நிறைவான இனிமை. தீர்ந்தது விஷயம்.

இதுவரை நான் பாடல் எழுதிய எந்தவொரு பட வாய்ப்பும் தானாக வந்ததேயன்றி, நான் தேடிப் போய்ப் பெற்றதல்ல. ரஜினி படத்துக்குப் பாடல் எழுதியதோ, காதலுக்கு மரியாதையில் விருது பெற்றதோ, தமிழக அரசு 'கலைமாமணி'யாக்கியதோ கூட அப்படித்தான்!

உழைக்க வேண்டும். திட்டமிட்ட உழைப்பு முக்கியம். அதைவிட முக்கியம் நாம் சார்ந்திருக்கும் துறையில் நமக்கு முன் சாதித்தவர்களை கூர்ந்து கவனிப்பது. 'படிப்பு' மிக முக்கியம் என்று நம்புபவன் நான். பாடலாசிரியர்கள் என்கிற வகையில் தமிழ் சினிமாவில் பாட்டெழுதிய அத்தனை பேர் எழுத்துக்களையும் படித்திருக்கிறேன். நவீன கவிதையில் பாரதி தொடங்கி, சுந்தர ராமசாமி, விக்கிரமாதித்யன், ஞானக்கூத்தன் தொடங்கி இன்றைய யுகபாரதி வரை படித்திருக்கிறேன்; படித்துக் கொண்டுமிருக்கிறேன்.

தொழிலில் வெற்றி என்பது நாம் அளிக்கும் உழைப்பைப் பொறுத்த விஷயம் என்று கருதுகிறேன்.

திரை இசை உலகில் வாலி, வைரமுத்து என்கிற இரு பெரும் சக்திகள் வாழும் காலத்தில் எறும்பு போல உள்ளே புகுந்தவன் நான். என் வாசிப்பே எனக்குத் தன்னம்பிக்கை தருகிறது. அதுவே சுவாசித்துக் கொண்டிருக்கவும் செய்கிறது. ●

சந்திப்பு : ஔரங்கசீப்
படங்கள் : ரவிசங்கரன்

அவுங்க
அப்பன்
குதிருக்குள்ளே
இல்லே....!

ஆமாம்
இல்லவே இல்லை...

தனிநீதி மன்ற
விசாரணைக்கு
முட்டுக்கட்டை
போடும்
அரசாணை




1999 பிப்ரவரி 21
வெகுதான்ய மாசி 9
மலர் : 57
இதழ் : 30

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.





## ஊழல் ஊக்குவிப்பு உத்தரவு!

**ஊ**ழல் தடுப்புச் சட்டம் என்பதாக ஒன்று நமது பாரத புண்ணிய பூமியின் சட்ட அமைப்பில் இருக்கிறது. இனி அதை ஊழல் ஊக்குவிப்புச் சட்டம் என்று பெயர் மாற்றம் செய்வது நல்லது! Prevention of Corruption Act அல்ல; Perpetuation of Corruption Act!

மேற்படி தடுப்புச் சட்டத்தின் 3(1), 4(2) பிரிவுகளின் கீழ்தான் மாண்புமிகு மத்திய அரசு நடவடிக்கை எடுத்திருக்கிறது. ஜெயலலிதா பேரிலான ஊழல் குற்றச்சாட்டுகளை விசாரிக்க தமிழக அரசு நிறுவிய தனி நீதிமன்றங்களுக்கு உரிமை இல்லை என்ற நிலையை திடீரென்று மேற்கொண்டதோடு அல்லாமல், அது குறித்து உச்சநீதி மன்றத்தில் வழக்கு நிலுவையில் இருப்பதையும் அலட்சியப்படுத்தி, ஓர் அநியாயமான ஆணையைப் பிறப்பித்திருக்கிறது மத்திய அரசு. அதன்படி, தனிநீதிமன்றங்களில் விசாரிக்கப்பட்டுவரும் வழக்குகள் இனி வழக்கமான நீதிமன்றங்களுக்கு மாற்றப்பட வேண்டும்!

இதன் மூலம் வழக்குகள் தாமதமாக வேண்டும்; ஜெயலலிதா மகிழ வேண்டும் என்பதையும் சேர்த்தே அந்த ஆணையில் எழுதியிருக்கலாம். அவ்வளவு பகிரங்கமான, முதுகெலும்பற்ற, மூன்றாந்தர சமரசம் அந்த ஆணை!

நீதித் துறையின் சுதந்தர இயக்கத்தையும் தார்மிக அரசியல் பண்புகளையும் பொது வாழ்க்கை நெறிகளையும் ஒருங்கே புறக்கணிக்கும் இந்த நடவடிக்கை, எல்லா தரப்பினரின் கண்டனத்தையும் பெற்றுள்ளதில் ஆச்சர்யம் என்ன? த.மா.கா., தி.மு.க., காங்கிரஸ், ம.தி.மு.க.,




கம்யூனிஸ்ட், ஜனதா தளம் என்று அனைவருமே இந்த ஆணை குறித்து அதிர்ச்சியும் வேதனையும் வெளியிட்டிருக்கிறார்கள். தனிநீதிமன்ற நீதிபதி ராதா கிருஷ்ணனோ, 'இந்த அரசாணையானது அது எழுதப்பட்டுள்ள காகிதத்தின் மதிப்புக்கூட பெறாது' என்று அதைப் புறந்தள்ளிவிட்டு விசாரணையைத் தொடர்ந்து வருகிறார்.

தனி நீதிமன்றங்கள் அமைக்கப்பட்டது சரியே என்று உயர்நீதி மன்றம் தீர்ப்பளித்துள்ளது. இதையடுத்துத் தொடரப்பட்ட மேல் முறையீட்டு வழக்கில் மன்றம் இன்னும் தீர்ப்பு அளிக்காவிட்டாலும், பதிவான வழக்குகளைத் தொடர்ந்து விசாரிக்கலாம் என்று அனுமதி தந்திருக்கிறது. எனவே ஜெவுக்கு எதிராகப் பதிவான வழக்குகள் அரசியல் காழ்ப்புணர்வால் எழுந்தவை அல்ல என்பதும் விசாரணையை நியாயப்படுத்தும் அளவுக்கு சாட்சியங்கள் இருக்கின்றன என்பதும் தெளிவாகிறது. வழக்குகளைத் தனி நீதிமன்றம் விசாரிக்க வேண்டுமா? அல்லது வழக்கமான நீதிமன்றம் விசாரிக்க வேண்டுமா என்பதை மட்டுமே இனி உச்சநீதி மன்றம் தெரிவிக்க வேண்டும்.

இந்தச் சூழ்நிலையில் அத்தியாவசியப் பொருட்களின் விலைவாசி உயர்த்தப்பட, அதைச் சாக்கிட்டு பி.ஜே.பியை மிரட்டுகிறார் ஜெயலலிதா. பி.ஜே.பி தலைமையும் நடுங்கிப் போய் ஜார்ஜ் பெர்னாண்டஸை போயஸ் தோட்டத்துக்குத் தூது அனுப்புகிறது. பதவியில் நீடிக்க வேண்டும் என்பதற்காக ஜெயலலிதாவின் மனங்குளிர மறுநாளே இந்த ஆணை பிறப்பிக்கப்படுகிறது!

ஜெயலலிதாவுக்காக பி.ஜே.பி. செய்து கொள்ளும் சமரசங்கள் கடந்த ஓராண்டாகவே சங்கிலி போல் தொடர்ந்து கொண்டிருக்கின்றன. ஆனால், இந்த சமரசம் மகா கேவலமான 'சரணாகதி'.

வேறு பல மாநிலங்களிலும் தனி நீதி மன்றங்கள் இயங்கிக் கொண்டிருக்கின்றன. ஆனால், மத்திய அரசின் இந்த ஆணை தமிழக தனி நீதிமன்றங்களுக்கு மட்டுமே!

ஊழல் குற்றம் சாட்டப்பட்டவர்களைச் சட்டத்தின் பிடியிலிருந்து காப்பாற்ற முயற்சி




செய்வது கூட முதன்மையான ஊழல் குற்றமே! அதுவும் பதவியில் நீடிக்க வேண்டும் என்பதற்காக அந்தக் குற்றத்தில் ஈடுபடுவது மன்னிக்க முடியாத பாதகம்.

ஜெயலலிதா தமது ஆதரவைத் திரும்பப் பெற்றால் பி.ஜே.பி. ஆட்சி கவிழக்கூடும்; நாட்டில் மீண்டுமொரு தேர்தல் வரக்கூடும்; செலவும் வேலைச் சுமையும் வருத்தக் கூடும்...

ஆனால் அவற்றின் ஊடே, அதர்மம் ஜெயிக்கவில்லை என்ற மகிழ்ச்சியும் திருப்தியும் பிறக்கும்.

தவிர, ஜெயலலிதாவும் அவர் தலைமையிலான அ.தி.மு.கவும் நம்பிக்கைக்குரிய அரசியல் கூட்டாளிகள் அல்ல என்பது அழுத்தமாக நிரூபிக்கப்படும்.

சந்தர்ப்பவாத வியூகங்களை நம்பிக் கொண்டிருக்காமல் சொந்தக் கால்களில் நின்று ஆட்சியைப் பிடிக்க வேண்டியதன் அவசியம் தேசிய கட்சிகளால் உணரப்படும். அவை அமைப்பு ரீதியாகவும் சித்தாந்த ரீதியாகவும் பாடுபட ஆரம்பிக்கும் ஒரு திருப்புமுனை கூட இந்திய அரசியலில் தோன்றலாம்.

ஆனால், இந்த நல்விளைவுகளை நாட்டுக்கு அளிப்பதில்லை என்று கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறார் பிரதமர்.

இன்று ஓர் அக்கிரமமான அரசாணை பிறப்பித்து ஊழல் வழக்குகளைத் தாமதப்படுத்தத் துணை நிற்பவர், நாளை ஊழலையும் லஞ்ச லாவண்யங்களையும் சட்டபூர்வமாக்க வேண்டும் என்று ஜெயலலிதா கட்டாயப்படுத்தினால் அதையும் செயல்படுத்துவாரா?

ஹிந்துத்வத்தின் மெய்யான விளக்கத்தைக் காற்றில் பறக்கவிட்டது போதாதென்று பி.ஜே.பி. அரசு ராமராஜ்யத்தின் தாத்பர்யத்தையும் குழி தோண்டிப் புதைத்து விட்டது.

ஒரிஸ்ஸா கொடுமைகளைத் தொடர்ந்து, உண்ணாவிரதமிருந்த பிரதமரைக் 'கடவுள்தான் மன்னிக்க வேண்டும்' என்று கேட்டுக் கொண்டோம்; இப்போது அவர் கூட மன்னிப்பாரா என்று சந்தேகிக்க வேண்டியிருக்கிறது. ○

# ஜெ. வெளியிடாத அறிக்கைகள்

**ஜெயலலிதா, கருணாநிதி அரசுக்கு எதிராக, தினசரி வெளியிட்டு வந்த அறிக்கைகள் குறைந்து, அகில இந்திய பிரச்னைகளில் கவனம் செலுத்தினார். இப்போதெல்லாம் அகில உலகப் பிரச்னைகளில் அதிக அக்கறை காட்டுகிறார் ஜெ. அவர் பார்வையில் சில நிகழ்ச்சிகள் படத் தவறி இருக்கலாம். பட்டிருந்தால் ஜெ.யின் அறிக்கைகள் இப்படி இருக்கலாம்...**

தேவஸ் நகரில் நடக்கும் அகில உலகப் பொருளாதார மாநாட்டுக்கு, முன்னாள் மத்திய அமைச்சர் ப. சிதம்பரம் போய், அங்கே பேட்டிகள் கொடுத்திருக்கிறார். யாரைக் கேட்டு அவர் தேவஸ் போனார்? நிதி அமைச்சராக இல்லாத நிலையில், பொருளாதார மாநாட்டுக்குப் போய் அவர் என்ன சாதித்து விட முடியும்? அரிசி, எண்ணெய், காஸ், உரம் எல்லாவற்றுக்கும் விலை ஏற்றிய மத்திய அரசைக் கண்டித்து ஒரு பேட்டி கூடத் தராத சிதம்பரத்துக்கு, தேவஸில் போய் கிறிஸ்தவர் மீது நடந்த தாக்குதல் பற்றிப் பேச என்ன தகுதி இருக்கிறது? மத்திய அமைச்சராக இருந்தபோது என்ன கிழித்தார் அவர்? குறைந்தபட்சம் வறுமைக்கோட்டையாவது புதிதாக அவர் கிழித்திருக்கிறாரா? நாங்கள் போட்ட அதட்டலையும், மிரட்டலையும் வேண்டுகோளாக மதித்து, பிரதமர் அரிசி, கோதுமை விலை உயர்வை, வறுமைக் கோட்டுக்குக் கீழே உள்ளவர்களுக்கு விலக்கிக் கொண்டிருக்கிறார். தேவகௌடா பிரதமராகவும், இவர் நிதி அமைச்சராகவும் இருந்த காலத்தில், இந்தியாவில் உள்ள அத்தனை பேரையும் வறுமைக் கோட்டுக்குக் கீழேயே அமுக்கி வைத்திருந்தால், இப்போதைய விலை ஏற்றம் யாரையும் பாதித்திருக்காது. இதை அப்போது செய்யத் தவறிய சிதம்பரம், தேவஸ் போக வேண்டிய அவசியம் என்ன என்று கேட்க விரும்புகிறேன்!

தோழமைக் கட்சிகளின் பொறுமையைச் சோதிக்கிற மாதிரி ஒவ்வொரு தடவையும் நடந்து கொள்ளும் மத்திய அமைச்சரவையில் உள்ளவர்கள் எல்லாரும், பிரதமர் வாஜ்பாய் சி.டி.பி.டி.யில் கையெழுத்துப் போட்டு விடாதபடி, அவர் வலது கையைப் பிடித்து வைத்துக் கொள்ள வேண்டும். செப்டம்பர் 99ல் சி.டி.பி.டி.யில் இந்தியா கை யெழுத்திட எதுவும் தடையாக இருக்காது என்று எந்த தைரியத்தில் சொல்லுகிறார் ஜஸ்வந்த் சிங்? ஒரு தடவையாவது அவர் போயஸ் தோட்டத்துக்கு வந்து, நாள் கணக்காகக் காத்திருந்து, என்னிடம் இதைத் தெரிவித்திருப்பாரா? அதை விட என்ன பெரிய வேலை அவருக்கு? நீட்டிய காகிதத்தில் எல்லாம் சுலபத்தில் கையழுத்துப் போடக் கூடாது. அப்புறம் யாருக்கும் நம் மீது மரியாதையோ, பயமோ இருக்காது. ஆட்டம் காட்டுதல், இழுத்தடித்தல் எல்லாம் அரசியல் பால பாடங்கள். இவை ஜஸ்வந்த் சிங்குக்குத்தான் தெரியவில்லை என்றால், வாஜ்பாயை போயஸ் தோட்டத்துக்கு அனுப்பி, கற்றுக் கொள்ளச் செய்ய வேண்டாமா?

செப்டம்பரில் வாஜ்பாய் சி.டி.பி.டி.யில் கையெழுத்துப் போடக் கூடாது. அப்படி அமெரிக்கா போனால், கூடவே தம்பிதுரையையும், கடம்பூர் ஜனார்த்தனத்தையும் அழைத்துக் கொண்டு போக வேண்டும். அப்போதுதான் அவர்கள் இரண்டு பேரும், வாஜ்பாய் கையெழுத்துப் போடுகிற சமயத்தில், ஓடிப் போய் ஆளுக்கொரு கையைப் பிடித்துக் கொண்டு, அவர் வலது கையாலேயோ, இடது கையாலேயோ கையெழுத்தே போட முடியாதபடி தடுப்பார்கள். வாஜ்பாய் காலால் கூட கையெழுத்துப் போட முயற்சி செய்யலாம். அதைத் தடுக்க கால் பிடித்துப் பழகிய கழகத் தொண்டர்களை அனுப்பி வைப்பேன். இந்த முயற்சியை பா.ம.க. தலைவர் டாக்டர் ராமதாஸ் ஆதரித்தால், அவரைப் பாராட்டுவேன். வைகோவுக்கும், வாழப்பாடிக்கும் சி.டி.பி.டி. என்றால் என்ன என்றே தெரியாது. ஏதோ டிரான்ஸ்போர்ட் பஸ் சர்வீஸ் என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள் அவர்



கள்! அவர்களுக்கு மக்கள் பாடம் புகட்டுவார்கள்.

இரண்டாயிரம் மெகாவாட் மின்சாரம் தருகிறோம் என்று இஸ்லாமாபாதில், பாகிஸ்தான் மின்சாரத் துறைச் செயலர் ஷஹீத் ஹுசைன் நவம்பர் 98ல் உறுதி அளித்தார். இப்போது 300 மெகாவாட்தான் தருவேன் என்கிறார்! மத்திய மின்சார அமைச்சர் ரங்கராஜன் குமாரமங்கலம் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருக்கிறார் போலிருக்கிறது. கேட்டால், குறட்டையிலிருந்து மின்சாரம் தயாரிக்க முடியுமா என்று யோசித்துக் கொண்டிருக்கிறோம் என்பார்! இவரைத் தெரியாதா நமக்கு? லாகூரிலிருந்து மின்சாரத்தை தில்லிக்கு நேரடியாக அனுப்புவதற்குப் பதிலாக, சென்னைக்கு அனுப்ப பாகிஸ்தான் ஒப்புக் கொள்ள வேண்டும். அப்படிச் செய்ய வேண்டியது ரங்கராஜன் குமாரமங்கலத்தின் பொறுப்பு. இதை அவர் தட்டிக் கழித்தால், அவர் இலாகாவைப் பறித்து, தம்பிதுரைக்குக் கொடுக்க வேண்டியது பிரதமரின் கடமை.

நியூசிலாந்து அரசு, உத்தரப் பிரதேசத்தில் பணியாற்றும் சப் இன்ஸ்பெக்டர் ராகவேந்திர சிங்கை கௌரவிக்கப் போகிறதாம்! இப்படி ஒரு வேடிக்கை உலகத்தில் எங்கேயும் நடக்காது. கேவலம், ஒரு நியூசிலாந்து டூரிஸ்ட் இங்கே கொலை செய்யப்பட்டதை இவர் துப்பறிந்து கண்டு பிடித்தாராம். அதற்காகப் பாராட்டாம்! நான் ஆட்சி நடத்தியபோது, ஒரு டி.ஜி.பி. எனக்கும், என் தோழிக்கும் கல்யாண ஊர்வலத்துக்காக கூடவே வந்தார். அவருக்கு என்ன பாராட்டுக் கொடுத்தது நியூசிலாந்து அரசு என்று கேட்க விரும்புகிறேன். ஒரு ரௌடி கும்பலே ஒரு பெரிய ஓட்டலை அடித்து நொறுக்கிய போது, அவர்களைக் கண்டு பிடிக்கவே முடியாத போலீஸ்காரர்கள் நிறையப் பேர் என் ஆட்சியின் போது இருந்தார்கள். அவர்களுக்கு என்ன பாராட்டு இந்த நியூசிலாந்து அரசு கொடுத்தது என்று அறிய விரும்புகிறேன். ஒரு மத்திய அமைச்சரை திருச்சி போகிற வழியில் கல் எறிந்து தாக்கிய எங்கள் கட்சிக்காரர்களை, கையைக் கட்டிக் கொண்டு வேடிக்கை பார்த்தார்கள் எங்கள் போலீஸ்காரர்கள். அவர்களுக்கு என்ன பாராட்டு நடத்தியது நியூசிலாந்து அரசு என்று கேட்க விரும்புகிறேன்!

கற்பனை : **சாருகேசி**




டுள்ளது. எந்த அரசியல் கட்சியும் எங்களை கைதூக்கி விட முன்வரவில்லை. மாறாக, தேவைப்படும் நேரங்களில் எங்களைப் பயன்படுத்திக் கொண்டு, பிறகு தூக்கி எறிந்து விடுகிறார்கள். எனவேதான் எங்களுக்கென்று ஓர் அரசியல் அடையாளத்தை ஏற்படுத்திக் கொள்ள நேரிட்டது.

கே : ஏற்கெனவே எத்தனையோ ஆட்சிகளிலும், (இப்போதைய ஆட்சியிலும்கூட) தேவர் சமூகப் பிரமுகர்கள் முக்கியமான பொறுப்புகளில் இடம்பெற்றே வருகிறார்கள். அவர்கள் சாதிக்காத எதை நீங்கள் சாதிக்கப் போகிறீர்கள்?

ப : எங்கள் சமூகப் போர்வையில் ஏற்கெனவே இருந்தவர்களும்

# "எல்லோருக்குமே நாங்கள் எதிர்க்கட்சிதான்!"

மத அமைப்புகளும், ஜாதி அமைப்புகளும் அரசியல் கட்சியாக உருவெடுக்கிற சீஸன் இது. அந்த வரிசையில் அகில இந்திய தேவர் பேரவையின் நிறுவனர் டாக்டர் என். சேதுராமன் மூவேந்தர் முன்னேற்றக் கழகம் என்ற கட்சியை தோற்றுவித்துள்ளார். சமீபத்தில் தமிழக முதல்வர் மீது வழக்குத் தொடர அனுமதி கேட்டு, கவர்னர் மாளிகை நோக்கி பேரணி புறப்பட்டு, கைதாகி, தென்மாவட்ட பஸ் சேதங்களுக்குக் காரணமானவர். முதன்முறையாக 'ஜெயில்' பார்த்த உற்சாகத்திலிருந்த டாக்டர் சேதுராமனை அவரது மருத்துவமனையில் சந்தித்தோம்.

**கேள்வி** : இருக்கிற அரசியல்கட்சிகள் போதாதா? புதிதாக இன்னொரு கட்சி எதற்காக?

**பதில்** : தென் மாவட்டங்களில் பலம் பொருந்திய சமூகமாயிருந்தும், பல்லாண்டுகளாக எங்கள் முக்குலத்தோர் சமூகம் பின்தங்கிய நிலையிலேயே வைக்கப்பட்

சரி, இப்போது இருப்பவர்களும் சரி, எங்கள் சமூகத்திற்காக எதையுமே செய்யவில்லை என்பதே உண்மை! எங்கள் சமூகத்திற்கு தீங்கு நேர்ந்த போது கூட குரல் தந்ததில்லை. முக்குலத்தோர் பிரதிநிதி என்று அமைச்சர் பதவிக்கு ஆள் போடும் போதே, அச்சமூகத்தின் மீது அதிக அக்கறையில்லாத, கட்சித் தலைமைக்கு ஜால்ரா போடக்கூடிய நபரைத்தான் தேடித் தேடி நியமிக்கிறார்கள். தமது சமூகப் பிரதிநிதியாக அமைச்சர் பொறுப்பை ஏற்பவர்களும், பதவியைக் காப்பாற்றிக் கொள்ள கட்சித் தலைமைக்கு கட்டுப்பட்டே நடப்போம் என்று சமூகத்தைக் கைகழுவி விடுகிறார்கள். எனவேதான் யாரையும் நம்பாமல் நாங்களே களமிறங்க வேண்டியதாயிற்று.

கே : உங்கள் கட்சி தி.மு.க.வுக்கு எதிரான கட்சிதானே?

ப : தி.மு.க.வுக்கு மட்டுமல்ல; எங்கள் மக்களுக்கென எதுவும் செய்யாமல், எங்களுக்கு எதிராக நடைபோடும் எல்லாக் கட்சிகளுக்குமே நாங்கள் எதிர்க்கட்சிதான். அ.இ.அ.தி.மு.க.வும் அதில் அடங்கும்.

கே : இப்படி தடாலடியாக எல்லா கட்சிகளையும் எதிர்க்கட்சியாக அறிவித்து விட்டால், நாளை தேர்தலின்போது

கூட்டணி அமைப்பதில் பிரச்னை வராதா?

ப : அதற்குத்தான் நம் அரசியல் முன்னோடிகள் வழிகாட்டி விட்டுப் போயிருக்கிறார்களே... 'அரசியலில் நிரந்தர நண்பனுமில்லை; நிரந்தர எதிரியுமில்லை' என்று! (சிரிக்கிறார்.) கூட்டணியை நாங்கள் தேடிப் போகப் போவதில்லை. எங்கள் சமூகத்தினரின் வாக்குகளைப் பெற்றே, எங்கள் கட்சிக்குத் தேர்தல் கமிஷனின் அங்கீகாரத்தைப் பெற்று விட முடியும். தவிர, அரசியல் கட்சி என்று ஆன பின்பு பிற சமுதாயங்களையும் எங்களோடு இணைத்துக் கொண்டு எல்லோருக்காகவும் பாடுபட முன்வந்து விடுவோம். முத்தரையர், நாயுடு, யாதவர் போன்ற ஜாதி அமைப்புகளும் அரசியல் கட்சியாக உருப்பெற நடவடிக்கைகள் எடுத்து வருகின்றன. நாங்கள் இணைந்து செயல்பட்டாலே போதும். தி.மு.க., அ.இ.அ.தி.மு.க.வுக்கு ஆபத்துதான். ஜாதியைக் குறிப்பிட்டு ஏமாற்றும் அரசியல் கட்சிகளை விட ஜாதிரீதியான கூட்டணிக் கட்சிகளையே மக்கள் தேர்வு செய்வார்கள்.

கே : உங்கள் சமூகத்திலேயே சண்முகையா பாண்டியன், மலைச்சாமி, சீனிச்சாமி தேவர் என்று பலர் பல திசைகளில் நடைபோடும்போது, பல ஜாதிகளை ஒன்றிணைப்பது சாத்தியம்தானா?

ப : சண்முகையா பாண்டியன், மலைச்சாமி, நாங்கள் எல்லோருமே தனித்தனியே நடைபோடுகிறோமே தவிர, ஒரே திசையில்தான் நடைபோடுகிறோம். எனவே இணைந்து செயல்படுவதில் பெரிய பிரச்னை இருக்காது. செயல்பட்டுக் காட்டுவோம்.

கே : பிப்ரவரி 4-ம் தேதி மதுரை வந்த முதல்வருக்கு கறுப்புக் கொடி எதிர்ப்பு என முதலில் அறிவித்தீர்கள்; பிறகு திடீரென வாபஸ் பெற்றீர்கள். பின்னணிதான் என்ன?

ப : முதல்வர் மீது எங்கள் கோபத்தைக் காட்ட கறுப்புக் கொடி காட்ட முடிவெடுத்தோம். பிறகு அன்றைய தினம் அய்யணன் அம்பலம் மணிமண்டப திறப்பு விழா இருந்ததால், அதற்கு இடையூறு வந்து விடக்கூடாது என்று வாபஸ் பெற்றோம். மற்றபடி இன்னமும் மானசீகமாக கறுப்புக் கொடியை வீசிக்கொண்டுதான் இருக்கிறோம்.

சந்திப்பு மற்றும்
படம் : **கிரண்நியூஸ்**





**தமிழ் இணையக் (இன்டர்நெட்) கருத்தரங்க மாநாடு முடிந்தவுடன், வோர்ல்டு டெல் நிறுவனத்தின் தலைவரான சாம்பிட்ரோடாவைச் சந்தித்து சில விளக்கங்களைக் கேட்டோம்...**



**● இது போன்ற கருத்தரங்குகளால், தமிழ் மொழி, இணையத்திலும் பரவுகிறது என்பதைத் தவிர, பொருளாதாரக் கோணத்தில் குறிப்பிடத்தக்க பயன் இருக்கும் என்று நினைக்கிறீர்களா?**

●● தகவல் தொடர்புப் புரட்சி என்பது பல திசைகளிலும் வேகமாக ஊடுருவிச் செல்லவேண்டும். ஆங்கிலத்தை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு இன்டர்நெட்டை ஓரளவுக்கு மேல் விரிவுபடுத்த முடியாது. உள்ளூர் மொழிகளின் உதவி கட்டாயம் தேவை. கனமான, பயனுள்ள விஷயங்கள் பொதுமக்களிடையே பரவலாக அடைய வேண்டுமென்றால், அதற்குத் தாய் மொழிதான் அதிகம் உதவும். தவிர, இணையத்துக்காக இப்போது அளிக்க வேண்டிய கட்டணம் கொஞ்சம் அதிகம் தான். தமிழ் போன்ற மாநில மொழிகளுக்கும் இதில் இடம் கிடைத்தால் நாளடைவில் அந்தக் கட்டணம் குறையும்.

**● இந்தியாவைப் பொருத்தவரை சமூக இணைய மையங்களை முதலில் தமிழகத்தில்தான் நிறுவ இருக்கிறீர்கள். இதற்கு ஏதாவது தனிப்பட்ட காரணம் உண்டா?**

●● தமிழக மக்களிடையே இன்டர்நெட் பயிலும் ஆர்வம் அதிகமாக இருப்பதும் தகவல் தொழில் நுட்பத்தை ஏற்றுக் கொள்வதில் தமிழக மக்களுக்கும், தமிழக அரசுக்கும் உள்ள அதிக ஈடுபாடும்தான் முக்கிய காரணங்கள். இதன் காரணமாகத் தான் பத்துக்கோடி அமெரிக்க டாலர் முதலீட்டில் தமிழகத்தில் சமூக இணைய மையங்களை அமைக்க இருக்கிறோம்.

**● நீங்கள் பேசும்போது "இந்தியாவின் ஆறு மாநில முதல்வர்கள் தமிழகத்தை முதலில் தேர்ந்தெடுத்ததற்காக ஆதங்கப்பட்டதாகக் குறிப்பிட்டீர்கள். வேறு மாநிலங்களும் அவரவர் மாநில மொழி தொடர்பாக உங்கள் நிறுவனத்துடன் ஒப்பந்தம் செய்து கொள்ள முயற்சிக்கிறார்களா?**

●● ஆம். குஜராத், மேற்கு வங்காளம், கர்னாடகா, கேரளா ஆகிய மாநில அரசுகள் எங்களுடன் ஒப்பந்தம் செய்து கொள்ளத் தீவிரமாக முயன்று வருகின்றன. பேச்சு வார்த்தைகள் நடக்கின்றன.

**● இந்தக் கருத்தரங்கில் தமிழ்நாடு முழுவதுமாக 1500 சமூக இன்டர்நெட் மையங்கள் அமைக்க இருப்பதாக அறிவிக்கப்பட்டது. இவற்றில் கிராமங்களின்**

எண்ணிக்கையும் கணிசமாக இருக்கும் என்றார்கள். பொருளாதாரக் கோணத்தில் இது புத்திசாலித்தனமாக இருக்குமா? அல்லது தொலைநோக்குப் பார்வையில் யோசித்து, இப்போதைக்கு லாப நோக்கு என்பது இரண்டாம் பட்சம்தான் என்று செயல்படப் போகிறீர்களா?

●● இது சம்பந்தமான திட்ட அறிக்கையை தமிழக முதல்வரிடம் வழங்கப்போகிறேன். இந்த மையங்கள் ஒன்றிலிருந்து மூன்று ஆண்டுக்குள் அமைக்கப்படும். எங்கள் நிறுவனத்தின் இயக்குனர்கள் விரைவில் லண்டனில் கூடி இது குறித்து முடிவெடுப்பார்கள். நிச்சயம் பொருளாதாரக் கண்ணோட்டத்தில்தான் - லாப நோக்கில்தான் செயல்படுத்துவோம்.

# தகவல் தொடர்பு என்பது புயல் வேகத்தில் பரவ வேண்டும்!

● இவ்வளவு மையங்களை இந்தியா முழுவதும் நிறுவி விட்டால் ஏதோ தகவல் தொடர்பு என்ற பெயரில் இயந்திரங்களுக்கு மேலும் அடிமைப் பட்டுப் போகிறோம் என்கிற கருத்தும் சிலரிடம் இருக்கிறதே?

●● நீங்கள் வேறு! இந்தியாவில் தகவல் தொடர்பு என்பது இன்னும் புயல் வேகத்தில் நடக்கவேண்டும். ஒரு அமெரிக்கப் பல்கலைக் கழகத்துக்கு இன்டர்நெட் மூலம் இங்கிருந்தே விண்ணப்பிக்கும் வசதி நமக்கு இருக்கிறது: ஆனால் ஓர் இந்தியப் பல்கலைக்கழகத்துக்கு இதே முறையில் விண்ணப்பிக்க முடியாது என்கிற விந்தையான நிலை! இதெல்லாம் மாறித்தான் தீர வேண்டும்.

● தமிழில் மென்பொருள் தயாரிக்கவோ, இந்த இணையம் தொடர்பாக முன்வரும் தொழில் முதலீட்டாளர்களுக்கோ நிதி உதவி செய்ய உங்கள் நிறுவனம் முன் வருமா?

●● இல்லை. தவிர தமிழகத்தில் அமைக்க விருக்கும் மையங்கள் தொடர்பான திட்டத்தில் பெரும்பான்மையான பங்குகள் வோர்ல்ட் டெல்லுக்கு சொந்தமாகவே இருக்கும். தமிழக அரசுக்கும் ஓரளவு பங்கு இருக்கும். அரசிடம் எந்தவித தள்ளுபடியோ, மானியமோ நாங்கள் கேட்கப் போவதில்லை. ஏனென்றால் எங்களைப் பொருத்த வரை முழுக்க முழுக்க இது ஒரு வியாபாரத் திட்டம்தான்.

● உங்களுக்கென்று சென்னையில் ஒரு அலுவலகக் கிளைகூட இல்லையே? இன்டர்நெட் மூலமாகத் தொடர்பு கொண்டால் போது மென்ற எண்ணமா?

●● அப்படி இல்லை. இன்னும் இரண்டு மாதங்களில் சென்னையில் எங்கள் அலுவலகத்தைத் திறந்து விடுவோம். இது தொடர்பாகவும் சமூக மையங்களை நிறுவுவது தொடர்பாகவும் சென்னை ஐ.ஐ.டி.யிலுள்ள சில பேராசிரியர்களுடன் தீவிர ஆலோசனை நடத்தினேன். பணப் பற்றாக்குறை என்பதைவிட நம் பார்வை விசாலமானதாகவும் தொலைநோக்கு கொண்டதாகவும் இருக்க வேண்டும் என்பதுதான் முக்கியம். ஒரு காசோலையைப் பணமாக்க ஒரு வாரமாகிறது என்பதெல்லாம் இங்குதான் நடக்கிறது! முப்பது மைக்ரோ செகண்டுகளில் இது முடிந்துவிட வேண்டாமா? இந்த உணர்வு, தமிழ் மூலமாகவும் தொடர்பு கொள்ளக் கூடிய இணையங்களைச் சீரமைப்பதன் மூலமும் மேலும் கூர் தீட்டப்படும் என்று நம்புகிறேன்.

பேட்டி: **ஜி.எஸ்.எஸ்.**

— சிவசக்தி பாண்டியன்

காதலால்

"தொடர்ந்து காதலை மையமாக வைத்தே படம் எடுக்கிறீர்களே? ஏதாவது காரணம் உண்டா?"

"காதல் படமாவே தொடர்ந்து எடுக்கணும்னு நான் நினைக்கலை. 'காதல் கோட்டை' படத்தோட வெற்றிக்குப் பின்னால, தமிழ் சினிமா டிரெண்டு ஒரு மாதிரி மாற ஆரம்பிச்சுது. நானும் கிரியேட்டிவா என்ன பண்ணலாம்னு யோசிச்சேன். அந்தக் காலத்திலே ஸ்ரீதர் சார் பண்ணின மாதிரி காதல்ல வித்தியாசமா என்னென்ன பண்ணலாம்னு யோசிச்சேன். சினிஃபீல்டுல புதுசா வர்ற டைரக்டர்களோட டிஸ்கஸ் பண்ணினேன். காதலால, சாதிப் பிரச்னை, மதப் பிரச்னை, வன்முறை, வரதட்சணைக் கொடுமை இதுக்கெல்லாம் தீர்வு சொல்ல முடியும்னு தோணிச்சு. அதுனாலதான் காதல் சப்ஜெக்டை கையில எடுத்துக்கிட்டேன்."

"புதிதாக நுழையும் இளம் இயக்குனர்களை வைத்துப் படம் எடுக்கறீர்களே; இதில் 'ரிஸ்க்' அதிகம் இருப்பதாகத் தோன்றவில்லையா?"

"பொதுவா படம் எடுக்கறதே ரிஸ்க்கான சமாசாரம்தான். ஃபிலிம் இண்டஸ்ட்ரில சிந்தனை புதுசா இருக்கணும். புதுசா வர்ற இளம் டைரக்டர்கள்கிட்டதான் புதுசு புதுசா ஐடியா இருக்கும். அதுல ஒரிஜினாலிட்டியை இழக்காத டைரக்டர்கள் ஜெயிச்சிடறாங்க. இதுக்கு என்னால ரெண்டு உதாரணம் சொல்ல முடியும். பிரவீண் காந்தினு ஒரு டைரக்டர். அவர்கிட்ட நல்ல நல்ல கதையெல்லாம் இருக்கு. அவர் அதையெல்லாம் விட்டுட்டு, தயாரிப்பாளர் குஞ்சுமோன் கேட்டார்னு தம்முடைய ஒரிஜினாலிட்டியை விட்டுட்டு அவருக்காகக் கதை சொல்லி 'ரட்சகன்' படம் எடுத்தார். படம் ஓடலை. 'சசி'னு ஒரு டைரக்டர். தம்மோட ஒரிஜினாலிட்டியை விட்டுக் கொடுக்காம 'சொல்லாமலே' படம் பண்ணினார். படம் ஹிட்டாயிருக்கு. இப்போ ஜெயிச்சுட்டார். அதுனால, இளம் இயக்குனர்களோட ஒரிஜினாலிடியைப் புரிஞ்சுக்கிட்டு அதுக்கேத்த மாதிரி படம் பண்ணினா ரிஸ்க் கம்மிதான்."

"உங்கள் படம் வெற்றி பெறுவதற்கு என்ன காரணம் என்று நினைக்கிறீர்கள்?"

"சினிமா துறைல கிட்டத்தட்ட இருபது வருஷமா இருக்கேன். முதல்ல ஃபிலிம் மீடியேட்டராத்தான் உள்ளே நுழைந்தேன். அப்புறம் விநியோகஸ்தரா இருந்தேன். அதுக்கப்புறம் தியேட்டர் ஓனர். இப்பதான் தயாரிப்பாளர். இது வரைக்கும் நான் பார்த்த, அனுபவிச்ச அனுபவங்கள்லாம் எனக்குக் கை கொடுக்குது. அது மட்டுமில்லாம எடிட்டர் பி. லெனின் எனக்கு பக்க பலமா இருக்கிறார். அவர் எடிட்டர் மட்டுமில்லே. டைரக்டர், நடிகர், தயாரிப்பாளர்னு பல்வேறு பரிமாணங்கள் அவர்கிட்ட இருக்கு. என் படங்கள் வெற்றி பெறுவதற்கு உறுதுணையா இருந்த இன்னொருத்தர் 'ஒளி ஓவியர்' தங்கர் பச்சான்."

"தமிழ் சினிமாவில் 'ஒளிப்பதிவு' என்றுதான் டைட்டிலில் காண்பிப்பார்கள். உங்கள் 'காதல் கோட்டை' படத்தில்தான் 'ஒளி ஓவியம் - தங்கர் பச்சான்' என்று காண்பித்தீர்கள். டைட்டிலில் 'ஒளி ஓவியம்' என்று போட வேண்டும் என்ற கருத்து எப்படி வந்தது?"

"ஒளிப்பதிவுன்னுதான் போடணும்னு சட்டமா இருக்கு? ஒரு கதையை எழுதற மாதிரி, ஒரு படத்தை வரையற மாதிரிதானே ஒளிப்பதிவும். 'ஒளி ஓவியம்'னு போடறதுதான் சரியா இருக்கும்னு எனக்குப் படுது."

"காதலைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?"

"இன்றைய தலைமுறைக்குக் காதல் ரொம்ப அவசியம். வரதட்சணைக் கொடுமை, ஜாதி வெறி, மத வெறி இதுக்கெல்லாம் ஒரே தீர்வு காதல் தான். ஓர் ஆணும், ஒரு பெண்ணும் ஒருத்தரை ஒருத்தர் புரிஞ்சுக்கிட்டு வாழணும்னா அது காதலால மட்டும் தான் சாத்தியம். இன்னிக்கு விக்கிற விலைவாசில ஆடம்பரமா கல்யாணம் பண்ண முடியாது. எளிமையான திருமணத்துக்கும் ஒரே வழி காதல்தான்!"

"காதல் கோட்டை படத்தில் வருகிற காதல் நிஜ வாழ்க்கையில் சாத்தியமா?"

"அந்த மாதிரி கேரக்டர் உள்ள ஆளுங்ககிட்ட - யதார்த்தமான உண்மையான அன்பு இருக்கற நபர்கள்கிட்ட சாத்

னியம்னுதான் நான் நினைக்கிறேன்."

"நீங்கள் தயாரிக்கும் அடுத்த படம் கூட காதல் படம்தானா?"

"நான் எடுத்த எல்லா படத்துலயும் அடிப் படை கரு காதலா இருந்தாலும் ஒரு மெஸேஜ் இருக்கும். வழக்கமான சினிமா மாதிரி, கதா நாயகன் ஒரு பெண்ணைக் காதலிச்சு, டூயட் பாடி, டான்ஸ் ஆடற மாதிரி இல்லாம புதுசா இருக்கும். முரளியை வச்சு படபூஜை மட்டும் தான் நடந்துருக்கு. ஸ்டோரி டிஸ்கஷன் நடந்துகிட்டிருக்கு. கதையை இன்னும் முடிவு பண்ணலை."

"உங்கள் படத்தை இயக்கும் இயக்குனர் களுக்கு இப்படிச் செய்ய வேண்டும் என்று ஏதாவது குறிப்புகள் கொடுப்பீர்களா?"

"ஆடியன்ஸ் டேஸ்ட் இன்னைக்கு இப்படி இருக்கு. அவங்க ரசனையை புரிஞ்சுக்கணும். அதுக்கேத்த மாதிரி பண்ணுங்கன்னு சொல்வேன். டைரக் டர்களே, 'நீங்க சொல்றது நல்லாருக்கு சார். ஏதாவது சொல்லுங்க'னு கேட்கிற மாதிரி ஐடியாவும் கொடுப்பேன்."

"பிரபலமான இயக்குனர்களை வைத்துப் படம் எடுக்க வேண்டும் என்று நீங்கள் நினைப்பதில்லையா?"

"அப்படியெல்லாம் ஒன்றும் இல்லை. 'காதல் கோட்டை' படத்துக்குச் சிறந்த படம், சிறந்த திரைக்கதை, சிறந்த இயக்குனர்னு

# பல பிரச்னைகள் தீரும்!

மூணு தேசிய விருது கிடைச்சுது. காதல் கோட்டை எடுத்த இயக்குனர் அகத்தியன். இப்போ பிஸியா இருக்கார். அதே மாதிரி டைரக்டர் விக்ர மனுக்கும் விருது கிடைக்கணும்னு நினைக்க றேன். விக்ரமனோட ஒவ்வொரு படமும் புதுசா இருக்கும். அவரோட முதல் படம் 'புதிய மன்னர்கள்'. அந்தப் படத்துக்குத் தயாரிப்பாளர்கள் கைய விரிச்சப்போ, படம் நின்னு போற நிலைமை. நான் தான் அப்போ விநியோக விஷயத்துல உதவி பண்ணினேன். படம் தோல்வியடைஞ்சது. அதுல எனக்கு ரொம்ப நஷ்டம்.

"விக்ரமனோட சண்டை போட்டுட்டேன். அந்த பாதிப்புலதான் பிறகு எடுத்த எல்லா படத்தையும் வெற்றிப்படமா கொடுத்தார். சரத்குமாரோட எல்லா படமும் கிட்டத்தட்ட தோல்விங்கற நிலைமைல, 'சூர்ய வம்சம்'னு ஒரு ஹிட் படத்தைக் கொடுத்தார். இப்போ இருக்குற டைரக்டர்ல பெரும்பாலானவங்க ஒரு படம் ஹிட்டானவுடனேயே தன்னை யும் மறந்துடுறாங்க, சொந்தத் தாயையும் மறந் துடுறாங்க. விக்ரமன் அதுலிருந்து வித்யாச மானவர். சினிமா ட்ரெண்டுக்கு ஏத்த மாதிரி பிரபலமான டைரக்டர்களை வச்சுத்தான் படம் எடுக்கணும்கற நிலைமை வந்தா, அப்படித்தான் எடுப்பேன்."

"காதல் செய்து திருமணம் செய்து கொண் டால்தான் ஒருத்தரை ஒருத்தர் புரிந்து கொள்ள முடியும் என்கிறீர்களே? நிஜ வாழ்க் கையில் எப்படி?"

"லவ் மேரேஜ்தான்!" ○

பேட்டி : **கே. பாலசுப்ரமணியன்**

படம் : **ஸ்ரீஹரி**





# ஆழம் பார்க்கும் உலகம்!

பல கொலை முயற்சிகளிலிருந்து தன் வாழ்நாளில் தப்பிய ஜோர்டான் மன்னர் ஹுசேன், கான்சர் நோயால் இறந்தார்.

பில் கிளிண்டன், எல்ஸ்டின், டோனி ப்ளேர், இளவரசர் சார்லஸ், கோஃபி அன்னன், யாசர் அராபத் போன்ற மிகப் பிரபலமான வி.ஐ.பி.க்கள் அவரது இறுதிச் சடங்கில் கலந்து கொண்டனர்.

வளைகுடாப் பகுதியில் தங்களது நலன் பாதுகாக்கப்படவேண்டும் என்ற காரணத்துக்காகவே பிரிட்டிஷ் அரசால் ஏற்படுத்தப்பட்ட நாடுதான் ஜோர்டான். இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் உருவான இந்த நாடு, 1967ல் நடைபெற்ற போரில் மேற்குக் கரை மற்றும் ஜெருசலம் ஆகிய பகுதிகளை இஸ்ரேலிடம் இழந்தது.

குவைத்தை சதாம் ஹுசேன் ஆக்ரமித்ததைத் தொடர்ந்து நடைபெற்ற வளைகுடாப் போரில், ஈராக்குக்கு ஆதரவாக நின்ற மிகச் சில நாடுகளில் ஜோர்டானும் ஒன்று.

ஆனால் அதற்குப் பிறகு மன்னர் ஹுசேன் தமது நிலையை மாற்றிக் கொண்டார். இஸ்ரேலோடு அமைதி ஒப்பந்தத்தில் அவர் கையெழுத்திட, "ஈராக்கின் நேச நாடு" என்ற நிலையிலிருந்து ஜோர்டான் விலகி விட்டதாகவே பலரும் கருதினர். போதாக்குறைக்கு சதாம் ஹுசேனுக்குத் தன் நாட்டில் அபய மளித்தார் மன்னர். லண்டனுக்குச் சென்று அங்குள்ள சதாம் அதிருப்தியாளர்களோடு தீவிரப் பேச்சு வார்த்தைகளை நடத்தினார். "ஈராக்கின் தலைமைப் பகுதியிலிருந்து சதாமை இறக்குவது, அந்த நாட்டைத் துண்டு துண்டாகப் பிரித்துத் தம் உறவினர்களை அவற்றிற்குப் பொறுப்பேற்க வைத்து, பினாமியாக ஆட்சி நடத்துவது"- இதுதான் மன்னர் ஹுசேனின் திட்டம் எனும் பேச்சு கூட பரவலாக எழுந்தது. ஆனால் இந்தத் திட்டம் செயல் முறையில் நடைபெறவில்லை.

ஜோர்டானின் எல்லை நாடுகளான சிரியாவும், ஈராக்கும், ஜோர்டான் ஒரு சுதந்தரத் தனி நாடு என்பதை பகிரங்கமாக ஒப்புக் கொண்டதில்லை. இந்த நிலையில் மன்னர் ஹுசேனுக்கு எப்போதும் டென்ஷன்தான்.

தனி வாழ்விலும் மன்னர் ஹுசேனைச் சுற்றி பல புதிர்கள். கொலை முயற்சிகள் நடக்கும் என்று எதிர்பார்த்தோ என்னவோ அடிக்கடி இரவு வேளைகளில் அரண்மனையை விட்டு வெளியேறித் தமது நண்பர்கள் வீட்டில் அவர் தங்குவதுண்டு. நான்கு முறை திருமணம் செய்து கொண்டவர் மன்னர் ஹுசேன். இரண்டாவது மனைவியான மோனா அமெரிக்கர். இவர்களுக்குப் பிறந்தவர்தான் அப்துல்லா. "எனக்கு அடுத்து என் மகன் அப்துல்லாதான் பட்டத்துக்கு வருவான்" என்று அறிவித்ததன் காரணமாக இப்போது அப்துல்லா பதவியேற்றிருக்கிறார். பாலஸ்தீனியப் பெண் ஒருவரை மணந்து கொண்டதால் அப்துல்லாவிடம் அந்த நாட்டு மக்களுக்கு ஒரு தனி இடம் கிடைத்திருக்கிறது.

இஸ்ரேல், ஈராக், பாலஸ்தீனம் போன்ற பல பரபரப்புப் பகுதிகளுக்கு வெகு அருகிலிருக்கும் காரணத்தாலேயே ஜோர்டான் மீது அழுத்தமான கண் உண்டு வல்லரசுகளுக்கு. பல பெருந் தலைகள் மன்னர் ஹுசேனுக்கு அஞ்சலி செலுத்த வந்ததற்கு இன்னொரு காரணம், புதிய மன்னர் அப்துல்லாவை ஆழம் பார்த்து, தங்கள் பக்கம் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்பதும்தான்!

— குல்ஹூ

# தேவை: தேர்தல் சீர்திருத்தம்!

முன்னாள் மத்திய நிதி அமைச்சர் டாக்டர் மன்மோகன் சிங், 'செஞ்சூரியன் டிரஸ்ட்' என்ற அமைப்பு வழங்கிய மிகச் சிறந்த மனிதருக்கான விருதைப் பெற்றுக் கொள்ள அண்மையில் சென்னை வந்திருந்தார். சென்ற ஆண்டே அவருக்கு இந்த விருது தரப்படுவதாக இருந்தது. ஆனால் தேர்தல் நேரத்தில் இத்தகைய விருதுகளைப் பெறுவது சரியில்லை என்று கூறி மறுத்து விட்டார். விழாவுக்குப் புறப்படுவதற்கு முன் அவரிடம் பேசினோம்.

"சிறு வயதில் உங்கள் வாழ்க்கையின் லட்சியமாக எது இருந்தது?"

"லட்சியம் வைத்துக் கொள்ளுகிற அளவுக்கு என் குடும்பச் சூழ்நிலை இல்லை. ரொம்ப ஏழ்மையான குடும்பம். ஆனால், பள்ளிக் கூடத்தில் படித்துக் கொண்டிருந்த போது, என்னை ஒரு டாக்டராக்க வேண்டும் என என் அப்பா ஆசைப்பட்டார். அதற்காக 'ப்ரீ-மெடிகல்' கோர்சும் படிக்க வைத்தார். பொருளாதாரத்தில் அதிக ஆர்வம் இருந்தது என்பதால் நான் பொருளாதாரத்தில் பட்டப் படிப்பு படிக்கப் போய் விட்டேன்."

"படிப்பை முடித்தபின், அரசு உத்தியோகம்தான் உங்கள் கனவாக இருந்ததா?"

"இல்லை. நான் ஆசிரியர் தொழிலுக்குப் போகவே ஆசைப்பட்டேன். அதன் பின் ஐக்கிய நாடுகள் சபையில் வேலைக்குப் போனேன். ஆனாலும் என் மனம் இந்தியாவையே சுற்றிச் சுற்றி வந்தது. எனவே அந்த வேலையை விட்டு விட்டு, டெல்லிக்கு வந்தேன். டெல்லி ஸ்கூல் அப் எகனாமிக்ஸில் ஆசிரியரானேன்."

"நீங்கள் அரசுப் பணியில் இருந்தபோது பல அரசியல்வாதிகளுடனும் பழகியிருப்பீர்கள். அப்போது, அரசியல்வாதிகள் பற்றி நீங்கள் கொண்டிருந்த கருத்து என்ன?"

"நான் சந்தித்திருக்கிற அரசியல்வாதிகளில் மிகவும் டீசண்டானவர்களும் உண்டு. மிகவும் அயோக்கியர்களும் உண்டு. இரண்டாவது பிரிவினர் கொஞ்சம் அதிகம் என்றால் மிகையில்லை."

— மன்மோகன் சிங் பேட்டி

"அரசியல் இந்த அளவுக்குத் தரம் தாழ்ந்து போனதற்கு என்ன காரணம் என நினைக்கி றீர்கள்?"

"அரசியல் என்பது குறுக்கு வழியில் பணம் பண்ணும் தொழில் என்ற எண்ணம் வந்து விட்டதுதான். இன்று, ஏராளமான பேர் அரசியல்வாதிகளாய் இருக்கிறார்கள். ஆனா லும் சுதந்தரப் போராட்ட காலத்தில் பலமான அஸ்திவாரமாய் இருந்த தேச பக்தி, ஏகாதிபத் திய எதிர்ப்பு போன்ற விஷயங்கள் இன்று இல்லாது போனதும் ஒரு காரணம். இதை யெல்லாம்விட மிக முக்கியமானது பணம்; அரசியலில் புழங்கும் அபரிமிதமான கறுப்புப் பணம். அந்தக் கறுப்புப்பணம், பொருளா தாரத்தை பலவீனப்படுத்துகிறது. அதனால் தான் தேர்தல் சீர்திருத்தங்களைச் செயல் படுத்த வேண்டியது மிக அவசியம் என்று நினைக்கிறேன். அரசாங்கமே அங்கீகரிக்கப் பட்ட தேசிய, மாநிலக் கட்சிகளுக்குத் தேர்தல் நிதி அளித்தால் கறுப்புப் பணப் புழக்கம் கட்டுப்படும்."

"நீங்கள் இந்திய அரசியலுக்குள் நுழைவ தற்கு முன்பு, நமக்கு ஏன் அரசியல் எல்லாம் என்று தயங்கினீர்களா?"

"நான் அரசியலுக்கு வந்தது ஒரு விதத்தில் விபத்து என்று கூறலாம். சற்றும் எதிர்பாரா மல்தான் அது நிகழ்ந்தது. நான் பல்கலைக் கழக மானியக்குழுத் தலைவராக இருந்த போது, ஒரு நாள் திடீரென்று அப்போதைய பிரதமர் நரசிம்மராவ், அவருடைய அமைச் சரவையில் நிதி அமைச்சராகச் சேர வேண் டும் என்று கேட்டுக் கொண்டார். நான் ஒரு கணம் சிந்தித்துப் பார்த்தேன். அன்று நாட் டின் பொருளாதாரச் சூழ்நிலையில், நிச்சய மாக என்னுடைய பொருளாதார அறிவு நாட் டுக்குப் பயன்படும் என்று நினைத்தேன். இளமை முதலே என் குடும்பத்திலும், என் கிராமத்திலும் நான் கண்ட வறுமை என் மனத்தில் ஆழமான ஒரு பாதிப்பை ஏற்படுத்தி யிருந்தது. நாட்டில் உள்ள ஏழைகளின் மேம் பாட்டுக்கு என்னால் ஆன பணியைச் செய்ய முடியும் என்று உண்மையாக நம்பினேன். நரசிம்மராவ் அளித்த பொறுப்பை ஏற்றுக் கொண்டேன்."

"வேறு எந்த அரசியல் கட்சியாவது உங் களை அழைத்திருந்தால், அந்தக் கட்சியில் சேர்ந்திருப்பீர்களா?"

"நிச்சயமாய் மறுத்திருப்பேன். இந்த நாட் டுக்கு காங்கிரஸ் கட்சி ஆற்றிய பணி மகத்தா னது. இன்று கூட மொழி, மத, இன வேறுபாடு களையெல்லாம் கடந்து, இந்த தேசத்தை ஒன்றுபடுத்தும் கட்சி, காங்கிரஸ்தான் என் பது என் கருத்து."

"காலப் போக்கில் காங்கிரஸ் கட்சி தர மிழந்து, பலவீனமாகிப் போனதற்கு என்ன காரணம்?"

"இந்திய அரசியல் தரம் தாழ என்ன கார ணமோ, அதே காரணங்கள் காங்கிரசுக்கும் பொருந்தும். பண பலம், கோஷ்டிப் பூசல், கிரிமினல் தொடர்பு என்று பல காரணங் களை சொல்லிக் கொண்டே போகலாம்."

"உங்கள் குடும்பம் பற்றி?"

"எனக்கு மூன்று பெண்கள். இரண்டு பேருக்குத் திருமணமாகி விட்டது. மூன்றா வது பெண் படித்துக் கொண்டிருக்கிறாள்."

"உங்கள் வெற்றிக்கு, உங்கள் மனைவியின் பங்களிப்பு என்ன?"

"நிறைய. அவர் மொத்த குடும்ப விஷயங் களையும் கவனித்துக் கொண்டதால்தான் நான் முழுமையாய் அரசாங்கப் பொறுப்பு களை கவனித்துக் கொள்ள முடிந்தது. இப் போதும் கவனித்துக் கொண்டிருப்பதால்தான் குடும்ப டென்ஷனில்லாமல், அரசியல் பணி யாற்ற முடிகிறது. என் வெற்றிக்கு அவருடைய முழுமையான ஒத்துழைப்பே காரணம் என்று சொல்லுவேன்."

"நீங்கள் நிதியமைச்சராக இருந்தபோது தானே பங்குப் பத்திர ஊழல் நடந்தது?"

"அது இந்தியப் பொருளாதாரத்தின் சோத னையான கட்டம். அது வெளிப்பட்டபோது, பாரபட்சமின்றி நடவடிக்கை எடுக்க உத்தர விட்டேன். என்றாலும், அதில் என்னை சம் பந்தப்படுத்த பெரும் சதி நடந்தது. ஆனால் நான் தூய்மையானவன் என்று நிரூபித்தேன்."

"உங்கள் பொழுது போக்கு?"

"புத்தகங்கள் படிப்பதுதான். எனக்கு வாழ்க்கை வரலாறுகள் படிப்பது சிறு வயதி லிருந்தே மிகவும் பிடித்த விஷயம். அப்புறம் அரசியல், பொருளாதாரம்."

"நீங்கள் படித்த வாழ்க்கை வரலாற்றுப் புத்த கங்களில் உங்களை மிகவும் கவர்ந்தது எது?"

"மகாத்மா, நேருஜி இருவருடையதுதான். இளமையிலேயே அவற்றைப் படித்திருக் கிறேன். என் மனத்தில் பெரும் பாதிப்பை அவை ஏற்படுத்தின."

"சுதந்தர இந்தியாவின் நிதி அமைச்சர்களி லேயே மிகத் திறமையானவர் என்று யாரைச் சொல்லுவீர்கள்?"

"ஒருவர் பெயரைச் சொல்ல முடியாது. டி.டி. கிருஷ்ணமாச்சாரி, சி. சுப்ரமணியம், ஆர். வெங்கட்ராமன் ஆகிய மூவரையும் சொல்லுவேன். அவர்கள் இந்திய பொருளா தாரத்துக்கு ஆற்றிய பணி மகத்தானது!" ●

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

படம் : **ஸ்ரீஹரி**



* விண்வெளியில் உருவாகும் ஆய்வு நிலையம் இப்படித்தான் இருக்கும்!

# விண்ணில் உருவாகும் ஆய்வு நிலையம்

சென்ற வருடம் (1998) நவம்பர் மாதம், மூன்றாம் வாரத்தின் ஒரு வெள்ளிக்கிழமை 'ஷர்யா' (தமிழில் 'வைகறை') வைச் சுமந்த படி ரஷ்யாவின் 'புரோட்டான்' ராக்கெட் விண்ணில் கிளம்பியது.

விண்ணியல் வரலாற்றில் முதன் முதலாகப் பதினாறு நாடுகள் ஒருங்கிணைந்து பங்காற்றும் 'பன்னாட்டு விண்வெளி நிலையத்தின்' (ISS — International Space Station) 'கால் கோள்' விழாவும் அன்றுதான் வெற்றிகரமாக நடந்தது.

சுமார் இருபது டன் எடை கொண்ட இந்த 'வைகறை', புவித் தரையின் மேலே ஏறத்தாழ 407 கிமீட்டர் உயரத்தில் நிலை நிறுத்தப்பட்டிருக்கிறது.

அடுத்த ஐந்து வருட காலங்களில் கட்டி முடிக்கப்படவிருக்கும் விண்வெளி நிலையத்துக்குத் தேவையான ஆற்றலையும்; தொலைத் தொடர்புகளையும் அளிக்கவல்ல சாதனங்கள் இந்த 'வைகறை'க் கலத்தில் அனுப்பி வைக்கப் பட்டுள்ளன.

1984ம் ஆண்டில், அமெரிக்க அதிபராக இருந்த ரொனால்ட் ரேகனால் முன் வைக்கப் பட்ட விண்வெளி நிலையம் பற்றிய திட்டம், அமெரிக்கா, கனடா, ஜப்பான், ரஷ்யா மற்றும் ஐரோப்பிய நாடுகள் என மொத்தம் பதினாறு நாடுகளின் கூட்டு முயற்சியில் உருவெடுத்திருக்கிறது.

ஆரம்பத்தில் 40 பில்லியன் (1 பில்லியன் = 100 கோடி) அமெரிக்க டாலர் செலவில் நிறைவேற்ற இயலும் என எதிர்பார்க்கப்பட்ட இத் திட்டம், இப்போது நூறு பில்லியன் டாலர்களுக்கும் அதிகமான செலவினையும், அடுத்த ஐந்து வருட கடும் உழைப்பினையும் எதிர் பார்த்து நிற்கிறது. இதில் பாதியினை அமெரிக்காவும்; மறுபாதியை ஏனைய நாடுகள் அனைத்தும் ஏற்றுக் கொள்வதாக ஏற்பாடு.

தீவிர உழைப்பின் முடிவில் 2004ம் வருட பிற்பகுதியில் ISS தனது ஆய்வுப் பணியினை ஆரம்பிக்கத் தயாராகி விடும். இந்திய ரூபாயில் சுமார் நானூறாயிரம் கோடிக்கும் அதிகமான பொருட் செலவில் உருவாகும் இப் பன்னாட்டு விண்வெளி நிலையத்தால் மனித இனம் பெறப் போகும் பயன் என்ன?

'பூஜ்ய ஈர்ப்பு' நிலையில் எலிகளை வளர்த்து உயிரியல் ஆய்வுகளை மேற் கொள்வது உட்பட, புதிய வீரியம் மிக்க மருந்துகளைக் கண்டு பிடிக்கும் முயற்சியில் ஈடுபடுவது, அங்கிருந்தவாறே பூமியில் ஏற்படும் மாறுதல்களை ஆராய்வது போன்ற பலவகை ஆய்வுகள் இதில் இடம் பெறவிருக்கின்றன.

இவை மட்டுமின்றி, இவ்வாய்வு நிலையத்தில் பணியாற்றும் விஞ்ஞானிகளுக்கு ஏற்படும் பாதிப்புக்களை பூமியில் உள்ள ஆய்வாளர்கள் பதிவு செய்து அதன் துணையோடு எதிர் காலத்தில் மேற்கொள்ளப்படவிருக்கும் அண்டவெளிப் பயணங்களுக்கான பாதுகாப்பு ஏற்பாடுகளை உருவாக்க முயல்வார்கள். எதிர் காலத்தில் செவ்வாய்ப் பயணம் மேற்கொள்ளவிருக்கும் விஞ்ஞானிகளுக்கு இது பெரிதும் பயன்படும் என நம்பப்படுகிறது.

இத்தனைக்கும் மேலாக – உலக நாடுகள் பலவும், வெவ்வேறு அரசியல் சித்தாந்தங்களைக் கொண்டிருந்தாலும், அறிவியல் துறையில் ஒருங்கிணைந்து செயலாற்றும் வாய்ப்பினையும், விருப்பினையும் இம்முயற்சி மூலம் பெருக்கிக் கொள்ள முடியும் எனவும் எதிர் பார்க்கிறார்கள். ○

— சர்வசித்தன்

திருஷ்ணா

மாருதி காரில் தெரு முனை திரும்பும் போதுதான் அதைக் கவனித்தார் மருதாசலம்.

காரை நிறுத்தி விட்டு, கிழிறங்கினார்.

தம் வீட்டு அருகில் முளைத்திருந்த அந்தத் திடீர் டிபன் கடையை ஆராய்ந்தது அவர் பார்வை.

மேஜை மேல் அடுப்பு எரிந்து கொண்டிருந்தது. பக்கத்து பெஞ்சில் சாம்பார், சட்னி பாத்திரங்கள்.

இரண்டு பெஞ்சுகள் 'ட' வடிவில் போடப்பட்டு ஐந்து மர ஸ்டூல்கள் சாப்பிட வருபவர்களுக்கு வசதியாய் போடப்பட்டிருந்தன.

பரிமாற ஒரு எடுபிடிப் பையன். டிபன் வகைகளை சமைக்க ஒரு அழுக்கு வேட்டி ஆள். அவர்கள் இருவரையும் அதிகாரம் செய்தபடி ஓர் இளைஞன்.

அவன்தான் முதலாளியோ?

முதலாளி என்ன முதலாளி? ஐந்து லட்சத்தை முடக்கித் தொழில் செய்யும் தானும் ஒரு முதலாளி, அவனும் ஒரு முதலாளியா?

ஒவ்வாமையுடன் அவனை முறைத்தார்.

இரண்டு பேர் அமர்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தனர்.

"சாம்பார் ஊத்தவா, டேய், இலையிலே இட்லி வை."

விரட்டிக் கொண்டிருந்த அந்த இளைஞன் மேல் எரிச்சல் வந்தது.

சந்தனக் கலர் சட்டை, கைலியில் இருந்தான் அவன். திடகாத்திரமான சரீரம்.

"இங்கே வாப்பா?"

கை சொடுக்கிக் கூப்பிட்டார்.

"என்ன சார், பார்சலா?"

மருதாச்சலத்துக்கு சுருக்கென்றது.

"உன் கடையிலே வாங்கிச் சாப்பிட்டா, உடம்பு அவ்வளவுதான். நீதான் ஓனரா?"

"ஆமாம் சார். இன்னிக்குத்தான் இங்கே ஆரம்பிச்சேன். நல்ல இடம் சார். தெரு விளக்கு வெளிச்சம் நம்ம கடைக்குள்ளே அடிக்கற மாதிரி இருக்கு பாருங்க."

"உன் பேரு?"

"ராஜு சார். ஏன்?"

"யாரைக் கேட்டு கடை போட்டே?"

"ஏன்? உழைச்சுப் பிழைக்க விரும்பறேன். யாரைக் கேட்கணும்?"

"இது என் வீடு. இப்படி என் வீட்டு முன்னாடி நீ அசிங்கம் பண்றதை நான் அனுமதிக்க முடியாது."

ஏதோ சொல்ல வாயெடுத்தவன், சிரித்தான். போய் விட்டான்.

"என்னண்ணே, அதுக்குள்ளே எழுந்துட்டீங்க? இட்லி போதுமா?"

அவனின் அலட்சியம், இவர் கோபத்தில் 'வெண்ணையின் குழந்தை'யை (நெய்) ஊற்றியது.

"நானும் சொல்லிப் பார்த்துட்டேன். பதிலே பேச மாட்டேங்கறான். நீங்க வருவதற்காகத்தான் காத்திருந்தேன்."

மனைவி படபடக்க, இவர் நேரே டெலிபோனை நோக்கிச் சென்றார்.

"ஹலோ போலீஸ் ஸ்டேஷன்?"

அடுத்த அரை மணி நேரத்தில் ரெண்டு கான்ஸ்டபிள்கள் சைக்கிளில் வந்து இறங்கினர்.

"டேய், என்னடா தகறாரு பண்றே?"

அதட்டலாய்க் கேட்டபடி கடையை நெருங்கினர். மருதாசலமும், அவர் மனைவியும் கர்வச் சிரிப்புடன் வாசல் கேட்டிலே நின்றபடி வேடிக்கை பார்த்தனர்.

"வாங்க சார். உட்காருங்க. சூடா இட்லி வேணுமா?"

கான்ஸ்டபிள் காதில் ஏதோ பேசினான். எதையோ கொடுத்தான். அதட்டல் களை மறைந்து போய் வழிசல் களை சொட்டியது போலீஸ் முகத்தில்.

"போறான் சார். வீட்டு வாசல்படியிலா போட்டிருக்கான், கடையை. சம்பாதிக்கற வயசு. ஓரமா வியாபாரம் பண்ணிட்டுப் போகட்டுமே."

மருதாசலம் விக்கித்துப் போனார்.

"என்னங்க இது? நான் இப்பவே டி.எஸ்.பிக்கு போன் செய்யறேன்."

# சுடும்!

கொதித்தெழுந்தார்.

"என்ன சார் நீங்க? அவன் என்னடான்னா இன்ஸ்பெக்டரோட சொந்தம்னு சொல்றான். நீங்க டி.எஸ்.பிங்கறீங்க. நாங்க என்னதான் செய்யறது?"




அலுத்துக் கொண்டனர்.

"என் வீட்டு வாசலில் ரோடை இவன் ஆக்ரமிப்பு செஞ்சு, கடை போட்டிருக்கான். நான் வேற வழியிலே பார்த்துக்கறேன்."

சத்தம் போட்டபடி உள்ளே போனார்.

**கா**லையில் எழுந்து, வாசலுக்கு வரும்போதே, மூக்கு பொசுங்கியது நாற்றத்தில்.

வெளியே எட்டிப் பார்த்தார். எச்சில் இலைகளின் நாற்றம்தான்! குமட்டியது.

இரவு பன்னிரண்டு மணி வரை ஒரே இரைச்சல். குடித்து விட்டு டிபன் சாப்பிட வந்தவர்களோ, என்னமோ?

ப்ச், சொந்த வீட்டில் நிம்மதியாய் தூங்கக் கூட முடியவில்லை.

சீக்கிரமே கிளம்பி முனிசிபல் ஆபீசுக்குப் போய்ப் புகார் செய்தார்.

"நாலு பேர் நடமாடற தெருவிலே இப்படிக் கடை போடலாமா, சார்? ஆக்ரமிப்பை அகற்றுங்க."

முனிசிபல் ஆட்கள் வந்தனர், அன்று மாலை.

ராசு நைட் டிபன் கடை.

அட்டையில் குண்டு, குண்டாய் எழுத்துக்கள்; விளக்குக் கம்பத்தில் தொங்கின.

வழக்கம் போல அமைதியாய் அவர்களை எதிர்கொண்டான் ராசு.

"வாஸ்தவம்தாங்க. நான் ஆக்ரமிப்பு செஞ்சிருக்கேன் தெருவுல. ஆனால், நான்



தானம் என்பது தன்னை விட பெரியவர்களுக்கு தான் உயர்வதற்காகக் கொடுப்பது... தருமம் என்பது ஏழைகளுக்கு அவர்கள் உயர்வதற்காகக் கொடுப்பது!

– வாரியார்

தகவல்: மலர்சூர்யா

கடை போட்டு இன்னிக்கு இரண்டாவது நாள்தான். இந்த வீட்டுக்காரரோட காரு எத்தனை நாளாய் வெளியிலே நிக்குது, தெருவை அடைச்சுக்கிட்டு. அது மட்டும் ஆக்ரமிப்பு இல்லையா?"

"கண்ட பயல்களும் சட்டம் பேச ஆரம்பிச்சுட்டான், ப்ச்."

மருதாசலம் கத்தினார்.

"தோ பாரு, நாளையிலேயிருந்து கடை போடக் கூடாது, புரியுதா. பாவம் சார், ஏழை! இன்னிக்கு ஒருநாள் போயிட்டுப் போறான். நீங்களும் காரை இடைஞ்சல் இல்லாம நிறுத்தப் பாருங்க."

ஆனால் மறுநாளும் நைட் டிபன் கடைகளை கட்டி விட்டது.

"நம்ம நேரம் பார்த்து முதலமைச்சர் விசிட். போலீஸ்காரன் எல்லாரும் அங்கே போயிட்டான். முனிசிபல் ஆபீசிலும் இந்த ராசு கவனிச்சுட்டானா?"

மனைவியிடம் புலம்பினார்.

"வீட்டு வாசலிலே எச்சி இலைக்காக நாய்ச் சண்டை. தெருவுலே இறங்கவே பயமாயிருக்கு. வெள்ளிக் கிழமையும், அதுவுமா வாசலிலே கோலம் போட்டுட்டு நிமிர்ந்தா, கண்ட சனியனும் பறந்து வருது, காத்துல. ஒரே ஊழலாப் போச்சு இடமே. என்ன பெரிய ஆளு நீங்க?"

மனைவி வேறு முணுமுணுக்க, மருதாசலம் தவித்தார்.

"மூணு நாள் ப்ரோக்ராம் போட்டுக்கிட்டு சீஃப் மினிஸ்டர் நம்ம ஊரிலே உட்கார்ந்திருக்கார். நீங்களே பேசி முடிச்சுக்குங்க உங்களுக்குள்ளே. எங்களுக்கு மூச்சு விட நேரமில்லே."

அரசாங்க இயந்திரங்கள் எதுவும் உதவிக்கு வர முடியாத சூழல்.

அன்று இரவு நேரே ராஜுவிடம் சென்றார்.

"எவ்வளவு பணம் வேணும்?"

சாட்சிக்காரனை விட சண்டைக்காரன் காலே மேல். பணத்தை விட்டெறிந்தால், ஓடிப் போகிறான்.

ராசு அவர் கேள்வி புரியாமல் பார்த்தான்.

"நீ இந்த இடத்துல கடை போடாம இருக்க எவ்வளவு வேணும்?"

"நான் கடை போடறதுனாலே உங்களுக்கு என்ன கஷ்டம்?"

எதிர்க்கேள்வி போட்டவனை எரித்து விடுவது போல பார்த்தார்.

"மனுஷன் வாழ முடியலே உன் நாற்றத்துலே, தெரியுமா? ஆறு லட்சம் போட்டு வீடு கட்டி, நிம்மதியாய்த் தூங்க முடியலேன்னா எப்படி, சொல்லு?"

ஆவேசமாய்க் கேட்டவரைப் பார்த்துப் புன்னகைத்தான்.

"உங்களுக்கு மட்டும்தான் தூக்கம் வருமா? உங்க மூக்குக்கு மட்டும்தான் நாத்தம் தெரியுமா?"

"என்ன சொல்றே?"

"உங்க தொழிற்சாலைக் கழிவுகளை எங்க முனியன்குப்பம் பக்கத்துல கொண்டு வந்து கொட்டறீங்களே, அது எப்படி நாறும்னு தெரியுமா உங்களுக்கு? எங்க ஆளுங்க, எத்தனை தரம் வந்து முறையிட்டிருப்பாங்க. எவ்வளவு அலட்சியமாய்க் கண்டுக்காம விட்டுட்டீங்க. அதான் திட்டம் போட்டேன். போலீஸ்லேயும், முனிசிபல் ஆபீசுலேயும் நம்ம ஆளுங்க இருக்காங்க. முதலமைச்சர் இங்கே வர்ற சமயம் செஞ்சா பலன் கிடைக்கும்னு நினைச்சேன். உங்களுக்கு ஒரு நியாயம், எங்களுக்கு ஒரு நியாயமா? சொல்லுங்க."

மருதாசலம் தலைகுனிந்தார், உண்மை சுட்டதால். ●

# மத ஒற்றுமைக்குப் பாடுபடும் மதுரை பல்கலைக் கழகம்!

• பேராசிரியர் புஷ்பராஜன்



உலகில் வேறெந்தப் பல்கலைக் கழகத்திலும் இல்லாத ஒரு துறை மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் இருக்கிறது. 'பல்சமய உறவியல் துறை' என்ற பெயரில் இயங்கும் இத்துறையில் இருப்பது அ. புஷ்பராஜன் என்ற ஒரே பேராசிரியர்தான்.

ஒரே ஒரு பேராசிரியரைக் கொண்ட இத்துறை என்னதான் செய்கிறது? பேராசிரியர் புஷ்பராஜனையே சந்தித்துக் கேட்டோம்.

"வெறும் சமய ஒப்பீட்டாய்வை மட்டும் மேற்கொள்ளாமல், பல்சமயத்தவரிடையே நல்லுறவை வளர்ப்பதற்கான ஆய்வுகள் மற்றும் முயற்சிகளை மேற்கொள்வதே இத்துறையின் நோக்கம். வருங்காலத் தலைவர்களாம் இன்றைய இளந்தலைமுறையை சமய நல்லிணக்கப் பாதையில் பயிற்றுவிக்க, மதுரையில் முப்பதுக்கும் மேற்பட்ட பள்ளிகளில் பல்சமய கூட்டு வழிபாடுகள், பல்சமயக் கூட்டு வாழ்வுப் பயிற்சி முகாம்களை நடத்தியுள்ளது இத்துறை. இப்பயிற்சியைத் தொடர்ந்து ஆழப்படுத்தும் வகையில், பள்ளி ஆசிரியர்களுக்கும் தனிப் பயிற்சி தரப்படுகிறது. எந்தப் பட்டதாரியும் மத நல்லிணக்கத்தை உருவாக்கும் அமைதிக் காவலராகலாம் எனும் விதத்தில் 'அமைதி மற்றும் மதிப்பீடு கல்வியில் முதுகலைப் பட்டயம்' (P.G. Dip in Peace and Value education) என்ற பெயரில் பட்டயப் பயிற்சி ஒன்றையும் இத்துறை ஆண்டுதோறும் தந்து வருகிறது. மத நல்லிணக்கக் கருத்துகள் படித்தவர்களுக்கு மட்டுமின்றி, பாமரர்களுக்கும் போய்ச் சேர வேண்டுமென்பதால் பொது




மக்களுக்கும் அவ்வப்போது பயிற்றரங்குகள், கருத்தரங்குகள் போன்றவை நடத்தப்பட்டு வருகின்றன!" என்று தம் துறையின் பணிகளை விவரித்த டாக்டர் புஷ்பராஜன், பல எதிர்கால திட்டங்களையும் கைவசம் வைத்திருக்கிறார்.

"ஒவ்வொரு ஊரிலும் பத்துப் பதினைந்து அண்டை வீட்டாரை ஒன்று சேர்த்து 'அன்பியங்கள்' எனும் அடித்தள அமைப்பை உருவாக்கி, சாதி சமயப் பிளவுபாடின்றி ஒற்றுமையுடன் வாழச் செய்யும் புதுத் திட்டத்தைத் தயாரித்துள்ளோம். இந்த அன்பியங்களை ஒருங்கிணைக்க 'சுற்றம்', 'வட்டம்' 'மாவட்டம்' என்கிற வரையில் மேல் அமைப்புகள் ஏற்படுத்தப்படும். இதன் மூலம் மக்கள் நலனை மக்களே காக்கும் பக்குவம் விளையும்.

"இது போன்ற செயல் திட்டம் 'நல ஒளி இயக்கம்' என்ற பெயரில் கன்னியாகுமரி மாவட்டத்தில் செயல்பட்டு வருகிறது. அதை இன்னும் கூர்மைப்படுத்தி, உடல், உள்ளம், சமயம், சமூகம், சுற்றுப்புறச் சூழல்... என பல கோணங்களில் விரிவுபடுத்தவுள்ளது எம் துறை. இத் திட்டம் மூலம் படித்தவர்களுக்கு மட்டுமல்ல, பாமரர்களுக்கும் பல்கலைக்கழகம் தன் பங்களிப்பைத் தர முடியும் என்பது உலகுக்கு புது செய்தியாய் வெளி வரும்" – என்று நம்பிக்கையோடு பேசும் பேராசிரியர் புஷ்பராஜனுக்கு உதவ வேறு நபரில்லை.

"ஒரு நபர் துறையான எமது துறை, இதுவரை பிற துறையினரின் உதவியோடு தான் திட்டங்களைச் செயல்படுத்தி வருகிறது. பல நபர் துறையாய் இது மாற்றப்படும் பட்சத்தில் ஏராளமாய் சாதிக்க இயலும். துறையின் பெயருக்கேற்ப பல்சமயப் பேராசிரியர்கள் நியமிக்கப்பட வேண்டும். தமிழகத்தையே சமத்துவபுரமாக்க விரும்பும் முதல்வர் இதற்கு உதவ முன் வர வேண்டுமென அவருக்கு மனு செய்துள்ளேன்" என்றார் டாக்டர் புஷ்பராஜன்.

பேட்டி, படம்: **கிரண் நியூஸ்**

# 98 – ன் சாதனை...

**கடந்த வருடத்தின் மிகப் பெரிய மருத்துவ சாதனையாக ஐரோப்பாவில் கருதப்படுவது – ரோபோக்கள் மூலம் கம்ப்யூட்டரை பயன்படுத்தி மனிதர்களுக்குச் செய்யப்பட்ட அறுவை சிகிச்சை முறையே!**

**எந்த இடத்தில் – எப்படி – அறுவை சிகிச்சை செய்ய வேண்டுமென்பதைத் திட்டமிட்டு புரோகிராம் பண்ணி, அதனை – ரோபோ மூலம் இயக்க வேண்டியதுதான். இவையனைத்தையும், கம்ப்யூட்டர் மூலமே செய்வதால் அடுத்து வரும் மாணவர்கள் இதனை எளிதில் பார்த்து, புரிந்து செயல்பட வழி உள்ளது. இந்த ரோபோ அறுவை சிகிச்சை முறையை அறிமுகப் படுத்தியதில் பிரான்க நாட்டு மருத்துவர்களுக்குப் பெரும் பங்குண்டு.**

— பாரீஸ் பார்த்தசாரதி

# பொன்னியின் செல்வன்



ஐம்பதாம் அத்தியாயம்

## "ஆபத்துதவிகள்"



இளவரசரைப் படகிலே பார்த்ததும் பார்த்திபேந்திரனுக்கு உண்டான ஆச்சரியம் சொல்லத் தரமன்று. கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்து தரிசனம் தந்ததுமல்லாமல் "வேண்டிய வரங்களைக் கேள்" என்று சொன்னது போலல்லவா இருக்கிறது? - எனினும், இப்படி அவர் தனியாகப் படகில் வருவதன் காரணம் என்ன? பழுவேட்டரையர்களின் கப்பல்கள் என்ன ஆயின...? தன்னுடைய கப்பல் இது என்று தெரியாமல், ஒருவேளை இதுதான் அவரைச் சிறைப்படுத்த வந்த கப்பல் என்று எண்ணிக்கொண்டு வருகிறாரோ?

அப்படியெல்லாம் தவறான எண்ணத்துடன் வரவில்லையென்று விரைவிலேயே தெரிந்துபோயிற்று. படகிலிருந்து கப்பலில் இளவரசர் ஏறியதும் பார்த்திபேந்திரன் கேட்கும்வரையில் காத்திராமல் நடந்த சம்பவங்களைச் சுருக்கமாகக் கூறிவிட்டார். "அராபியர் வசப்பட்ட கப்பலில் வந்தியத்தேவன் இருக்கிறான். அவனை எப்படியாவது தப்புவித்தாக வேண்டும்" என்றார்.




அமரர் கல்கி

இளவரசர் கூறிய செய்திகள் பார்த்திபேந்திரனுக்கு மிக்க குதூகலத்தை உண்டாக்கின.

''எல்லாம் நன்றாகத்தான் முடிந்திருக்கின்றன. அந்த முரட்டுப்பிள்ளை இவ்வளவு பதற்றமாகக் காரியம் செய்யாதிருந்தால் இன்னும் நன்றாயிருந்திருக்கும். ஆயினும் அவனை அயல் நாட்டாரிடம் காட்டிக் கொடுத்து விடக்கூடாது. அந்தக் கப்பல் வெகு தூரம் போயிருக்க முடியாது. எப்படியும் துரத்திப் பிடித்து விடலாம்'' என்றான்.

பிறகு கலபதியைக் கூப்பிட்டு விவரத்தைக் கூறினான்.

''அதைப் பற்றி என்ன கவலை? காற்று இப்படியே அனுகூலமாக அடித்துக் கொண்டிருந்தால் சாயங்காலத்துக்குள் பிடித்து விடலாம்! நம்மைத் தப்பி அந்தக் கப்பல் எங்கே போய் விடப் போகிறது? கோடிக்கரை சென்று பிறகு கடற்கரையோரமாகத்தானே போக வேண்டும்?'' என்றான் கலபதி.

ஆனால் வாயுபகவானுடைய திருவுள்ளம் வேறு விதமாயிருந்தது. வரவரக் காற்றின் வேகம் குறைந்து வந்தது. உச்சிவேளை ஆனதும் காற்று அடியோடு நின்றுவிட்டது. கடல் அலை என்பதே இன்றி அமைதியடைந்திருந்தது. சொல்ல முடியாத புழுக்கம் சூழ்ந்தது. சூரிய பகவான் வானத்தில் ஜோதிப் பிழம்பாக விளங்கிக் கடல் மீது தீயைப் பொழிந்தார். கடல் நீர் தொட்டுப் பார்த்தால் சுட்டிராதுதான். ஆயினும் கடலைப் பார்க்கும்போது தண்ணீர்க் கடலாகத் தோன்றவில்லை; நன்றாகக் காய்ச்சிக் கொதித்துப் புகை எழுப்பும் எண்ணெய்க் கடல் போலத் தோன்றியது. சூரிய கிரணங்கள் நேரே பிரதிபலித்த இடங்களில் உருக்கிய அக்கினிக் கடலாகவும் காணப்பட்டது.

கப்பல் அசையவில்லை. பாய் மரங்களிலிருந்து எல்லாப் பாய்களும் நன்றாக விரிக்கப்பட்டிருந்தன. பயன் என்ன? அலைஓசை நின்றது போல் பாய்மரங்கள் சடபடவென்று அடித்துக் கொள்ளும் ஓசையும் நின்றுவிட்டது. பாய்மரங்களும் தூண்களும் குறுக்கு விட்டங்களும் அசையும்போது ஏற்படும் கரமுர சத்தமும் இல்லை. கப்பல் கடலைக் கிழித்துச் செல்லும் ஓசையும் இல்லை. உண்மையில் அந்த நிசப்தம் சகிக்க முடியாத வேதனையை அளித்தது.

அத்துடன் இளவரசரின் உள்ளத்தில் வந்தியத்தேவனைப் பற்றிய வேதனையும் மிகுந்தது. ''இப்படிக் காற்று நின்று கப்பலும் அடியோடு நின்று விட்டதே! இப்படியே எத்தனை நேரம் இருக்கும்? காற்று எப்போது மறுபடி வரும்? அந்தக் கப்பல் தப்பித்துக் கொண்டு போய் விடாதா?'' என்று கவலையுடன் கேட்டார்.

பார்த்திபேந்திரன் நாவாயின் நாயகனை நோக்கினான்.

அப்போது கலபதி ''அதிக நேரம் இப்படியே காற்று அடியோடு ஓய்ந்து இருக்க முடியாது. சுழிக்காற்று எங்கேயோ உருவாகிக் கொண்டிருக்கிறது. சீக்கிரத்தில் அது வந்து நம்மைத் தாக்கினாலும் தாக்கும்; அல்லது நம்மை ஒதுக்கி விட்டுவிட்டு அப்பால் போனாலும் போய்விடும். நம்மைச் சுழிக் காற்றுத் தாக்கினாலும் தாக்காவிட்டாலும் கடல் சீக்கிரத்தில் கொந்தளிக்கப் போவது நிச்சயம். இப்போது இவ்வளவு அமைதி குடிகொண்டிருக்கிறதல்லவா? இன்று இரவுக்குள் மலை போன்ற அலைகள் எழுந்து மோதுவதைப் பார்ப்போம். மலைகளையும் பார்ப்போம்; அதல பாதாளத்தையும் பார்ப்போம்!'' என்றான்.

''சுழிக்காற்று கப்பலைத் தாக்கினால் அபாயந்தான் அல்லவா?''

''சாதாரண அபாயமா? கடவுள் காப்பாற்றினால்தான் உண்டு!''

''அப்படியானால் அந்தக் கப்பலை நாம் பிடிப்பது துர்லபம்.''

''இளவரசே! கடலும் காற்றும் பட்சபாதம் காட்டுவதில்லை. நமக்கு ஏற்

பட்டிருக்கும் நிலைமைதான் அந்தக் கப்பலுக்கும் ஏற்பட்டிருக்கும். தற்சமயம் அதுவும் அசையாமல்தான் நிற்கும்...''

''ஒருவேளை கரையோரம் சென்றிருந்தால்...'' என்று இளவரசர் கேட்டார்.

''கரையோரம் போயிருந்தால் அதில் உள்ளவர்கள் இறங்கிக் கரை சேர்ந்து தப்பிக்கலாம்! ஆனால் கப்பல் போனதுதான்!'' என்று சொன்னான் கலபதி.

''எவ்வளவு பெரிய அபாயமாயிருந்தாலும் நமக்கு வேண்டியவர்கள் நம் பக்கத்திலிருந்தால் கவலையில்லை!'' என்றார் இளவரசர். அவருடைய மனக்கண் முன்னால் வந்தியத்தேவனுடைய குதூகலம் ததும்பும் முகமும் பூங்குழலியின் மிரண்ட பார்வையுடைய முகமும் அடிக்கடி வந்து கொண்டிருந்தன. அவர்கள் இச்சமயம் எங்கே இருப்பார்கள்? என்ன செய்து கொண்டிருப்பார்கள்? என்ன எண்ணிக் கொண்டிருப்பார்கள்?





ண்மையிலேயே அபாயம் சூழ்ந்த நிலையில் நாம் விட்டுவிட்டு வந்த வந்தியத்தேவனிடம் இப்போது நாம் செல்வோம்.

இளவரசரைச் சிறைப் பிடித்துக் கொண்டு போவதற்காக வந்த பெரிய மரக்கலத்தின் அடித்தட்டில், தட்டு முட்டுச் சாமான்களும் மரக் கட்டைகளும் மூட்டை முடிச்சுக்களும் போட்டிருந்த இருண்ட அறையில், அவன் ஒரு கட்டையுடன் சேர்த்துக் கட்டப்பட்டுக் கிடந்தான். வெகுநேரம் வரையில் அவன் பிரமை பிடித்தவன் போலிருந்தான். அவசர புத்தியினால் இத்தகைய இக்கட்டில் அகப்பட்டுக் கொண்டோமே என்ற எண்ணம் அவனை வதைத்தது. இது என்ன கப்பல், யாருடைய கப்பல், இதில் சில முரட்டு அராபியர்களும் மந்திரவாதி ரவிதாஸனும் சேர்ந்திருப்பது எப்படி? இந்தக் கப்பல் எங்கே போகிறது, தன்னை என்னதான் செய்வார்கள் என்று யோசித்து யோசித்துப் பார்த்தும் அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. அவன் தன் வருங்காலத்தைப் பற்றிக் கண்டு வந்த கனவெல்லாம் உண்மையில் கனவுதான் போலும்! இதைவிடப் பெரிய கஷ்டங்களிலிருந்தெல்லாம் தான் தப்பித்திருக்கும்போது இதிலிருந்து தப்பிக்கவும் ஒருவழி கிடைக்காமலா போகும் என்ற சபலமும் சில சமயம் ஏற்பட்டது. பார்க்கலாம்; உடம்பில் உயிர் இருக்கும்வரையில், அறிவும் ஆலோசனைத் திறனும் இருக்கும்வரையில், அடியோடு நம்பிக்கை இழக்க வேண்டியதில்லை.

இந்த ஆசை தோன்றிய பிறகு சுற்றுமுற்றும் பார்த்தான். இருட்டில் முதலில் கண் தெரியவில்லை. வரவரத் தெரியலாயிற்று. அவனுக்குச் சமீபத்திலேயே பலவகை ஆயுதங்கள் குவிந்து கிடப்பதைக் கண்டான். அவனுடைய உடம்பை இறுக்கிக் கட்டியிருந்ததே தவிரக் கைகள் இறுக்கிக் கட்டப்படவில்லை. கைக்கட்டைத் தளர்த்திக் கொண்டு ஒரு கையை நீட்டி அங்கே கிடந்த கத்திகளில் ஒன்றை எடுக்கலாம்; உடம்பையும் கால்களையும் பிணைத்திருந்த கயிறுகளை அறுத்து விடலாம். ஆனால் பிறகு என்ன செய்வது? இந்த அறைக் கதவோ சாத்தப் பட்டிருக்கிறது. இதிலிருந்து வெளியில் போவது எப்படி? போனபிறகு அவ்வளவு அராபியர்களுடனும் மந்திரவாதியுடனும் அவன் தோழனுடனும் சேர்ந்தாற்போல் சண்டை போட முடியுமா? - அப்படிச் சண்டை போட்டு எல்லாரையும் கொன்று விட்டாலும் அப்புறம் என்ன பண்ணுவது? கப்பலைத் தன்னந்தனியாகத் தன்னால் செலுத்த முடியுமா? கப்பலைப் பற்றிய சமாசாரம் ஒன்றுமே தனக்குத் தெரியாதே!

ஆம்; மறுபடியும் அவசரப்படக் கூடாது; பொறுத்திருந்து பார்க்க வேண்டும். தன்னை உடனே கொல்ல முயலாமல் அவர்கள் கட்டிப் போட்டிருப்பதே கொஞ்சம் நம்பிக்கைக்கு இடமளிக்கிறதல்லவா? என்னதான் செய்யப் போகிறார்கள். பார்க்கலாமே?

ஆனால் நேரமாக ஆக, வந்தியத்தேவனுடைய பொறுமை பெரிதும் சோதனைக் காளாயிற்று. அடுப்புக்குள் போட்டு அவனை வேக வைப்பது போல் அந்த அறை அவ்வளவு புழுக்கமாயிருந்தது. உடம்பில் வியர்வை வியர்த்துக்கொட்டியது. கடற் பிரயாணம் இவ்வளவு வெதுப்புவதாயிருக்கும் என்று அவன் கனவிலும் எண்ணியதில்லை. பூங்குழலியுடன் அன்றிரவு படகில் சென்றதை நினைத்துக்கொண்டான். அப்போது எப்படிக் குளிர் காற்று வீசிற்று? உடம்புக்கு எவ்வளவு இதமாயிருந்தது? அதற்கும் இதற்கும் எத்தனை வித்தியாசம்? சுண்ணாம்புக் காளவாயில் போடுவது என்பார்களே, அதுபோல அல்லவா இருக்கிறது?



டீரென்று ஏதோ ஒரு மாறுதலை அவன் உணர்ந்தான். ஆம்; கப்பலின் ஆட்டம் நின்றுவிட்டது. கப்பல் நகராமல் நின்ற நிலையில் நிற்பதாகத்

தோன்றியது. புழுக்கம் இன்னும் அதிகமாயிற்று. தாகம் மிகுந்து நாவும் தொண்டையும் வறண்டன. ஏது? இனி வெகு நேரம் பொறுக்க முடியாது. கத்தியை எட்டி எடுத்து, கட்டுக்களை அறுத்துக்கொண்டு, புறப்பட்டுப் போய்ப் பார்க்க வேண்டியதுதான். கப்பலில் எங்கேயாவது குடிதண்ணீர் வைத்திராமலா இருப்பார்கள்?

வந்தியத்தேவன் சுற்றுமுற்றும் பார்த்தான். ஒரு மூலையில் சில தேங்காய்கள் கிடந்தன. ஆகா! வெண்ணெய் இருக்க நெய்க்கு அழுவானேன்? அந்தத் தேங்காய்களைக் கொண்டு பசி, தாகம் இரண்டையும் தீர்த்துக்கொள்ளலாமே?

கையின் கட்டுக்களை வந்தியத்தேவன் நன்றாய்த் தளர்த்தி விட்டுக் கொண்டான். கத்தியை எட்டி எடுக்கக் கையை நீட்டியும் விட்டான்.



அச்சமயம் காலடிச் சத்தம் கேட்டது. கதவு திறக்கும் சத்தமும் கேட்டது. நீட்டிய கையை மடக்கிக்கொண்டான்.

முன்னொரு தடவை வந்து விட்டுப் போன மந்திரவாதி ரவிதாஸனும் அவனுடைய தோழனும் உள்ளே வந்தார்கள். இருவரும் வந்தியத்தேவனுக்கு இருபுறத்திலும் நின்றுகொண்டார்கள்.

"கப்பல் பிரயாணம் எப்படி, அப்பா! சுகமாயிருக்கிறதா?" என்று ரவிதாஸன் கேட்டான்.

வந்தியத்தேவன், "தாகம் கொல்லுகிறது; கொஞ்சம் தண்ணீர்!" என்று பேச முடியாமல் பேசினான்.

"ஆ! எங்களுக்கும் தாகந்தான். அந்தப் பாவிகள் கப்பலில் தண்ணீர் வைக்கவில்லையே?" என்றான் ரவிதாஸன்.

"காளிக்கு எல்லாரையும் விட அதிக தாகமாயிருக்கிறது. இரத்த தாகம்!" என்றான் இன்னொருவன்.

"என்னை ஞாபகமில்லையா, தம்பி! மறந்து விட்டாயா? கடம்பூர் அரண்மனையில் குரவைக் கூத்துக்குப் பிறகு தேவராளன் வந்து வெறியாட்டம் ஆடினானே? 'காளித்தாய் பலி கேட்கிறாள்; ஆயிரம் வருஷத்து அரச குல இரத்தம் கேட்கிறாள்' என்று ஆவேசம் வந்து சொன்னானே...?

"ஆ! இப்போது ஞாபகம் வருகிறது! நீதான் அந்த தேவராளன்!" என்று வந்தியத்தேவன் முணுமுணுத்தான்.

"ஆமாம்; நான்தான்! ஆயிரம் வருஷத்து அரசகுமாரனைக் காளிக்குப் பலி கொடுக்கலாம் என்றுதான் இலங்கைக்கு வந்தோம். அது சாத்தியப்படவில்லை. அந்த வீர வைஷ்ணவனை வைகுண்டத்துக்கு அனுப்பப் பார்த்தோம். அதுவும் முடியவில்லை. நீயாவது வலுவில் வந்து சேர்ந்தாயே? மிக்க சந்தோஷம். இப்போதைக்குக் குறுநில மன்னர் குலத்து இரத்தத்தோடு காளி திருப்தி அடைய வேண்டியதுதான்!" என்றான் தேவராளன்.

"அப்படியானால் ஏன் தாமதிக்கிறீர்கள்?" என்று வந்தியத்தேவன் கேட்டான்.

"வீர வாலிபனாகிய உன்னைக் கண்ட இடத்தில் பலி கொடுத்து விடலாமா! கரை சேர்ந்த பிறகு எல்லாப் பூசாரிகளையும் அழைத்து உற்சவம் கொண்டாடியல்லவா பலி கொடுக்க வேண்டும்? முக்கியமாகப் பூசாரிணி வரவேண்டுமே?"

"பூசாரிணி யார்?"

"யார் என்று உனக்குத் தெரியாதா? பழுவூர் இளையராணிதான்!"

வந்தியத்தேவன் சிறிது யோசித்து விட்டு, "உங்களுக்கு உண்மையில் அத்தகைய எண்ணம் இருந்தால் உடனே கொஞ்சம் தண்ணீர் கொடுங்கள். இல்லாவிடில் இங்கேயே தாகத்தினால் செத்துப் போவேன்!" என்றான்.

"தண்ணீர் இல்லையே, தம்பி!"

"நீதான் மந்திரவாதியாயிற்றே?"

"நன்றாகச் சொன்னாய்! மந்திரம் போட்டிருக்கிறேன், பார்! இப்போது கப்பல் அசையாமல் நிற்கிறது தெரிகிறதல்லவா? இரவுக்குள் சுழற்காற்று அடிக்கப் போகிறது. மழையும் வரும்!"

"மழை வந்தால் எனக்கு என்ன பயன்? நீங்கள் மேல் தட்டில் இருப்பீர்கள்! நான் இங்கே..."

"நீயும் மேல் தட்டுக்கு வரலாம். நாக்கை நீட்டி நீர் அருந்தித் தாகத்தைப் போக்கிக் கொள்ளலாம். நாங்கள் சொல்கிறபடி கேட்பதாயிருந்தால்..."

"என்ன சொல்லுகிறீர்கள்?"

"அந்த அராபியப் பிசாசுகளைச் சமுத்திரராஜனுக்குப் பலி கொடுக்க வேண்டுமென்று சொல்லுகிறோம்."

"ஏன்?"

"அவர்கள் கலிங்க நாட்டுக்கு இந்தக் கப்பலைக் கொண்டு போக வேண்டும் என்கிறார்கள். நாங்கள் கோடிக்கரையிலாவது நாகப்பட்டினத்திலாவது இறங்க வேண்டும் என்கிறோம்..."

"அவர்கள் ஆறு பேர், அதோடு

பெரும் முரடர்களாயிருக்கிறார்களே?

"அவர்களில் மூன்று பேர் தூங்கு கிறார்கள்; மற்ற மூன்று பேர் உறங்கி வழிகிறார்கள். நாம் மூன்று பேரும் தூங்குகிற மூன்று பேரையும் முதலில் வேலை தீர்த்து விட்டால், அப்புறம் மூன்று பேருக்கு மூன்று பேர் சமாளிக்கலாமே?"

வந்தியத்தேவன் சும்மாயிருந்தான்.

"என்ன, தம்பி, சொல்கிறாய்? எங்கள் யோசனைக்குச் சம்மதித்தால் உன் கட்டை அவிழ்த்து விடுகிறோம்."



ளவரசரின் முகம் வந்தியத்தேவன் மனக்கண் முன்னால் வந்துநின்றது. ஆம்; அவர் இதை ஒப்புக் கொள்ள மாட்டார். தூங்குகிறவர்களைக் கொல்வதற்கு ஒரு நாளும் உடன்பட மாட்டார்.

"என்னால் முடியாது; தூங்குகிறவர்களைத் தாக்கிக் கொல்வது நீசத்தனம்."

"முட்டாளே! சோழ நாட்டு மாலுமிகள் தூங்கிக் கொண்டிருந்தபோது தான் இந்த அராபியர்கள் அவர்களைத் தாக்கிக் கொன்றார்கள்."

"மற்றவர்கள் இழிவான செயல் புரிந்தால் நானும் அவ்வாறு ஏன் செய்ய வேண்டும்?"

"சரி, உன் இஷ்டம்!" என்றான் ரவிதாஸன். அருகில் கிடந்த ஆயுதக் கும்பலிலிருந்து ஒரு கூரிய பட்டாக் கத்தியை அவன் எடுத்துக்கொண்டான். தேவராளனோ, நுனியில் இரும்புப் பூண் கட்டியிருந்த சிறிய உலக்கை போன்ற தடியை எடுத்துக்கொண்டான்.

இருவரும் அங்கிருந்து சென்றார்கள். ஆனால் அறையின் கதவைச் சாத்தி வெளியில் தாள் போடவில்லை.

அவர்கள் போன உடனே வந்தியத்தேவன் கையை நீட்டிக் கத்தி ஒன்றை எடுத்துத் தன்னைக் கட்டியிருந்த கயிறுகளை அறுத்துக்கொண்டான். குதித்து எழுந்து சென்று, மூலையில் கிடந்த தேங்காய் ஒன்றை எடுத்து உடைத்தான். இளநீரை வாயில் விட்டுக்கொண்டான். மிச்சமிருந்த தேங்காய்களை ஒரு சாக்கைப் போட்டு மூடினான்.

பிறகு, போருக்குத் தகுதியான நல்ல வாள் ஒன்றைக் கையில் எடுத்துக் கொண்டான். எந்த நிமிஷத்திலும் வெளியில் பாய்ந்து செல்வதற்கு ஆயத்தமாயிருந்தான்.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் 'தட்' 'தட்' என்று இருமுறை சத்தம் கேட்டது. இரு உடல்கள் கடலில் எறியப்பட்டன என்று அறிந்து கொண்டான். உடனே பயங்கரமான பெருங்கூச்சல்; கைகலப்பு. கத்திகள் மோதும் சத்தம். – எல்லாம் மேல் தட்டிலிருந்து வந்தன.

வந்தியத்தேவன் கையில் பிடித்த கத்தியுடன் பாய்ந்தோடினான். ரவிதாஸனையும் தேவராளனையும் மற்ற நாலு அராபியர்களும் தாக்கி நெருக்கிக்கொண்டிருந்தார்கள். நெருக்கப்பட்டவர்களின் நிலை நெருக்கடியான கட்டத்தை அடைந்திருந்தது. வந்தியத்தேவன் பெருங்கூச்சல் போட்டுக்கொண்டு ஓடினான். அராபியர்களில் ஒருவன் திரும்பி அவனைத் தாக்க வந்தான். வந்தியத்தேவனுடைய கத்தி அராபியனுடைய கத்தியைத் தாக்கி அது கடலில் போய் விழச்செய்தது; அராபியனுடைய முகத்தில் ஒரு வெட்டுக்காயத்தையும் உண்டாக்கிற்று. இரத்தம் வழிந்த பயங்கர முகத்தையுடைய அராபியன் கைமுட்டியை ஓங்கிக்கொண்டு வந்தியத்தேவனுடைய மார்பில் குத்த வந்தான். வந்தியத்தேவன் சிறிது நகர்ந்து கொண்டான். அராபியன் தடாலென்று விழுந்தான். அவன் விழுந்த வேகத்தினால் இடம் பெயர்ந்த பாய்மரக் குறுக்குக் கட்டை ஒன்று அவன் தலையில் படார் என்று விழுந்தது.

இன்னோர் அராபியனோடு வந்தியத்தேவன் சிறிது நேரம் துவந்த யுத்தம் செய்து அவனைக் கடலில் தள்ளினான்.



ந்திரவாதி ரவிதாஸனும் தேவராளனும் போர்த்திறமை வாய்ந்தவர்கள் அல்ல. ஆகையால் அராபியர் இருவருடன்

தனித்தனிச் சண்டை போடுவதே அவர்களுக்குக் கஷ்டமாயிருந்தது. நேரமாக ஆக களைப்படைந்து வந்தார்கள். அச்சமயம் கடலில் ஏதோ விழுந்த சத்தம் கேட்டு அராபியர் இருவரும் தங்கள் தோழர்களின் கதி என்னவோ என்று திரும்பிப் பார்த்தார்கள். அதுதான் சமயம் என்று ரவிதாஸனும் தேவராளனும் அவர்களைத் தீர்த்துக் கட்டினார்கள்.

எல்லாம் முடிந்ததும் வெற்றி பெற்ற மூவரும் இளைப்பாற உட்கார்ந்தார்கள்.

"அப்பனே! நல்ல சமயத்தில் வந்தாய்! எப்படி வந்தாய்?" என்று கேட்டான் ரவி



தாஸன்.

"நீ ஏதோ மந்திரம் போட்டாய் போலிருக்கிறது. என்னைக் கட்டியிருந்த கட்டுக்கள் தாமாகவே அவிழ்ந்து கொண்டன. கையில் இந்தக் கத்தி வந்து ஏறியது!" என்றான் வந்தியத்தேவன்.

"உன் தாகம் என்ன ஆயிற்று?"

"தேங்காய் ஒன்று என் தலைக்கு மேலாக வந்தது. அதுவாக உடைத்துக் கொண்டு என் வாயில் கொஞ்சம் இளநீரை ஊற்றியது!"

"ஓகோ! நீ வெகு பொல்லாதவன்!" என்றான் தேவராளன். இருவரும் விழுந்து விழுந்து சிரித்தார்கள்.

"தம்பி! உன்னைப் பரிசோதித்தோம். வேண்டுமென்றே உன் கட்டுக்களைத் தளர்த்தி விட்டிருந்தோம். ஆயுதங்களைப் பக்கத்தில் வைத்திருந்தோம். தேங்காய்களை உனக்குத் தெரியும்படி போட்டிருந்தோம்!" என்றான் ரவிதாஸன்.

இவையெல்லாம் பொய்யா, உண்மையா என்று வந்தியத்தேவனால் தெரிந்து கொள்ள முடியவில்லை. சற்று மௌனமாயிருந்தான்.

"அப்பனே! யோசித்துச் சொல்! நீ உயிர் பிழைக்க வேண்டுமா? பிழைத்துக் கரை சேர்ந்து உன் உற்றார் உறவினர் முகத்தைப் பார்க்க வேண்டுமா? பொருளும் போகமும் பதவியும் பட்டமும் பெற்று வாழ வேண்டுமா? விருப்பமிருந்தால் சொல்; எங்களுடன் சேர்ந்து விடு! இவ்வளவு நலங்களையும் அடையலாம்" என்றான் ரவிதாஸன்.

"தூங்கிக் கொண்டிருந்த மனிதர்களைக் கொன்றீர்கள் அல்லவா?" என்று வந்தியத்தேவன் கேட்டான்.

"இரண்டு பேரைத்தான் கொல்ல முடிந்தது. மற்றவன் விழித்துக்கொண்டான். நீ முன்னமே எங்களுடன் சேர்ந்திருந்தால், இன்னும் சிறிது கலபமாய்ப் போயிருக்கும்."

"தூங்கிக் கொண்டிருப்பவர்களைக் கொல்லுகிறது எந்த தர்மத்தில் சேர்ந்தது? அவ்விதம் செய்ய எப்படி உங்களுக்கு மனம் வந்தது?"

"இந்தக் கடுகுக்கு நீ பயப்பட்டால் பெரிய பெரிய பூசணிக்காய்களை எப்படி விழுங்குவாய்? எங்களுடன் நீ சேர்வதாயிருந்தால்..."

"உங்களுடன், உங்களுடன் என்கிறீர்களே? நீங்கள் யார்?"

ரவிதாஸன் தேவராளனைப் பார்த்து "இனி இவனிடம் இரகசியம் தேவை இல்லை. ஒன்று, இவன் நம்முடன் சேர வேண்டும்; அல்லது கடலுக்குப் பலியாக வேண்டும். ஆகையால் இவனிடம் எல்லாம் சொல்லி விடலாமே!" என்றான்.

"எல்லாவற்றையும் நன்றாய்ச் சொல்லு!" என்றான் தேவராளன்.

"கேள், தம்பி! நாங்கள் வீர பாண்டிய மன்னருடைய 'ஆபத்துதவிகள்'. அவரைக் காத்து நிற்பதாக ஆணையிட்டுச் சபதம் செய்தவர்கள்..."

"உங்களால் அது முடியவில்லை! ஆதித்த கரிகாலர் வெற்றி பெற்றார்..."

"எப்படி வெற்றி பெற்றார்? ஒரு பெண் பிள்ளையின் மூடத்தனத்தினால் வெற்றி பெற்றார். அவள் தன் மோக வலையின் சக்தியில் அதிக நம்பிக்கை வைத்திருந்தாள். அந்தச் சோழ குல நாகப் பாம்பைத் தன்னால் படம் எடுத்து ஆடச் செய்ய முடியும் என்று நம்பினாள். பாம்பு படம் எடுத்து ஆடத்தான் ஆடியது. ஆனால் அதன் விஷப் பல்லின் சக்தியை நடுவில் காட்டி விட்டது. எங்கள் மன்னரின் தலை புழுதியில் உருண்டது. தஞ்சாவூர் வரையில் கொண்டு போனார்கள். தலையைப் பல்லக்கில் வைத்து ஊர்வலம் விட்டார்கள்! ஆகா! தஞ்சாவூர்! தஞ்சாவூர்! அந்த நகரம் அடையப் போகிற கதியைப் பார்த்துக் கொண்டிரு தம்பி!"

இவ்விதம் கூறியபோது ரவிதாஸனுடைய சிவந்த அகன்ற கண்கள் மேலும் அகன்று அனலைக் கக்கின. அவனுடைய உடல் நடுங்கியது. பல் வரிசைகள் ஒன்றோடு ஒன்று உராயும் சத்தம் நறநறவென்று பயங்கரமாய்க் கேட்டது. தேவராளனுடைய தோற்றமும்

அவ்விதமே கோரமாக மாறியது.

''போனது போயிற்று. அதற்காக இனிமேல் என்ன செய்யப் போகிறீர்கள்? இறந்து போன வீரபாண்டியனை உயிர்ப்பிக்க முடியுமா?''

''வீரபாண்டியரை உயிர்ப்பிக்க முடியாது. அவ்வளவு சக்தி என்னுடைய மந்திரத்துக்குக் கூடக் கிடையாது. ஆனால், அவரைக் கொன்றவனையும் அவனைச் சேர்ந்தவர்களையும் பூண்டோடு அழித்துப் பழிக்குப் பழி வாங்குவோம். சோழ குலப் பாம்பு வர்க்கத்தைக் குஞ்சு குழந்தைகள் உன்பட நாசம் செய்வோம். எங்களுடன் நீ சேருகிறாயா? சொல்!''

''சோழ குலத்தை நாசம் செய்த பிறகு? அப்புறம் என்ன செய்வீர்கள்?''

''எங்கள் மகாராணி யாருக்குப் பட்டம் சூட்டச் சொல்கிறாளோ, அவனுக்குச் சூட்டுவோம்...''

''மகாராணி யார்?''

''தெரியாதா, தம்பி! பழுவூர் இளைய ராணியாக இப்போது நடிப்பவள்தான்!''

''அப்படியானால் மதுராந்தகருக்கு...''

''அவனும் ஒரு பாம்புக்குட்டிதானே?''

''பழுவேட்டரையர்...?''



"ஆ! அந்தக் கிழவனை எங்கள் அரசனாக்குவோம் என்றா நினைக்கிறாய்? அவனுடைய செல்வாக்கையும் பணத்தையும் உபயோகப்படுத்துவதற்காக..."

"உங்கள் மகாராணி அவன் வீட்டில் இருக்கிறாளாக்கும்!"

"நன்றாகத் தெரிந்து கொண்டாயே? நல்ல யூகசாலி நீ!"

"வீர பாண்டியனுடைய மரணத்துக்குக் காரணம் ஒரு பெண்பிள்ளை என்று சொன்னீர்களே?"

"அதுவும் பழுவூர் ராணிதான்! போரில் காயம்பட்டுக் கிடந்த வீரபாண்டியரைத் தான் காப்பாற்றுவதாக அவள் வாக்களித்தாள். அதை நிறைவேற்றவில்லை. அவளே துரோகம் செய்துவிட்டாள் என்று நினைத்து அவளை உயிருடன் கொளுத்த நினைத்தோம். பழிக்குப் பழி வாங்குவதாக எங்களுடன் சேர்ந்து அவளும் சபதம் செய்தபடியால் அவளை உயிரோடு விட்டோம். இன்று வரையில் அவள் வாக்கை நிறைவேற்றி வருகிறாள். ஓ! அவளுடைய உதவி மட்டும் இல்லாவிட்டால் நாங்கள் இவ்வளவு செய்திருக்க முடியாது."

"இன்னும் நீங்கள் ஒன்றும் சாதித்து விடவில்லையே?"

"கொஞ்சம் பொறு! அப்பனே! பார்த்துக் கொண்டேயிரு!" என்றான் ரவிதாஸன்.

"நம்மிடமிருந்து இவன் எல்லாம் தெரிந்துகொண்டான். நாம் கேட்டதற்கு மறுமொழி ஒன்றும் சொல்லவில்லையே?" என்றான் தேவராளன்.

"தம்பி! என்ன சொல்கிறாய்? எங்களுடன் சேர்கிறாயா! யார் கண்டது? உனக்கே ஒருவேளை அதிர்ஷ்டம் அடிக்கலாம். நீயே ஒருவேளை தென் தமிழகத்தின் வீர சிம்மாசனத்தில் ஏறினாலும் ஏறலாம். என்ன சொல்கிறாய்?"

சில காலத்துக்கு முன்னேயென்றால் வந்தியத்தேவன் "ஆஹா! உங்களுடன் சேர்கிறேன்!" என்று சொல்லியிருப்பான். ஆனால் இளவரசருடன் மூன்று நாள் பழகியது அவனுடைய மனப்போக்கில் ஒரு பெரிய மாறுதலை உண்டு பண்ணியிருந்தது. பொய் புனை சுருட்டுகள், சமயோசித தந்திரங்கள் - இவற்றில் அவனுக்குப் பற்று விட்டுப் போயிருந்தது. ஆகையால் பேச்சை மாற்ற விரும்பி, "இந்தக் கப்பலை எப்படிப் பிடித்தீர்கள்? சற்றுமுன் யமனுலகுக்கு அனுப்பிய அரபு நாட்டாருடன் எப்படிச் சிநேகமானீர்கள்!" என்று கேட்டான்.

"எல்லாம் என்னுடைய மந்திர சக்தி, அப்பனே! திரிகோண மலையில் இவர்களிடமிருந்துதான் நாங்கள் குதிரைகளை விலைக்கு வாங்கினோம். அந்தக் குதிரைகளைக் கொண்டுதான் உங்களைத் தொடர்ந்து முன்னும் பின்னுமாக வந்துகொண்டிருந்தோம். யானைஇறவுத் துறையில் இளவரசர் இறங்கி ஓடியதைப் பார்த்தோம். அவருக்கு முன்னால் இங்கு வந்து விடத் தீர்மானித்துக் குறுக்குவழியில் வந்து சேர்ந்தோம். இங்கே வந்து பார்த்தால், எங்கள் பழைய சிநேகிதர்கள் இந்தக் கப்பலைக் கைப்பற்றியிருந்தார்கள். அவர்கள் ஏறி வந்த கப்பல் முல்லைத் தீவுக்கு அருகில் கரை தட்டி உடைந்து போய் விட்டதாம். இங்கே ஒளிந்திருந்து இந்தக் கப்பலைக் கைப்பற்றிக் கொண்டார்கள். கடலோரத்தில் வழி காட்டுவதற்காக எங்களையும் வருகிறீர்களா என்று கேட்டார்கள். பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலாயிற்று."

"அது எப்படி?"

"அந்தச் சோழ குலத்து இளநாகம் சோழசேநாதிபதியுடன் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டோம். எப்படியும் சோழ நாட்டுக்கு அவன் திரும்பி வந்து சேர்வான் என்று அறிந்துகொண்டோம்.

அது மட்டுமல்ல, தம்பி! இலங்கையில் ஊமைப் பெண் பூதம் ஒன்று இருக்கிறது. அந்தப் பூதம் எங்கள் மந்திரத்துக்குப் பதில் மந்திரம் போட்டு அருள்மொழிவர்மனைக் காப்பாற்றிக் கொண்டிருந்தது. ஆனால் சோழ நாட்டுக்கு அது வராது...''

வந்தியத்தேவன் அன்றிரவு அநுராதபுரத்தில் நடந்ததையெல்லாம் நினைத்துக்கொண்டான்.

ரவிதாஸன் திடீரென்று சிரித்தான்.

"இது என்ன சிரிப்பு? எதைக்கண்டு?" என்றான் வந்தியத்தேவன்.

"ஒன்றுமில்லை, தம்பி! இந்த அரபு நாட்டாரின் சுபாவத்தை எண்ணினேன். சிரிப்பு வந்தது. இவர்கள் இவ்வளவு முரட்டு மனிதர்கள் அல்லவா? மனிதர்களைக் கொல்வது இவர்களுக்கு வாழைக்காயை அரிவது போன்றது. ஆனால் குதிரைகளிடம் இவர்களுக்கு அளவில்லாத அபிமானம். குதிரைகளின் கால் குளம்பில் இரும்புப் பூண் அடித்துத்தான் அவர்கள் நாட்டில் குதிரைகளை ஓட்டுவார்களாம். நாம் குதிரைகளை வெறுங்காலுடன் ஓடச் செய்கிறோமாம். அதனால் நாம் கருணையற்ற, அநாகரிக, மிருகங்களுக்கும் கேடான மனிதர்களாம்! நம்மிடம் குதிரைகளை விற்பதே பாவமாம்...! இன்று காலையில் என்ன நடந்தது, தெரியுமா...?''

"சொல்லுங்கள்!''

"கப்பலில் எல்லாரும் ஏறிக்கொண்டோம். பாய்மரங்களை விரித்தோம். கப்பல் கிளம்பி விட்டது. அப்போது கரையில் ஒரு குதிரையின் காலடிச் சத்தம் கேட்டது. அவ்வளவுதான். முல்லைத் தீவில் உடைந்த கப்பலிலிருந்து தப்பிக் கரையேறிய அவர்களுடைய குதிரைகளில் ஒன்றாயிருக்கலாம் என்று சந்தேகித்தார்கள். அவர்களில் ஒருவன் கப்பலிலிருந்து இறங்கிப் பார்த்து விட்டுத்தான் வருவேன் என்றான். எங்களையும் அவனுடன் சேர்த்து அனுப்பினார்கள்...''

"பிறகு?''

"குதிரை அகப்படவில்லை, தம்பி! நீ அகப்பட்டாய்! எவ்வளவு நல்லதாய்ப் போயிற்று. பார்! இந்தக் குதிரைப் பிரியர்களை வேலை தீர்ப்பதற்கு எவ்வளவு சௌகரியமாய்ப் போயிற்று?''

"எல்லாம் சரிதான்; இந்தப் பிள்ளை நம்முடைய கேள்விக்கு இன்னும் விடை சொல்லவில்லை" என்று ஞாபகப்படுத்தினான் தேவராளன்.

"சொல்லுகிறேன், ஐயா! சொல்லுகிறேன். நான் சோழ குலத்திற்கு ஊழியம் செய்ய ஏற்றுக் கொண்டவன். ஒருநாளும் உங்களுடன் சேரமாட்டேன்...''

"வேளக்காரப் படையைச் சேர்ந்திருக்கிறாயா? சத்தியம் செய்து கொடுத்திருக்கிறாயா!''

"அதெல்லாம் இல்லை.''

"பின்னே என்ன தயக்கம்? நீ போர் வீரன். எந்தக் கட்சியில் அதிக அநுகூலம் இருக்கிறதோ, அதில் சேர வேண்டியதுதானே!''

சோழ குலத்தாருடன் உறவு பூணுவதற்கு எல்லாச் சபதங்களைக் காட்டிலும் பலம் அதிகம் கொண்ட காரணம் தனக்கு இருக்கிறது என்பதை வந்தியத்தேவன் அவர்களிடம் சொல்லவில்லை. இளையபிராட்டியின் கடைக்கண் பார்வையையும் முல்லை நிகர்ப் புன்னகையையும் காட்டிலும் சோழ குலத்தாருக்கு உயிரைக் கொடுக்க வேறு காரணம் தனக்கு வேண்டுமா? அப்புறம் இளவரசரின் இணையில்லா சிநேகம் வேறு இருக்கிறது! அவருடன் ஒரு தடவை சிநேகமானவன் மறுபடி மாற முடியுமா?

''எது எப்படியிருந்தாலும், உங்களுடைய கொலைகாரக் கூட்டத்தில் நான் சேர மாட்டேன்!'' என்றான் வந்தியத்தேவன்.

''அப்படியானால் உன் உயிரைச் சமுத்திர ராஜனுக்குப் பலியிட ஆயத்தப்படு!'' என்றான் ரவிதாஸன்.

(தொடரும்)



• அனந்தசயனம் ஐயங்கார்

இவர் இல்லாமல் எந்தக் காரியமும் நடப்பதில்லை. புதிய ஸூபரிண்டெண்ட் யார் வந்தாலும் இவரிடம் கேட்டுத் தெரிந்து கொண்டுதான் தமது வேலையைச் செய்வது வழக்கம்.

கடைசியாக வந்த ஸூபரிண்டெண்டு இவருடைய திறமையையும் அநுபவத்தையும் பார்த்து வியந்து 'பிரமோஷ'னுக்கு விண்ணப்பம் போடச் சொன்னார். அவரும் போட்டார். ஸூபரிண்டெண்ட் மேற்படி மனுவின் பின்னால் ஒரு பக்கம் எழுதிச் சிபாரிசு செய்து மேலே அனுப்பினார்.

# ஆங்கிலமே!

சென்னை சர்க்காரின் கல்வி இலாகாவைச் சேர்ந்த ஒரு கிளைக் காரியாலயத்தில் சில வருஷத்துக்கு முன்னால் ஒரு 'லோயர் டிவிஷன்' குமாஸ்தா தம்மை 'அப்பர் டிவிஷன்' குமாஸ்தா ஆக்க வேண்டும் என்று மனுப் போட்டார். அவர் இருபத்திரண்டு வருஷம் ஸர்வீஸ் ஆனவர். அவருக்குப் பின்னால் வந்தவர்கள் பலர் 'பிரமோஷன்' ஆகி மேலே போய் விட்டார்கள். இவர் மட்டும் இருபத்திரண்டு வருஷமாக ஒரே நாற்காலியில் உட்கார்ந்து தேய்த்து, ஒரே மேஜையை உபயோகித்து அந்த மேஜையில் எள் போட்டால் எள் விழாதபடி மைப் பொட்டுக்களைச் சிந்தியிருந்தார்! இதன் காரணமாக, அந்த ஆபீஸில்

இலாகாவின் உதவி டைரக்டர் ''இந்த மனுவை ஒப்புக் கொண்டால் விபரீதம் வந்துவிடும்'' என்று எழுதி, அதற்குக் காரணங்களை அரைப்பக்கம் எழுதினார். பிறகு இலாகாத் தலைவராகிய டைரக்டர் மனுவை அங்கீகரிப்பதற்குச் சாதகமாக முக்கால் பக்கம் எழுதினார்.

பிறகு, அம் மனு கல்வி இலாகா காரியதரிசியான ஐ.சி.எஸ்.காரரிடம் போயிற்று. அவர் திவ்யமான விக்டோரியா காலத்து இங்கிலீஷ் நடையைக் கையாண்டு, 'இத்தகைய கேஸ்களில் விதிகளைத் தளர்த்திவிட வேண்டியதுதான்' என்று சொல்லி,

பிளேடோ முதல் லார்ட் வேவல் வரையில் சொல்லியிருப்பதை எடுத்துக் காட்டி ஒரு அரிய கட்டுரை வரைந்து அனுப்பினார். அதை வரவு செலவு இலாகா காரியதரிசி இன்னொரு ஐ.சி.எஸ். பார்த்துவிட்டு, அவ்வளவு வாதங்களையும் சின்னாபின்னாப் படுத்தி இரண்டு பக்கம் எழுதியதுடன், ஷேக்ஸ்பியர் நாடகத்திலிருந்து மேற்கோளும் காட்டியிருந்தார். சென்னை அரசாங்கத்தின் தலைமைக் காரியதரிசி (சீப் ஸெக்ரடரி)க்கு மேற்படி விஷயம் போனபோது தஸ்தவேஜுக் கட்டை ஒரு பியூன் தூக்க முடியாமல் இரண்டு பேர் தூக்கிக் கொண்டு வைத்தார்கள். அவர் "இந்த ஐ.சி.எஸ். காரியதரிசி சொல்வதிலும் உண்மையிருக்கிறது.

# அட, அழகே!

மற்றொருவர் சொல்வதிலும் நியாயம் இருக்கிறது. ஆகவே, கல்வி இலாகா அமைச்சர்தான் முடிவு செய்ய வேண்டும்" என்று எழுதிவிட்டு, பிளேடோவின் எடுத்துக்காட்டிலும் ஷேக்ஸ்பியர் எடுத்துக் காட்டிலும் மேற்படி காரியதரிசிகள் செய்துள்ள சிறு பிழைகளைச் சுட்டிக்காட்டியிருந்தார். பக்கத்தில் மேற்படி ஆசிரியர்களின் புத்தகங்களை வைத்துக் கொண்டு சரி பார்த்துவிட்டு யாதாஸ்து எழுதுவது நல்லது என்றும் சொல்லியிருந்தார்!

கல்வி அமைச்சர் புதியவர். ஆகையால் "நமக்கு என்னத்திற்கு இந்தப் பொறுப்பு?" என்று பிரதம அமைச்சருக்கு அனுப்பினார். பிரதம அமைச்சர் தமது அந்தரங்கக் காரியதரிசியின் குறிப்பை யொட்டி அமைச்சரவையிலேயே அதை வைத்து விட்டார். அமைச்சரவையில் ஒருவர் மனுதாரராகிய குப்புசாமி என்பவரின் பெயர் சந்தேகாஸ்பதமா யிருக்கிறதென்றும், அவருடைய சாதி தெரிந்தால் நல்லது என்றும் கூறினார். அதன்பேரில் தஸ்தவேஜிக் கட்டு புனராலோசனைக்காக அனுப்பப்பட்டது. மறுபடியும், காரியாலய சூபரின்டெண்டிலிருந்து அமைச்சரவை வரையில் தஸ்தவேஜிக் கட்டு பிரயாணம் செய்தது. யாதாஸ்துகள் சேர்ந்து சேர்ந்து ஒரு பாரம் நிறையுள்ளதாகி விட்டது. கடைசியாக, அமைச்சரவை, "பிரமோஷன் இல்லை" என்று தீர்மானித்தது. அதற்குள் மேற்படி குமாஸ்தாவின் உத்தியோக காலம் முடிந்து பென்ஷன் பெற்றுக் கொண்டு ரிடையர் ஆகி விட்டார். அவருடைய பிரமோஷனைப் பற்றிய தஸ்தவேஜிக் கட்டு ஒரு பீரோவை அடைத்துக் கொண்டு இன்னமும் மேற்படி காரியாலயத்தில் இருந்து வருகிறது.

மேற்படி குப்புசாமியின் மனுவை ஒப்புக் கொண்டு லோயர் டிவிஷன் குமாஸ்தா பதவியிலிருந்து அப்பர் டிவிஷன் குமாஸ்தா பதவிக்குத்

தூக்கிப் போட்டிருந்தால் மாதம் பதினைந்து ரூபாய் அதிகச் சம்பளம் கொடுக்க நேர்ந்திருக்கும். மூன்று வருஷங்களில் சுமார் அறுநூறு ரூபாய்தான் சர்க்காருக்கு அதிகச் செலவாகியிருக்கும்.

மேற்படி கடிதப் போக்குவரவில் ஐ.சி.எஸ். உத்தியோகஸ்தர்களும் அமைச்சர்களும் செலவு செய்த நேரத்துக்கு அவர்கள் வாங்கியிருக்கும் சம்பளத்தைக் கணக்கிட்டுப் பார்த்தால் குறைந்த பட்சம் பதினாயிரம் ரூபாய் செலவாகியிருக்கிறதென்று மதிப்பிடலாம்!

எப்படி யிருக்கிறது சர்க்கார் இலாகாக்களின் காரிய நடைமுறை?

இந்த நிகழ்ச்சியை மனதில் வைத்துக் கொண்டு, புதுடில்லி இந்திய சர்க்கார் செக்ரட்டேரியட்டில் வீண் வேலையைக் குறைப்பது பற்றி ஸ்ரீ அனந்தசயனம் ஐயங்கார் கமிட்டியின் சிபாரிசுகளைப் படிக்க வேண்டும். மேற்படி கமிட்டியார், பைல்களில் பல உத்தியோகஸ்தர்கள் வளைத்து வளைத்து குறிப்பு எழுதுவதினால் காலமும் பணமும் வீண் விரயம் ஆவதாகக் குறிப்பிட்டிருக்கிறார்கள். அது மட்டுமல்ல; சில ஐ.சி.எஸ். காரியதரிசிகள் ஆங்கில நடை விஷயத்தில் மிக்க கவனம் செலுத்தி, கீழே குறிப்பு எழுதுகிறவர்களின் நடையைத் திருத்தி அழகு படுத்துகிறார்களாம்! "அட கஷ்ட காலமே! அழகான இங்கிலீஷ் எழுதுவதற்காகவா இவர்களுக்குக் மூவாயிரம், நாலாயிரம் சம்பளம் கொடுக்கிறோம்!" என்று கமிட்டியார் கேட்டிருக்கிறார்கள். காலஞ் சென்ற மெக்காலேயின் ஆவிக்கு மட்டும் இது தெரியுமானால், அது மறுபடியும் தூக்குப் போட்டுக் கொண்டு இன்னொரு தடவை உயிரை விடும் என்பதில் சந்தேகமில்லை! நல்ல அழகான இங்கிலீஷ் எழுதுவதற்கு இல்லாவிட்டால் வேறு எதற்காகத்தான் மூவாயிரம் நாலாயிரம் சம்பளம் கொடுக்கிறதாம்? நல்ல இங்கிலீஷ் தேவை இல்லையென்றால் சாதாரண காரியாலய குமாஸ்தாக்களே விஷயங்களைப் பைஸல் செய்து விடுவார்களே!

எந்த விஷயத்தையும் ஒரு இலாகாவின் உதவிக் காரியதரிசி, பிறகு காரியதரிசி, இன்னொரு இலாகாவின் உதவிக் காரியதரிசி, பிறகு அந்த இலாகா காரியதரிசி இப்படிப் பலர் குறிப்பு எழுதிப் பைஸல் செய்ய வேண்டியிருப்பதால் காலதாமதம் ஆவதோடு யாருக்கும் பொறுப்பு இல்லாமல் போகிறது என்றும் மேற்படி கமிட்டியார் கூறியிருக்கிறார்கள்? அட கடவுளே! இதுகூடத் தெரியாதா? எந்தக் காரியத்தையும் சீக்கிரத்தில் பைஸல் செய்யக் கூடாது, யாருக்கும் தனிப் பொறுப்பு இருக்கக் கூடாது என்பதுதானே அதிகாரவர்க்கத்தின் நாலு வேத ஆறு சாஸ்திர பதினெண் புராண அடிப்படைக் கொள்கை! அதனால்தானே அன்னிய நாட்டிலிருந்து இரசாயன எரு வாங்கியதில் ஏற்பட்ட ஒரு கோடி ரூபாய் நஷ்டத்துக்கு யார் பேரிலும் குறிப்பாகப் பொறுப்புக் கட்ட முடியவில்லை!

அதிகார வர்க்கமே! உனக்கு இந்தக் கதியா ஏற்பட்டு விட்டது! ஆங்கிலமே! அழகான ஆங்கிலமே! உன்னை இப்படியா அலட்சியம் செய்கிறார்கள்? "கலி முற்றி விட்டது!" என்பதில் சந்தேகம் என்ன?

**(கல்கி 25.2.1951)**



• ஆமையினம் பற்றிய விழிப்புணர்வுப் பேச்சு!



• முட்டையிட வந்த ஆமை...

**மார்னிங் வாக், ஈவ்னிங் வாக் எல்லாம் கேள்விப்பட்டுள்ளோம். 'டர்டில் வாக்' – ஆமை நடை – என்பது பற்றித் தெரியுமா? ஆமைகளைப் பாதுகாக்க ஒரு நடை இயக்கம் நடைபெற்று வருகிறது...**

ஆமைகளில் எட்டு வகைகள் இருக்கின்றன. நமது நாட்டின் கிழக்குக் கடற்கரையோரம் காணப்படுபவை Olive Ridley Turtles என்ற வகை ஆமைகள். ஒரிஸ்ஸாவில் உள்ள காதிர் மாதா கடற்கரையில் முன்பெல்லாம் ஆயிரக்கணக்கான ஆமைகள் வந்து முட்டைகளிட்டுச் செல்லும். இதற்கு 'அரிபாடா' என்று சொல்வார்கள். 'அரிபாடா' என்றால் லத்தீன் மொழியில் 'தாயகம் (வீடு) திரும்புதல்' என்று பொருள். ஆனால் கடந்த மூன்று வருடங்களாக இந்த 'அரிபாடா' நடக்கவில்லை. இதற்குக் காரணம், ஆமைகள் முட்டையிடுவதற்கு ஏற்ற சூழ்நிலை காலப் போக்கில் மாசுபட்டுப் போனது தான். அதையும் மீறி ஆமைகள் இடும் முட்டைகளை மனிதன் உணவுக்குப் பயன்படுத்துவதால் ஆமையின்மே அழியத் துவங்கியிருக்கிறது!

சென்னைக் கடற்கரையில் பெசன்ட் நகரிலிருந்து கொட்டிவாக்கம் வரையிலுள்ள பகுதியில் ஆமைகள் வந்து முட்டையிட்டுச் செல்கின்றன. ஆனால் ஆமைகள் இடும் முட்டைகளைத் தேடிக் கண்டு பிடித்து எடுத்துச் சென்று விடுகிறார்கள் சிலர். இந்த முட்டைகளைக் காப்பாற்றி, குஞ்சு பொறித்துக் குட்டிகளை கடலில் மீண்டும் விடும் பொறுப்பை ஏற்றுக் கொண்டு செயல்படுகிறது மாணவர்கள் கடல் ஆமை பாதுகாப்பு அமைப்பு (Students Sea Turtle Conservation Network).

"கடல் தாவரங்களை உட்கொண்டு வாழும் ஆமையினம் அழிந்து கொண்டே இருக்கிறது. மீனவர்கள் தங்கள் வலையில் ஆமைகள் மாட்டிக் கொண்டால் அவற்றை எடுத்துக் கடலில் விட்டு விடுவார்கள். ஆனால் மீன்பிடி படகுகள் (trawlers) வீசும் வலைகளில் மாட்டிக் கொள்ளும் ஆமைகள் மூச்சு முட்டி இறந்து விடுகின்றன.

தரையில் மிகவும் மெதுவாக ஊர்ந்து போகும் ஆமை, கடலில் விரைந்து செல்லக்கூடியது. அவ்வப்போது மேல் மட்டத்திற்கு வந்து சுவாசித்து விட்டுச் செல்லும். சென்னையை ஒட்டி உள்ள கடற்கரைக்கு வரும் ஆமைகள், ஆஸ்திரேலியாவில் இருந்து வருகின்றன! கடலை விட்டு வெளியேறி சுமார் பதினைந்து முதல் முப்பது மீட்டர் வரை கரைக்குள் வந்து, ஒன்றரை, இரண்டடி ஆழத்துக்கு மணலில் குழி தோண்டி, அதில் முட்டைகளை இடுகிறது ஆமை. முட்டை இருப்பது தெரியக் கூடாது என்பதற்காக

மண்ணைப் போட்டு மூடியும் விடுகிறது.

டிசம்பர் முதல் மார்ச் வரைதான் முட்டையிடும் சீசன். இந்த சீசனில் ஆமைகள் மூன்று முறை முட்டை இடும். முதல் முறை 200 முட்டைகள் வரை இடும். மூன்றாவது அதிகபட்சமாக அறுபது முட்டைகள் இடலாம். இந்த முட்டைகள் குஞ்சு பொரிக்க 48 முதல் 55 நாட்கள் வரை எடுத்துக் கொள்கின்றன. ஆயிரக்கணக்கில் குஞ்சுகள் பொரித்தாலும் ஆயிரத்தில் ஒன்றுதான் பிழைத்து உயிர் வாழ்கிறது. குட்டியான மைக்ரோ ஆமைகள் வெளிவந்த சில மணி நேரத்துக்குள் கடலுக்குள் சென்றுவிட வேண்டும். இல்லையேல் இறந்து விடும். அப்படிச் செல்லும் குட்டி ஆமைகளில் பல மீன்களுக்கும் கடல் உயிரினங்களுக்கும் உணவாகி விடுகின்றன. அதையும் மீறி பிழைப்பவை தான் இனத்தைக் காக்க முடியும்."

– விளக்கிச் சொன்னார்கள் கடல் ஆமை பாதுகாப்பு அமைப்பைச் சேர்ந்த அருணும், சஞ்சீவும்.



• முட்டை சேகரிப்பு

# ஆமை நடை நடக்கிறார்கள்!

ஆக்டிவ்வான பத்து பேரைக் கொண்ட இந்த அமைப்பைச் சேர்ந்தவர்கள் முட்டையிடும் சீசனின் போது நள்ளிரவில் கடற்கரையில் தினமும் நடக்கிறார்கள். ஆமைகள் முட்டையிட்டுள்ள இடங்களைத் தேடிக் கண்டுபிடித்து முட்டைகளை எடுத்து நீலாங்கரையிலுள்ள ஒரே இடத்தில் பத்திரப்படுத்திப் பாதுகாக்கிறார்கள். இந்த அமைப்புக்குப் பிள்ளையார் சுழி போட்டவர் பாம்புப் பண்ணை விட்டேகர்தான். பின்னர் கிறிஸ்துவ கல்லூரியைச் சேர்ந்த சாண்டி, ஆரிப் ஆகியோர் தீவிரமாகச் செயல்பட்டார்கள். மைலாப்பூர் வித்யா மந்திர் மாணவ, மாணவிகள் இந்த அமைப்பில் ஆர்வமுடன் செயல்பட்டு வருகிறார்கள்.

சில காலம் வனத்துறையினர் முட்டைகளை எடுத்துச் சேகரித்து வந்தார்களாம். இப்போது அவர்கள் பணி நின்று விடவே, இந்த அமைப்பு மட்டும் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது. தினசரி இவர்களுடன் ஆர்வமுள்ள மாணவ, மாணவிகள், குளிரையும் பொருட்படுத்தாது கலந்து கொள்கிறார்கள்.

"விதியை மீறி கடற்கரையில் ஏகப்பட்ட கட்டடங்கள். மணல் பகுதியை மூடி மறைக்கும் தாவரங்கள். கரையோர வாசிகளால் ஏற்படும் ஆபத்துகள் – என்று ஆமைகள் முட்டை இடுவதற்கு எதிரான சூழ்நிலைகள்தான் இங்கு நிலவுகின்றன. பொதுவாகவே முட்டையிலிருந்து வெளிவரும் குஞ்சுகள் தெரு விளக்குகள் ஆகியவைகளிலிருந்து வரும் வெளிச்சம் காரணமாக கரைப் பகுதியில் நீண்ட தூரம் வந்து இறந்து விடுகின்றன. நாங்கள் சேர்த்து வைக்கும் முட்டைகளைக் கூட திருடிக் கொண்டு போய் விடுகிறார்கள். முன்பெல்லாம் தினசரி ஆமைகளைக் காண்போம். இப்போதெல்லாம் அந்தக் காட்சி அரிதாகிக் கொண்டு வருகிறது" என்கிறார் அருண்.

ஒரு முறை முட்டையிட்டுச் செல்லும் ஆமை மீண்டும் கரைப் பகுதிக்கு வந்து "குஞ்சுகள்" வெளி வந்து விட்டனவா என்று கூடப் பார்க்காதாம். அதே போல சென்னைக் கடற்கரையில் ஜனிக்கும் ஆமை பல வருடங்களுக்குப் பிறகும் முட்டையிட இதே கடற்கரைக்குத்தான் வருமாம்.

— ஸ்ரீநிவாசன்

வையவன்

# தீபிகா

கதவை யாரோ பலமாகத் தட்டுகிற சத்தம் கேட்டது. பாஸ் கண் விழித்தான்.

சுவர்க்கடிகாரத்திற்கு நேர் மேலே மாட்டியிருந்த நீல விடிவிளக்கின் ஒளி மணிமுள் மீது விழுந்தது. மணி மூன்றே கால்.

பக்கத்தில் போட்டிருந்த கட்டில் மேல் கந்தசாமியின் லேசான குறட்டை ஒலி.

வாலிபால் மேட்ச் வென்ற மகிழ்ச்சியோடு இரவு பத்து மணிக்கு வீடு வந்து சேர்ந்தார் அவர். எதிர்பாராவிதமாக சியக்காய் லோடு ஏற்றிச் செல்ல வந்த காலி லாரி, 'டீம்' கண்ணில் பட்டிருந்தது. கிடைத்தது.

அவருக்குக் கதவு திறக்க ஒருமுறை பாஸின் தூக்கம் ஏற்கெனவே கலைந்திருந்தது.

இது இரண்டாவது முறை.

யார்? ஆவண்ணாவா?

மீண்டும் கதவு தட்டும் ஓசை. அந்தப் பாணியே அது ஆவுடையப்பனல்ல என்று தெரிவித்தது.

கந்தசாமியின் குறட்டை நிற்கவில்லை. பாவம், அவருக்கு முழு அசதி.

பாயை விட்டு எழுந்த பாஸ், அவர் தூக்கம் கலையாதிருக்க ஓசையின்றிக் கால் வைத்து நடந்து கதவுத் தாழ்ப்பாள் ஒலி எழும்பாதபடி கதவை அழுத்தி மெதுவாகத் திறந்தான்.

வெளியே நர்ஸ் சின்னம்மிணி நின்றிருந்தாள்.

அப்பா எழுந்துவிடப் போகிறார் என்று கதவைப் பின்னால் ஒந்திரித்துச் சாத்திக் கொண்டு "என்னங்க ஆண்ட்டி?" என்றான் பாஸ்.

"அப்பா தூங்கறாரா?" சின்னம்மிணி முகத்தில் பயம் படர்ந்திருப்பது நிலா விழுந்த எதிர் வெளிச்சத்தில் நன்றாகத் தெரிந்தது.

"ஏன் ஆண்ட்டி?"

"பாத்ரூம் லைட் போடப் போயி தீபிகா ஷாக் அடிச்சு மயக்கமாயி விழுந்துட்டா."

"ஐய்யோ... அப்பறம்?" பாஸ் பதறி விட்டான்.

"மொகத்திலே தண்ணி தெளிச்சும் எழுந்துக்கலே."

வனாந்திர வாசத்தின் தனிமையில் இப்படி திடீர்த் தாக்குதல்களும் திகைக்க வைக்கும் சூழ்நிலையும் மூன்று வருஷத்தில் நிறைய நேரிட்டிருக்கின்றன.

அப்போது விவேகம் கைவிட, சமயோசித அறிவே செயல்படாது. எத்தனை விவரம் இருந்தாலும் ஒருகணம் யார் உதவியாவது தேவைப்படும். சாட்டை சொடுக்கி உத்தரவிட்டு யாராவது வழி நடத்த மாட்டார்களா என்ற நிலை வரும்.

பாஸ் தானறிந்த முதலுதவியை நினைத்தான்.

"பல்ஸ் பாத்தீங்களா ஆண்ட்டீ?"

"ரொம்ப வீக்கா இருக்கு."

மின்வீச்சாக பாஸுக்கு அவன் சார்ந்து நிற்க விரும்பும் துணையின் தேவை உணர்ந்தான்.

"அப்பாவை எழுப்பட்டுமா?"

"எழுப்பேன்."

உள்ளே போய் அப்பாவைத் தட்டி எழுப்பினான். அவர் திடுக்கிடாதபடி செய்தியாக விவரம் சொன்னான்.

சட்டென்று கந்தசாமி எழுந்து வெளியே வந்தார். ஒன்றும் கேளாமல் சின்னம்மிணியைப் பார்த்து "நடம்மா, போகலாம்" என்றவர் திரும்பி "பாஸ், எதுக்கும் டார்ச் எடுத்துட்டு கதவைப் பூட்டிட்டுப் பின்னாலேயே வா" என்று படியிறங்கினார்.

தீபிகா பாத்ரூமுக்குப் போகும் நடையிலேயே விழுந்திருந்தாள். சின்னம்மிணியால் ஒண்டியாக அவளை இழுத்துப் போய் கட்டிலில் போட முடியவில்லை.

கந்தசாமி வீட்டில் நுழைந்ததும் முதல் வேலையாக தீபிகாவின் மூக்கில் கைவைத்து சுவாசம் பார்த்தார். உண்டா இல்லையா என்று தெரியாத சன்ன நூலிழைபோல் சுவாசம்.

"இப்படி வாம்மா... மொதல்ல



இவளைக் கட்டில்லே கொண்டு போய்ப் போடலாம். நீ கால் பக்கமாப் புடி'' என்று அவர் தலைப் பக்கம் போய் தீபிகாவின் முக்கால் பளுவைத் தோள் பிடித்துத் தூக்கிப் போய்க் கட்டிலில் கிடத்தினார்.

4

சின்னம்மிணிக்கு அவள் நர்ஸ் என்பது கிட்டத்தட்ட மறந்து தாய்மைப் பயமே ஓங்கியிருப்பது உடனே அவருக்குப் புலப்பட்டது.

''ஏம்மா நர்ஸம்மா... சாதாரண மனுஷி ஆயிட்டியா நீயே... பிபி அபாரடஸ் இருக்கா?'' என்றார்.

அவர் வார்த்தைகள் உலுக்கி அவளுள் இருந்த நர்ஸை விழிக்க வைத்தன.

''பி.எச். சென்டர்ல இருக்கு.''

ஆரம்ப சுகாதார நிலையம் இருநூறு அடி தள்ளி இருந்தது.

''அண்ணா ஒங்க கையால கொஞ்சம் தண்ணிய அவ மொகத்திலே தெளிச்சு விடுங்க'' என்று ஸ்டூலின் மீதிருந்த வாட்டர் பாட்டிலை எடுத்து நீட்டினாள்.

கந்தசாமி மூடியைத் திருகிக் கழற்றும்போது

வெளியே மோட்டார் சைக்கிள் சப்தம் கேட்டது.

சட்டென்று ஊகித்தார். சியக்காய் அறுவடைக் குத்தகையை ஏலம் எடுத்திருந்த வெங்கடாத்ரி வண்டியை வாங்கி வந்திருந்தான் பாஸ்!

தீபிகாவின் முகத்தில் தெளித்த தண்ணீரால் ஒரு விளைவுமில்லை. முகத் தசைகளில் சலனமில்லை.

அதற்குள் பாஸ் படியேறி உள்ளே வந்தான்.

இதுமாதிரி கந்தசாமிக்கு எத்தனையோ அனுபவம். எத்தனையோ மூர்ச்சை போட்டு விழுந்த மாணவர்கள்! அதுவே ஒரு பதறாத நிதானம் வழங்கி இருந்தது.

"நர்ஸம்மா... கட்டில் மேலே ஏறி கொஞ்சம் 'ஆர்ட்டிபிஷியல் ரெஸ்பிரேஷனுக்கு முயற்சி பண்ணுங்க" என்றார்.

"சரிங்கண்ணா... சென்டர் சாவி முருகர் படத்துக்குக் கீழே மாட்டி இருக்கேன்."

கந்தசாமி சாவி எடுக்க நகர்ந்தவர் "சோடியம் பை கார்பனேட் வயால் இருக்காம்மா?" என்றார்.

"இருக்குதுண்ணா" என்று சொன்ன வாய் கம்மி தொண்டை அடைத்தது. அவர் நிமிர்ந்து பார்த்தார். சின்னம்மிணி விழிகளில் கண்ணீர் கொப்புளித்து நின்றது.

எத்தனை கேஸ் பார்த்திருப்பாள் இவள்? தாய் என்றால் எல்லாம் மறந்து விடுமோ!

"ஏம்மா... நீ எறங்கி வா! ஒன்னால நடக்கற காரியமாத் தெரியலே... பாஸ்... ஆண்ட்டியக் கூட்டிக்கிட்டு சென்டருக்குப் போயி ரெண்டையும் எடுத்தா... அட நீ எறங்கி வாம்மாண்ணா!" என்று மீண்டும் அதட்டினார்.

கயநிலை மீண்டு கண்ணீரைத் துடைத்தபடியே கட்டிலை விட்டுக் கீழிறங்கிய சின்னம்மிணி பாஸுக்குப் பின்னால் நடந்தாள்.

* * *




''அந்த டைலர் கிட்ட சட்டை தைக்க தாராளமா துணி எடுத்துக் கொடுத்தது தப்பாப் போச்சு...''

''ஏன்...?

''சட்டைக்கு மூணு கை வைச்சு தைச்சுட்டாரு!''

— மலர் சூர்யா

* * *

**கா**ல் மணி நேரத்தில் தீபிகாவின் மயக்கம் தெளிந்தது. கண் திறந்தவள் கந்தசாமியைப் பார்த்து "ரொம்ப டயர்டா இருக்கு" என்று பலவீனமாகச் சொன்னாள்.

பாஸுக்கு நிம்மதி வந்தது. கலவரக் கருமேகம் கலைந்த தெளிவு.

அவள் குடிக்கக் கொஞ்சம் குளுகோஸ் கரைத்துக் கொடுத்தபின் சின்னம்மிணி கந்தசாமி பின்னால் வெளியே வந்தாள்.

"இனிமே பயமில்லே" என்று தெம்பு ஊட்டுவது போல் சொன்னார்.

"காத்தால வரைக்கும் நீங்க கூடவே இருங்களேண்ணா" சின்னம்மிணி குரலில் ஒரு கெஞ்சல்.

"பாஸையும் இருக்கச் சொல்லட்டா?"

"வேணாண்ணா! அது பாவம், போய்த் தூங்கட்டும்."

அபாய கட்டம் நீங்கிவிட்டது. இனி தான் அங்கே இருக்க வேண்டிய அவசியமில்லை.

"சரி, ஆண்ட்டி! காண்ட்ராக்டர் வெங்கடாத்ரி புல்லட்டை வெளியே விட்டுட்டுப் போறேன். அவசியம்னா அப்பா கைல கொடுத்தனுப்புங்க" என்று விடை பெற்றான்.

**வெ**ளியே மலைக்காட்டு நிலா. பிப்ரவரி வந்தும் விலகாத குளிர். பனிக்குவியல். மெதுவாக நடந்தான்.

காட்டுத் தாவரங்களும் தேவலரிப்பூவும் கலந்த கனவுக் கிரக்க மூட்டும் மணம். தொடர்ந்து கானக நிசப்தத்தின் மேத் தூக்கலான துயர் ஒன்றை உணர்த்துவதுபோல் காட்டுப் பன்றி ஓடியதால் ஒரு செடி சலசலத்தது.

இது ஏன் நேர்ந்தது? ஸ்விட்ச் ஷாக் அடிக்கிறது என்று சொல்லிவிட்டு போனவளே ஏன் ஷாக் வாங்கினாள்? மறதியா? எப்படி மறப்பாள்!

காலையில் அவள் புறப்படும்போது, தான் கேட்டது அதிர்ச்சி தந்திருக்குமோ!

ஒருவேளை ஆவண்ணா தன்னைவிட்டு அப்படிக் கேட்க வைத்ததாக நினைத்திருப்பாளோ! ஆவண்ணாவுக்கும் அவளுக்கும் உண்மையில் ஏதுமில்லையோ?

தான் நினைத்தது பிரமையா?

பாஸ் சட்டென்று நின்றான்.

கிழக்குச்சரிவில் ஒரு நரி ஊளை கேட்

டது. ஒற்றை ஊளை. ஓர் அந்தரங்கமான அடி மனத்து வேதனை தாங்க முடியாது வனாந்திர மௌனத்தில் கை நீட்டித் துழாவுவது போன்ற ஊளை.

உயிர்க்குலத்தின் மூலதார சோகம் அதில் தென்பட்டது.

அடுத்து ஒரு நரிக்கூட்டம் ஊளையிடும். அதைக் கேட்க, அசைவின்றி நின்றான்.

இல்லை. எந்த சப்தமும்... எதுவும் எதுவும் வரவில்லை.

ஏனோ தீபிகாவை நினைத்தான்.

'நீ என்ன ஆனாய் தீபிகா?'

மனசிற்குள் கேட்டான்.

கேள்வியைச் சிதைப்பதுபோல் ஐந்தாறு காலடியோசைகள் பின்னால் வரும் ஒலி.

பாஸ் திரும்பினான்.

கையில் ஒரு கொளுத்திய தீப்பந்தமும் அதன் மேலே எழும் புகையுமாக ஒரு வாட்சர் வருவது தெரிந்தது. பின்னே கார்டு வாட்சர்கள் நாலு பேர் சூழ ஆவுடையப்பன் வந்து கொண்டிருந்தான்.

மலைப்பாதையில் காட்டெருமை நடமாட்டத்திற்குப் பயந்து மலைவாசிகள் பந்தம் கொளுத்திப் பிடித்து நடந்து வருவது சகஜம்.

ஆவண்ணா நடந்தேவா வருகிறான்?

பாஸை நெருங்கி, அன்போ அதிகாரமோ இல்லாத விலக்கமான குரலில் ஆவுடையப்பன் கேட்டான்.

"எங்கடா இந்த நேரத்திலே?"

"தீபிகாவுக்கு கரண்ட் ஷாக் அடிச்சுருச்சு."

"எப்போ?" பதறாமல் கேட்டான் ஆவுடையப்பன்.

பாஸ் சுருக்கமாகத் தெரிவித்தான்.

"அப்பா தொணைக்கு இருக்காரில்லே?"

"ஆமாம்" என்றான் பாஸ்.

"அவர் போதும்... நட."

"நீ எங்கேண்ணா இந்த நேரத்திலே?"

"லாரி கெட்டுப் போச்சு. கார்டு வாச்சருங்க நடந்துடலாம்னாங்க. ஸெட்டிங் இலேருந்து காட்டு வழியா நடந்துட்டோம்" ஆவுடையப்பன் நடைக் களைப்பு தெரியாமல் சொன்னான்.

"சச்சிதானந்தா போய்ட்டாரா?"

"போய்ட்டார்."

அதற்கு மேல் ஒரு வார்த்தை வருமா என்று கூர்ந்து கவனித்தான். அவன் முகத்தில் சலனமில்லை. "வெளியே போனான்னா திரும்பி வருவானான்னு சந்தேகமா இருக்குடா" என்று அப்பா மத்தியானம் சொன்னதை நினைத்தான்.

இவன் மறுபடியும் ஓடி விடுவானா? இவனைத் தீபிகா என்ற பொன் சங்கிலியால் பிணைக்க நினைத்த எண்ணம் சிதைந்து விட்டதே!

**கா**லை பத்தரை மணிக்கு நெடுஞ்சாலைத் துறை லாரி, சாலை போட்டு முடித்த பின் மீந்த சாமான்களை எடுத்துப் போட்டுக்கொண்டு சித்தேரி மலையிடமிருந்து இறுதி விடை பெற வந்து நின்றிருந்தது.

தன் சித்தேரி மலைவாசம் முடிந்தது என்று டிரைவரின் ஹாரன் ஓசை பாஸுக்குப் புலப்படுத்தியது.

விடை பெற்று வர வேண்டிய இடங்



**டாக்டர்: காது வலின்னு சொல்றீங்க... ஆனா உங்க மூக்கு வீங்கிருக்கே?**

**அவர்: எனக்கு இருக்கற ஞாபக மறதி என் உடம்புக்கும் வந்துடுச்சு போல!**

**— அம்பை தேவா**

களை நினைத்தான். பட்டியல் சற்று பெரியது. முதலில் தீபிகா.

அவள் வீட்டிற்குப் போனான்.

நாற்காலியில் உட்கார்ந்து புத்தகம் படித்துக்கொண்டிருந்தவள் நிமிர்ந்து பார்த்து, சிரித்தபடி எழுந்தாள்.

"ராத்திரி ஒரு கலக்கு கலக்கிட்டீங்க!"

தீபிகாவின் கண்ணிமைகள் தரை பார்த்துத் தாழ்ந்தன.

"ஸ்விட்ச் ஷாக் அடிக்குதுன்னு நீங்களே சொல்லிட்டுப் போயிட்டு?" என்று முடிக்காமல் எதிரில் போட்டிருந்த பிரம்பு நாற்காலியில் உட்கார்ந்தான்.

"ஒரு ஷாக் வாங்கினதுலே அந்த ஷாக் மறந்து போச்சு!" என்றாள் தீபிகா. பார்வை அவன் மீது நிலை குத்தியிருந்தது.

"எந்த ஷாக்?" பாஸ் ஆவலாகக் கேட்டான்.

"என்ன சாப்பிடறீங்க?" தீபிகா பேச்சை மாற்றினாள்.

அவ்வளவு லேசில் சொல்வேனா என்றது பார்வை.

"என்ன கொடுப்பீங்க?" என்று கேட்டான் பாஸ்.

"காபி...டீ... மோர்... லைம் ஜூஸ்"

"ஷாக்?"

"கெடைக்காது. அங்கிள் ஸ்விட்சை ரிப்பேர் பண்ணிட்டார்."

"அப்ப நான் கொடுக்கறேன்" என்று ஆரம்பித்தான் பாஸ்.

என்ன சொல்கிறாய் என்று அவள் புருவம் உயர்ந்தது.

"நான் பொறப்படறேன்... நாளைக்கு நாமக்கல்லில் சார்ஜ் எடுத்தாகணும்!"

தீபிகா அவனையே பார்த்தாள். முகத்தில் ஒரு மாற்றம்.



"பழைய பேப்பர் எடுக்கிறவரு நம்ம தலைவரைப் பார்க்க வந்தாரே, ஏதாவது மனு கொடுத்தாரா?"

"இல்லை, தலைவர்தான் அவருகிட்ட மனுக்கள் கொடுத்தாரு!"

— நிரவி கஜேந்திரன்

"நெஜம்மா?"

"லாரி டிரைவர் கூவறாரே கேக்கலே?"

"இருங்க" மேலும் இருண்டது முகம். சுதாரித்துக்கொண்டு எழுந்து பக்கத்திலிருந்த அறைக்குள்ளே போனாள்.

ஒரு நிமிஷம்... இரண்டு... ஐந்து நிமிஷம்! அவள் வரவில்லை. உள்ளே பெட்டியைத் திறந்து என்னமோ தேடுகிற ஒலி.

பாஸுக்கு இன்னும் விடைபெற வேண்டியவர்கள் நினைவு வந்தது.

"மத்தவங்ககிட்டே சொல்லிக்கணும். போயிட்டு அப்பறமா வரட்டுமா?" என்று உள்ளே அவளுக்குக் காதில் விழுகிற மாதிரி குரல் உயர்த்திக்கேட்டான்.

"கொஞ்சம் இருங்க" உள்ளேயிருந்து பேசினாள்.

அடுத்த நிமிஷம் லெமன் ஜூஸ் நிரம்பிய கண்ணாடித் தம்ளர் வலக் கையிலும், இடக் கையில் ஒரு 'கி-செய்னு'மாக வந்தாள் தீபிகா.

ஜூஸை வாங்கி அவன் குடிக்கிறவரை காத்திருந்து காலி தம்ளரை அவன் டீப்பாயின் மீது வைத்த பிறகு அவள் கி செய்னை நீட்டினாள்.

"இது?" என்று கேட்டுக்கொண்டே வாங்கினான் பாஸ். எல்.ஐ.சி.யின் அகல்விளக்குச் சின்னம்.

"வச்சுக்குங்க" என்றாள் தீபிகா.

"நினைவுப் பரிசா?" என்று சகஜமாகக் கேட்டான்.

"அகல்விளக்கு இருக்கு இல்லே? ஒங்களுக்குப் பிடிச்சது!"

அவள் குரல் அவன் நேற்று சொன்னதை நினைவூட்டுவதோடு மட்டுமின்றி வேறு ஏதோ அர்த்தம் தொனித்தது. பாஸ் ஓர் அதிர்ச்சி வாங்கினான்.

அவள் என்ன சொல்ல முயல்கிறாள்?

அவன் பார்வையை உயர்த்தி அவள் கண்களை ஊடுருவி அர்த்தம் தேடினான். தீபிகா பிடிபடாத மாதிரி சிரித்தாள்.

"உங்க அண்ணா மகான். அவருக்கு வெளக்கு தேவை இல்லே... ஒங்களுக்குத்தான் தேவை" என்றாள் தீபிகா.

வார்த்தைகளைக் காதில் வாங்கி அதை ஜீரணம் செய்வதுபோல ஒரு நிமிஷம் பேசாமல் உட்கார்ந்திருந்தான் பாஸ்.

பிறகு தொண்டையைக் கனைத்துக் கொண்டு "என்ன சொல்றீங்க... புரியலியே?" என்றான்.

"நீங்க காலைல கேட்டதுக்குப் பதில்" என்றாள் தீபிகா.

மீண்டும் மௌனமானான் பாஸ்.

நிமிர்ந்தபோது அவனையே பார்த்திருந்த கண்களைத் தாழ்த்தினாள். ஒரு விண்ணப்பத்தையோ விருப்பத்தையோ மறைப்பது போல... அவனுக்கு மனசு கரித்தது.

"சரி... நான் பொறப்படறேன்" அவன் எழுந்தான். வெளியே படியிறங்கி வரும்போது திரும்பிப் பார்க்க மனம் தூண்டியது. தீபிகா வாசற்படியில்தான் நின்றிருப்பாள். தெரியும்.

ஆனால் அவன் திரும்பிப் பார்க்கவில்லை.

சில விண்ணப்பங்களை சில உயர்ந்த காரணங்களுக்காக நிராகரிக்க நேர்கிறது என்று நினைத்தபடியே அவன் நடந்தான். வலது உள்ளங்கையில் இருந்த கிசெயினில் புடைத்து நின்ற அகல்விளக்குச் சின்னத்தை பாஸின் பெருவிரல் மரியாதையோடு வருடிற்று.

(முற்றும்)

# காதில் விழுந்தவை

● "சிங்காரச் சென்னையின் நிர்வாகத்தைப் பற்றி கொஞ்சம் டேமேஜிங்காகவே எழுதி வருகிறீர்களே... நல்ல விஷயம் ஏதும் சொன்னால் கண்டு கொள்வீர்களா?" என்று நமது மாநகராட்சி நண்பர் கேட்டார். "ஓ தாராளமாக" என்றோம். "அண்ணா நகரில் நடந்த மழைநீர் வடிகால் கால்வாய் கட்டுமானப் பணியில் செய்யாத வேலைக்கு ஆயிரக்கணக்கில் பில் போட்டு பணத்தை அபேஸ் செய்து விட்டார்கள். அந்த வட இந்திய அதிகாரி கண்டு பிடித்து உதவிப் பொறியாளரை இடை நீக்கம் செய்து விட்டார். "நீ... கவலைப்படாதே.. உன்னைக் காப்பாற்றி அடுத்த காரியத்தை வெற்றிகரமாக முடிப்பேன்" என்று களத்தில் குதித்திருக்கிறார் ஒரு பிரமுகர். ஆனாலும் நகரத் தந்தை இதுவரை அழுத்தத்துக்கு வளைந்து கொடுக்கவில்லை!" தந்தைக்கு ஒரு சபாஷ் சொல்லிவிட்டு விடை பெற்றோம்.



• மூப்பனார்



• வைகோ

## மூன்றாவது அணியில் முன்னேற்றம் தெரிகிறதாம்!

● தமிழக காங்கிரஸ் தலைமை சோனியாவை சந்திக்க அஞ்சிக் கொண்டிருக்கிறதாம். காரணம் இதுதான்! நாடு முழுக்க பல மாநிலங்களில் காங்கிரஸார் சோனியாவை அழைத்து கூட்டம் போடுகிறார்கள். ஆனால் தமிழகத்திலிருந்து மட்டும் அழைப்பில்லை. தம்மைச் சந்திக்கும் பிரமுகர்களிடம் "தமிழக காங்கிரஸுக்கு என்னவாயிற்று?" என்று வெளிப்படையாகவே கேட்கிறாராம் சோனியா. ஆனால் "தங்கபாலு காலத்தில் நியமிக்கப்பட்ட மாவட்டத் தலைவர்களை மாற்றி விட்டுத்தான் சோனியாவை அழைப்பேன்!" என்று பிடிவாதமாக இருக்கிறாராம் திண்டிவனம். இது தவிர கட்சிப் பதவிகளில் பெண்களுக்கு இட ஒதுக்கீடு செய்து விட்ட நிலையில், தகுதியான பெண்கள் இல்லாததால், ஒதுக்கிய இடங்களைக் காலியாகவே வைத்திருக்கிறாராம் திண்டிவனம்!

● வாழப்பாடியார் 'ஸ்கை தொலைக்காட்சி' என்ற ஒரு ஸாட்டிலைட் சேனல் துவங்குகிறாராமே? மூன்றெழுத்து தொலைக்காட்சியில், பொறுப்பாக இருந்தவர் வாழப்பாடியார் தொலைக்காட்சியில் முக்கிய இடத்தைப் பிடிக்கப் போகிறாராமே! ஊரெல்லாம் இதே பேச்சு! விசாரித்தோம். "தொலைக்காட்சி துவங்கும் அளவுக்கு வாழப்பாடியாருக்கு வசதி இருந்தாலும், இது போன்ற அட்வெஞ்சரில் தலைவர் இறங்க மாட்டார். யாராவது பத்திரிகை துவங்குவது பற்றிப் பேச வந்தாலே உற்சாகம் காட்ட மாட்டார். நீங்கள் பொறுப் பேற்றுக் கொள்ளப் போவதாகக் குறிப்பிடும் நபர்தான் இது போன்ற வதந்திகளைக் கிளப்பி விடுகிறார் போலிருக்கிறது!" என்று நம்மிடம் சொன்னார் ராஜீவ் காங்கிரஸின் முக்கியப் பிரமுகர் ஒருவர்.

● "கைக்கும் வாய்க்கும் இடையே பல தடுமாற்றங்கள்" என்பது செஞ்சி ராமச்சந்திரனைப் பொறுத்தமட்டில் சரியாகத்தான் இருக்கிறது. "எங்கள் கட்சி சார்பில் இவர்தான் மந்திரி" என்று வைகோ சொல்லிவிட்டாலும், கூட்டணிக் குழப்பங்கள் காரணமாக அமைச்சரவை விரிவாக்கம் தள்ளிப் போய்க் கொண்டே இருக்கிறது. "முதலிலேயே நாம் அமைச்சர் பதவியை ஏற்றுக் கொண்டிருக்க வேண்டும்" என்று வெளிப்படையாகவே ம.தி.மு.க பிரமுகர்கள் பேசுகிறார்கள். பட்ஜெட் கூட்டத் தொடர் துவங்க இருக்கும் நிலையில் அடுத்த இரண்டு மாதத்துக்கு அமைச்சரவை விரிவாக்கம் இருக்குமா என்பது சந்தேகமே! இந்த நிலையில் தமிழகத்தில் மூன்றாவது அணி அமைப்பது தொடர்பாக வைகோ - மூப்பனார் பேச்சு வார்த்தையில் நல்ல முன்னேற்றம் இருக்கிறதாம்.

● கேட்பதற்கு ஆச்சர்யமாக இருந்தது. "பிரமிக்க வைக்கும் சம்பளம் கொடுக்கிறோம்" என்று தூண்டில் போட்டாலும், தொழில் ரீதியான அனுபவம் பெற்ற ஆட்கள் அம்மா தொலைக்காட்சிக்குக் கிடைக்கவில்லையாம். தொலைக்காட்சியின் எதிர்காலம் அரசியல் தட்ப வெப்ப நிலையைப் பொறுத்தது என்பதால் இந்த நிலையாம். இதற்கிடையில் தொலைக்காட்சி துவக்கம் சில மாதங்கள் தள்ளிப் போவது தவிர, பெயரை மாற்றலாமா என்றும் யோசனை செய்து கொண்டிருக்கிறார்களாம் தோழிகள். ○

— சஞ்சயன்

# 'ஹலோ' சொல்லும் செலவை நாடு தாங்குமா?

● த. குணசேகரன், கவுந்தப்பாடி.

? திருப்பதி கோயிலுக்கு வரும் ஹிந்துக்கள் அல்லாதவர்களும் வெளிநாட்டவர்களும் வெங்கடாசலபதி மீது நம்பிக்கை வைத்துள்ளதற்கு உறுதிமொழி தரவேண்டும் என்ற நடைமுறையை மீறி சோனியா சுவாமி தரிசனம் செய்தது சரியா...?

! பார்ஸி மதத்தவரை மணந்தாலும் இந்திரா காந்தி ஹிந்து பழக்க வழக்கப்படி வாழ்ந்தவர் என்பதால் அவரை அனுமதித்தார்கள். அதே ரீதியில், கிறிஸ்துவராய்ப் பிறந்த போதும் ராஜீவை மணந்து ஹிந்து பழக்க வழக்கங்களைக் கடைப்பிடித்த சோனியாவை அனுமதித்ததில் தவறென்ன...? அரசியலாக்க வேண்டும் என்று தீர்மானித்தால் எதிலும் குறை காணலாம்.

● ஆர். என். செழியன், சென்னை — 41.

? வாஜ்பாய் கூட்டணித் தலைவர்களுடன் ஒத்துப் போவது தேசநலன் கருதியா? பி.ஜே.பியின் நலன் கருதியா?

! பதவி நலன் கருதி!

● ஆர். சரோஜா, நாட்டரசன்கோட்டை.

? 'அரசியலில் என்னை ஒழிக்க சதி' என்று தேவேகௌடா கூறுகிறாரே?

! சதி செய்து ஒழிக்கும் அளவுக்குத் தமக்கு அரசியலில் ஒரிடம் இருப்பதாக நம்பும் அவருடைய positive attitude அசத்துகிறது, போங்கள்!


• துப்பாக்கி யோசனை!


• செலவும் சமரசமும்!


• அதிர்ச்சியில்லை



● எம். ரேவதி, மன்னார்குடி.

? சமீபத்தில் தாங்கள் கேள்விப்பட்ட அதிர்ச்சி செய்தி...?

! ஒரிஸ்ஸாவில் தொடரும் கொடுமைகள். கன்யா ஸ்திரீ பலாத்காரம், சிறுவர்கள் கொலை என்று அதிர்ச்சி மேல் அதிர்ச்சி.. அங்கு அதிர்ச்சி அளிக்காத விஷயம் பட்நாயக் ராஜினாமா மட்டுமே.

● கி. பத்மநாபன், சரவணம்பட்டி.

? இந்தியாவை ஆறு மாதத்துக்கு ஜனாதிபதி ஆட்சிக்கு உட்படுத்தினால் அரசியல்வாதிகள், ஊழல் பேர்வழிகள், பதவி வெறி பிடித்தவர்கள் அடங்கிப் போய், அடுத்த நூற்றாண்டு அம்சமாக ஆரம்பிக்கும் அல்லவா...?

! உங்கள் ஆதங்கம் புரிகிறது. உங்களைப் போலவே கேட்கும் பலர் இருக்கிறார்கள். ஆனால், நமது அரசியல் சட்டப்படி மாநிலங்களில்தான் ஜனாதிபதி ஆட்சியைக் கொண்டு வர முடியுமே தவிர, மத்தியில் எந்த நிலையிலும் ஜனாதிபதி ஆட்சியைக் கொண்டு வர முடியாது. என்னதான் சொல்லுங்கள். ஜனநாயகம்தான் பெஸ்ட்! குற்றங்குறைகளைச் சுட்டிக் காட்டும் சுதந்தரமாவது இருக்கிறதல்லவா? திருத்துகிற வாய்ப்பாவது கிடைக்கிறதல்லவா?

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி.

? நேர்காணலுக்கு வரும் பட்டதாரி ஆசிரியர்களுக்கு ஒரு திருக்குறள் கூடத் தெரியவில்லை என பள்ளிக் கல்வி இயக்குனர் அரங்க தெய்வமணி வேதனையுடன் கூறியுள்ளாரே?

! அவர்களும் நம் பள்ளிகளில் பயின்று போய்த்தானே பட்டதாரிகளாகிறார்கள்! அப்படியானால் நம் பள்ளிகள் நினைவில் வைத்துக் கொள்ளும்படி ஒரு திருக்குறள் கூடக் கற்றுத் தரவில்லை என்றாகிறது.

● எஸ். ஜெயலக்ஷ்மி, கோவை — 1.

? தீவிரவாதிகள், பயங்கரவாதிகள், ரௌடிகள், தாதாக்கள், சமூக விரோதிகள் — எப்படிக் கண்டுபிடிப்பது?

! இவர்களைக் கண்டுபிடிக்க காவல், உளவுத் துறைகள் இயங்குகின்றன. ஆனால், 'கடவுளின் ராணுவம்' என்று தங்களைக் கூறிக் கொண்டு பிறமத துவேஷம் எனும் வெறுப்பை விசிறி விடுகிற அமைப்புகள் சட்டபூர்வமாக இயங்கி வருகின்றனவே... அந்த ஆபத்தை என்ன சொல்ல!

● பா. அச்சுதன், சென்னை — 5.

? உங்களைக் கவர்ந்த நாவல்?

! சுந்தர ராமசாமியின் 'குழந்தைகள், பெண்கள், ஆண்கள்' படித்தேன். அது

• மறக்கப்பட்டவர்



• தரிசன அரசியல்!

நாவல்தானா என்று ஒரு சந்தேகம் எழுந்தாலும் (ஏகதேசம் சுயசரிதை போல் இருப்பதால்) களத்துடனும் பாத்திரங்களுடனும் கலந்து, கரைந்து போய் விடுகிற அனுபவம் கிடைக்கிறது. அந்த 'ஆனந்தம் மாமி'யை ஒருதடவையாவது பார்க்க மாட்டோமா என்ற ஏக்கம் எழுகிறது.

● ஆர். சாலமோன், ஆலங்குளம்.

*? வன்முறையாளர்களிடமிருந்து காப்பாற்றிக் கொள்ள தாழ்த்தப்பட்டவர்களுக்குத் துப்பாக்கி வழங்க வேண்டும் என்று கிருஷ்ணசாமி அரசுக்கு 'யோசனை' வழங்கியுள்ளது பற்றி...?*

! தோட்டாவை இவரே தருவார் போலிருக்கிறது! இதுபோன்ற பேச்சுகள் பொறுப்பற்றவை; தேசவிரோதமானவை கூட.

● கே. வி. ராமன், சென்னை – 73.

*? நம் நாட்டு சங்கீதத்தை முதன் முதலில் அயல்நாட்டினருக்கு எடுத்துரைத்து ஆவலைத் தூண்டிய பண்டிட் ரவிசங்கருக்கு பாரத ரத்னா வழங்கியது குறித்து...?*

! நோபெல் பரிசு வழங்கப்பட்ட பிறகுதான் அமார்த்யா சென் என்றொரு விஞ்ஞானி இருக்கும் விஷயமே அரசுக்குத் தெரியவருகிறது. குடியரசு தின விருதுகள் அறிவித்து சில காலம் சென்ற பிறகுதான் திடீரென்று ரவிசங்கர் நினைவுக்கு வருகிறார். அடக் கடவுளே! இதில் கூடவா இவ்வளவு மந்த புத்தி!

● ஜெ. கண்ணன், சென்னை – 101.

*? 'ஒரு ஹலோ சொல்வதற்காக சென்னை வந்தேன்' என்கிறார் ஜார்ஜ் பெர்னாண்டஸ். ஒரு மத்திய அமைச்சர் 'ஹலோ' சொல்வதற்காக இவ்வளவு செலவு செய்து சென்னை வந்தால் நாடு தாங்குமா?*

! செலவை நாடு தாங்குவது என்பது நத்திங். ஹலோ சொல்லி, நேர்மையைக் கை கழுவும் சமரசங்களைத் தாங்குவதுதான் கஷ்டம்.

● சியாமளா ஈஸ்வரன்,
தேவூர் மேட்டுக்கடை.

*? ஊழல் புகார்களிலிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்ளும் திறமை படைத்தவர் ஜெயலலிதா என்று கோவிந்தாசார்யா கூறியுள்ளது குறித்து...?*

! அப்புறம் ஏன் பி.ஜே.பி. அரசு அவரைக் காப்பாற்றக் கரணம் போடுகிறது!

● பி. காந்தி, மதுரை – 16.

*? தி.மு.க. தலைமையும் இந்திய கிரிக்கெட் அணி போலத்தான் இருக்கிறது என்பதை வெட்கமின்றி ஒப்புக் கொள்கிறேன் என்கிறாரே முதல்வர் கருணாநிதி?*

• அசத்தும் நம்பிக்கை!





• கலந்து, கவலையும் ஆனந்தம்!

! ஓரிருவர் மட்டுமே பொறுப்பைச் சுமக்க வேண்டியுள்ளது என்கிறார். அடுத்த தலைமுறையில் வல்லவர்களைத் தேடிப் பிடித்துப் பழக்க வேண்டாம் என்று யாரும் தடுக்கவில்லையே!

● மஞ்சு தேவன், மும்பை – 86.

*? வரவுக்கும் செலவுக்கும் இடையில் பலமான துண்டு விழுவதை எப்படி சமாளிப்பது?*

! செலவைக் குறைக்க வேண்டும்; கூடுதலாக உழைத்து, மேலும் சம்பாதிக்க வேண்டும் – இது தனிமனிதனுக்கு. ரூபாய் நோட்டு அச்சடித்துப் புழக்கத்தில் விடவேண்டும் – இது அரசுக்கு! அல்லாது போனால் தேசப் பொருளாதாரத்தை எப்படி குடிச்சுவராக்குவதாம்!

● எஸ். சுந்தர், திருநெல்வேலி – 7. ❑

*? ஆணின் வெற்றிக்குப் பின்னால் பெண்ணினம் இருப்பது நிஜமானால் இடஒதுக்கீடு எதற்கு?*

! ஆணின் வெற்றிக்குப் பின்னால் இருந்தால் போதாது; பெண்ணும் வெற்றியடைய வேண்டும் என்பதே நோக்கம். இதை ஒப்புக் கொண்டாலும் அதற்கான வழி இடஒதுக்கீடு என்பதை ஒப்புக் கொள்ள முடியாது. தகுதி உருவாவதற்கு முன் தரப்படும் வாய்ப்புகள் – குறிப்பாக அரசியலில் – விபரீதங்களுக்கே வழிவகுக்கும். பெண் கல்விதான் முக்கியமேயொழிய அரசியலில் இடஒதுக்கீடு அல்ல.

● முகவை முத்துசாமி, தொண்டி.

*? நிதிநிலை அறிக்கைக்கும் மற்ற அறிக்கைகளுக்கும் என்ன வேறுபாடு?*

! நிதிநிலை அறிக்கை, சுடுகிற நிஜம்; மற்ற அறிக்கைகள் வளமான பொய்!

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
எஸ். சுந்தர்,
B1, என்.ஜி.ஓ. 'ஏ' காலனி,
முதல் குறுக்குத் தெரு,
ஜவஹர் நகர்,
திருநெல்வேலி - 7.

## நீங்கள் கேட்டவை — தராசு

# பொட்டு லிஸ்ட்

அரசாங்க உத்தியோகம் பார்க்கும் ஆதிநாராயணனுக்கு ஆதிகாலத்திலிருந்தே அந்த சென்டிமெண்ட் உண்டு. அலுவலகத்தில் மேல் அதிகாரிகளிடம் 'டோஸ்' வாங்காமல் அன்றைய தினம் ஒப்பேற வேண்டுமே என்று போகும் வழியில் இருக்கும் அத்தனை கோயிலிலும் கோரிக்கை வைத்தபடியே போக வேண்டும். அப்படி ஏதாவது ஒரு கோயிலை விட்டு விட்டாரானால் அன்று ஏதாவது ஒரு பிரச்னையில் மனுஷன் மாட்டிக் கொள்ள நேரும். தினமும் கண்கண்ட தெய்வமாக அவருக்கு அருளிக் கொண்டிருந்த அந்த விடுபட்ட கோயிலின் சாமி 'என்னைக் கண்டுகாம பூட்டே பாத்தியா' என்று குத்திக் காட்டுவதாக அவருக்குத் தோன்றும்.

ஆதிநாராயணனும் படிப்படியாக முன்னேறி தற்போது ஒரு வாரகாலமாக அந்தத் துறையின் தலைமை அதிகாரியும் ஆகிவிட்டார். முதன்மை அதிகாரிக்கும் பயம் விட்டு போகுமா என்ன? அவரையும் ஆட்டிப் படைக்க அமைச்சர்கள் இருக்கிறார்களே! ஆக, ஆதிநாராயணன் நடந்து சென்ற 'கால் காலம்' தொடங்கி, உயர் அதிகாரியாக வாகனத்தில் செல்லும் 'கார்காலம்' வரை அலுவலகம் செல்லும் வழியிலிருக்கும் அத்தனை கோயில் அடெண்டன்ஸ் ரிஜிஸ்தரிலும் கையெழுத்துப் போடும் வழக்கம் அவர் தலையெழுத்தாகிப் போனது.

உயர் பதவி பொறுப்பேற்றதும், அவர் துறையின் மந்திரியைப் போய்ப் பார்க்க இயலவில்லை. இதற்கு முன் மந்திரி இவரைப் பார்த்ததில்லை. அந்த ஒரு வாரகாலமாக தென் மாவட்டங்களில் மந்திரி 'டூர்' அடித்துக் கொண்டிருக்க, ஆதிநாராயணனுக்கு அவர் எப்போ வருவாரோ தன்னை எப்படி எதிர் கொள்வாரோ என்று மனசு அடித்துக் கொண்டிருந்தது.

அன்றும் அரசாங்க கார் ஆதிநாராயணனை ஏற்றிக் கொண்டு நகர்ந்தது. நாலு டயர் தூரம் சென்றதும் நின்றது. முதலில் வரசித்தி வினாயகருக்கு தொப்பையும் தொந்தியுமாக மூச்சு வாங்க தோப்புக்கரணம் போட்டார். திரும்பவும் காரில் ஏறி கால் பர்லாங் தூரத்தில் மால்மருகன் கோயில் விசிட். அப்படியே காரில் ஏறாமல் கால் நடையாக கங்கையம்மன் திருக்கோயில், திரும்பவும் வாகனத்தில் அமர்ந்து வரதராஜ பெருமாள் கோயில், பக்த ஆஞ்சநேயர், அலுவலக வளாகத்திலேயே வாமன ரூபத்தில் இருக்கும் குட்டி சிவலிங்கம் என்று எந்த கோயிலையும் விட்டு வைக்காமல் பூர்த்தி செய்த திருப்தியோடு ஆதிநாராயணன் ஆபீஸுக்குள் நுழைந்தார்.

இவருடைய இந்த சென்டிமெண்டின் காரணமாக ஐந்து சென்டிமீட்டர் அகலத்திலிருந்த இவர் நெற்றியில் ஒரு பொட்டு இடமின்றி விபூதி, குங்குமம், சந்தனம், செந்தூரம், ரட்சை என்று அத்தனை கோயில் பிரசாதங்களும் பொட்டுக்களாக மொட்டு விட்டிருக்கும். விபூதி வெள்ளை, கும்குமம் சிவப்பு, சந்தனம் மஞ்சள், ரட்சை கறுப்பு என அவர் நெற்றி கலர் கலராக ஒரு பொட்(டு)டானிகல் கார்டனாக திகழும்.

அன்றும் கட்டுக்கடங்காத அத்தனை பொட்டுக்களும் அணிவகுத்து நிற்கும் நெற்றியுடன் அலுவலகத்தில் உட்கார்ந்து சாவகாசமாக அன்றைய செய்தித்தாளைத் திருப்பியவருக்கு 'திக்'கென்றது.

அமைச்சர் தென்கோடி மாவட்டத்தில் கேம்ப் சென்றபோது நாகர்கோயில் நாச்சிமுத்து, ராமநாதபுரம் ராசவேலு, மதுரை மாரிசாமி என்று ஆரம்பித்து மாவட்ட வாரியாக கட்சித் தொண்டர்கள் சிலரை தாற்காலிகமாக கட்சிப் பதவியிலிருந்து நீக்கி உத்தரவிட்டதாகச் செய்தி வந்திருந்தது. கூடவே நீக்கப்பட்ட அத்தனை பேரும் நெற்றியில் பொட்டு இட்டவர்களென்று கட்டங்கட்டி குறிப்பிடப்பட்டிருந்தது. இப்பொழுதெல்லாம் பொட்டு வைத்த முகங்களைப் பார்த்தால் 'பட்'டென்று அமைச்சருக்குக் கோபம் வருவதாகக் கண்டிருந்தது. அடுத்து இந்த விவகாரத்தில் பாதிக்கப்படவிருக்கும் கட்சி ஆட்கள் இன்னார் என்ற பொட் லிஸ்ட் அதாவது ஹிட்லிஸ்டும் வந்திருந்தது.

ஆதிநாராயணனுக்கு இதைப் படித்ததும்

**அகிலா கார்த்திகேயன்**

கிவிகண்டு விட்டது. பொறுப்பேற்றபின் அமைச்சரை இன்னும் பார்க்காத நிலையில் எந்த நெற்றியை வைத்துக் கொண்டு அவரைப் பார்ப்பது என்ற பயம் கவ்வியது. தன் நெற்றியில் டிராஃபிக் சிக்னல் கணக்கில் வண்ணமயமான பொட்டுக்களைப் பார்த்தால் அமைச்சர் நெற்றிக்கண்ணைத் திறப்பது நிச்சயம் என்பது புரிந்தது.

அதே சமயம் போன் ஒலித்தது. ஆதிநாராயணன் பயந்தது போலவே மறுமுனையில் அமைச்சரின் நேர்முக உதவியாளர் பேசினார். அமைச்சர் உடனடியாக துறையின் ஒரு குறிப்பிட்ட திட்டத்தின் விவரங்களை எடுத்துக் கொண்டு வர ஆணையிட்டதாகக் கூறினார். ஆதிநாராயணன் தன் உதவியாளரை அழைத்து, திட்ட விவரங்களைத் தயார் செய்யச் சொன்னாலும், அவர் மனது பொட்டு விவகாரத்தைப் பற்றியே கவலைப் பட்டுக் கொண்டிருந்தது. 'வாஷ்பேசின்' அருகில் போய் நின்றார். கண்ணாடியில் முகம் பார்த்தார். கடைசியில் ஒரு முடிவிற்கு வந்தவராய் குழாயைத் திறந்து முகத்தைக் கழுவினார். நிர்மலமான நெற்றியுடன் நிமிர்ந்தார். பாழும் நெற்றியோடு அவர் பிம்பத்தைப் பார்க்க அவருக்கே சனி பிம்பமாகப்பட்டது.

உள்ளே நுழைந்த உதவியாளரும் முதலில் இவருடைய வெற்று நெற்றியைக் கண்டதும் சற்று பயந்துதான் போனார்.

"ஸார்... ஸ்கீம் டீடெய்ல்ஸ் எல்லாம் சந்தானகோபாலனுக்குத் தெரியும். அவர்தான் அடிக்கடி செகரடேரியட் போய் ஸ்கீம் விஷயமா அடெண்ட் பண்ணிட்டு வர்றவரு. அவரையும் கூட்டிட்டு போனா யூஸ்ஃபுல்லாக இருக்கும்" என்று உதவியாளர் சொன்னதில் ஆதிநாராயணனுக்கு சந்தோஷம்தான்.

ஆனால் அந்த சந்தோஷம் நிலைத்து நிற்கவில்லை. சந்தானகோபாலன் கையில் கோப்புடன் உள்ளே நுழைய, அவர் முகத்தைப் பார்த்தவருக்கு நாக்கு உள்ளே இழுத்துக் கொண்டது. சந்தானகோபாலன் நெற்றியிலும் ஒரு மெகா சைஸ் சந்தனப் பொட்டு காணப்பட்டது. சரிதான் இவரை அழைத்துக் கொண்டு போனால் கதை கந்தலாகிவிடும் என்று தோன்றியது. தான் வேண்டுமானாலும் தன் நெற்றி எழுத்தை மாற்றிக் கொள்ளலாம். மாற்றான் நெற்றியை மாற்றியமைக்கத் தனக்கு உரிமையில்லையே என்று நினைத்தார்.

"சரி... எல்லா டீடெய்ல்ஸூம் இருக்கு இல்லே... நானே பாத்துக்கறேன். நீங்க வரணும்னு அவசியமில்லை" என்று ஒரு அசட்டு துணிச்சலோடு சந்தானகோபாலன் தவிர்த்தார்.



அமங்கல முகத்துடன் தன்முன் நின்று கொண்டிருந்த ஆதிநாராயணனை அமைச்சர் அக்குவேறு ஆணிவேறாக பிய்த்துக் கொண்டிருந்தார்.

"டியூட்டில ஜாய்ன் பண்ணி ஒரு வாரமாச்சின்னு சொல்றீங்க... ஸ்டாடிஸ்டிக்ஸ் ஒண்ணும் தெரியாம முழிக்கறீங்களே.. சரி உங்களுக்குத்தான் தெரியலை. இந்த சப்ஜெக்ட்டை டீல் பண்றவரை கூட்டிட்டு வந்து தொலையலாமில்லே... அந்தாளு பேரு என்ன.. அதான் நெத்திலே சந்தனப்பொட்டு வைச்சிட்டு எப்பவும் வருவாரே, அவரை கூட்டிட்டு வராம வந்து ஏன் கழுத்தறுக்கறீங்க?" என்ற அமைச்சர் முன் நின்று கொண்டிருந்த ஆதிநாராயணனுக்கு பொட்டில் அறைந்த மாதிரி இருந்தது.

அந்த இக்கட்டிலும், தான் பொட்டை இழந்து போனதால்தான் இந்த திட்டு என்று அவர் சென்டிமெண்ட் வலுப்பட்டு விட்டது வேறு சமாசாரம்! ○

✉ பார்வையிழந்த பாண்டியராஜன், ஆசிரியராகவும் செஸ் பிளேயராகவும் இருப்பது கண்டு வியந்தேன். முன்னேற, ஊனம் ஒரு தடையல்ல என்பதற்கு அவர் நல்ல உதாரணம்!
கோவை, ஏ.ஜி. கல்யாணசுந்தரம்.

✉ லாவண்யாவின் 'சொல்லி விடு!' சிறுகதை அருமை! காதலை உன்னதமாக மதிக்கிற யாரும், 'நான் உன்னைக் காதலிக்கிறேன்' என்று சொல்வதைக் கேவலமாக நினைக்க மாட்டார்கள் என்ற கருத்து மனத்தைத் தொட்டது.
மதுரை – 9, வி. எஸ். அனிதா.

✉ பெண்களுக்கு 33 சதவீத இட ஒதுக்கீடு தேவையா? என்ற கேள்விக்கு, "ஷோபா டே" யின் பதில் வித்தியாசமாக இருந்தது! 'கல்வி அளித்தாலே போதும்! பெண்கள், ஆண்களுடன் போட்டி போட்டு ஜெயித்து விடுவார்கள்' என்ற அவரது கருத்து, அவரது தன்னம்பிக்கையைப் பிரதிபலித்தது.
திருச்செங்கோடு, பிரகாஷ் வர்மா.

# பெருமைக மாட்டிக்கொண்ட பிரதமர்!

வட்டமேஜை

✉ மௌனவிரதம், உண்ணாவிரதம் எல்லாம் இனி எடுபடாது. கூட்டணிக் கட்சிக்காரர்களின் ஏடாகூடமான கோரிக்கைகளுக்கு "மசியா விரதம்" இருப்பாரா வாஜ்பாய்?
தஞ்சாவூர், வளர்மதி ஆசைத்தம்பி.

✉ இந்த வாரம் சுமிக்கு ஒரே ஒரு பக்கமா? கண்டிக்கிறேன்! சுமிக்கு உரிய பக்கங்களில் இனிமேல் யாரும் கைவைக்கக் கூடாது!
மொரட்டுப்பாளையம்,
சு.நா. இராஜேஸ்வரன்.

✉ இளாமரை மட்டும் நம்பி முதல் இன்னிங்ஸில் களம் இறங்கி ஆரம்பத்தில் வெற்றி பெற்றாலும் பின்னர் தோற்றுப் போன குஷ்பு, தமது தவறுகளைப் புரிந்து கொண்டதும், நடிப்புத் திறமையை முன்னிறுத்தியதும்தான் அவரை இரண்டாவது இன்னிங்ஸில் ஜெயிக்க வைத்திருக்கிறது.
நெய்வேலி – 7, எஸ். கண்ணன்.

✉ பிஜேபிக்கு மக்கள் ஏகமனதாய் வாக்களித்ததே வாஜ்பாயின் நாணயத்தை நம்பித்தான்! அப்படிப்பட்டவர், இன்று மதவாத அமைப்புகளிடம் வசமாக மாட்டி, தம் பதவியைக் காப்பாற்றிக் கொள்ள என்ன பாடுபடுகிறார் என்பது தலையங்கத்தில் தெளிவாகிறது. 'சரியான மனிதர் தவறான கட்சியில் இருக்கிறார்' என, முன்பு ஒருமுறை கலைஞர் சொன்னதுதான் நினைவுக்கு வருகிறது!
கும்பகோணம், புலவர் எஸ்.கே. மூர்த்தி.

✉ பா. ராகவனின் 'ஓடி விடு' படித்தேன். இலக்கியத்தை ரசிப்பவர்கள் சமூகத்தின் எல்லா மட்டங்களிலும் இருப்பதையும், நிஜத்தின் பாதிப்பில் இலக்கியம் படைக்கும் எழுத்தாளன் கூட, முழு நிஜத்தை – அதன் வீச்சை நேரில் காண முடியாமல் ஓட்டமெடுக்க வேண்டியிருப்பதையும் அழகாகக் கொண்டு வந்துள்ளார்.
கர்நாடகா,
வி. மகாதேவன்.

✉ கர்நாடகத்தில் சீரியஸ் நாடகங்களுக்கு ஆதரவு குறைவது பற்றி கிரிஷ் கவலைப்படுகிறாரா? இங்க மட்டும் என்ன வாழுதாம்?
புனே, ஜெ. ரஜினி ராம்கி.

✉ 'பீடம் ஏறிய நாடகக் கலைஞர்' கட்டுரையும், 'தமிழுக்கு ஏனில்லை ஞானபீடம்?' எனும் கேள்விக்கு அசோகமித்திரன், இந்திரா பார்த்தசாரதி, பிரபஞ்சன் விடைகளும், என்னை ஈர்த்தன. தமிழ் இலக்கியப் பிரச்னைகளுக்காகப் புத்தாண்டில் அதிகப் பக்கங்களைக் 'கல்கி' ஒதுக்கி வருவது, மிகவும் வரவேற்கத்தக்க அம்சம்!
நெல்லை, தி. க. சிவசங்கரன்.

✉ விஜய் சிவாவின் பேட்டி நன்று. இடைவிடா முயற்சியும், கடும் செயல்திறனும் நிறைந்த அவரின் வாழ்வு "உழைப்பே உயர்வு தரும்" என்ற மூதுரையை மெய்ப்பித்தது.
பொன்னேரி, மு. முரளீதரன்.



# எவரெஸ்ட் சிகரம் உயர்ந்து வருகிறது!

**ஆ**ச்சரியம்; ஆனால் உண்மை! நேபாளத்தைச் சேர்ந்த புவியியல் ஆராய்ச்சி வல்லுநர்களும், வேறு பல நாடுகளைச் சேர்ந்த நிபுணர்களும் உலகின் மிக உயரமான சிகரம் என்று கருதப்படும் எவரெஸ்ட் சிகரத்தின் உயரத்தைப் பற்றிய சர்ச்சையில் இறங்கியிருக்கிறார்கள். சர் ஜியார்ஜ் எவரெஸ்ட் என்பவர் சிகரத்தை முதன் முதலில் தொட்டு அறிவித்த 8,848 மீட்டர் (29,028 அடி) என்பதுதான், இன்று வரை அதிகாரபூர்வமான உயரமாக ஏற்றுக் கொள்ளப் பட்டிருக்கிறது.

ஆனால், இது ஆண்டு தோறும் சென்டிமீட்டர் சென்டிமீட்டராக உயர்ந்து, சுமார் ஆறு அடி கூடுதல் உயரம் பெற்றுள்ளது என்கிறார்கள் நிபுணர்கள்.

இந்தக் கூற்றுக்கு ஆதாரம் வேண்டாமா? 1960ல் திபெத்தியப் பாதை வழியே எவரெஸ்ட் சிகரத்தை எட்டிய சீனாவைச் சேர்ந்த மலையேற்றக் குழுவினர், அதன் உச்சியில் அலுமினிய ஏணி போன்ற ஒன்றை நட்டு வைத்தனர். இதன் உயரத்தில் காணப்பட்ட மாற்றமே இதற்குச் சான்றாகியுள்ளது. அமெரிக்காவின் கொலராடோ பல்கலைக் கழகத்தின் புவியியல் வல்லுநர்கள் மற்றும் நேபாள விஞ்ஞானிகள் இணைந்து எவரெஸ்ட் உண்மையாகவே உயர்ந்து வருகிறதா என்று இப்போது ஆராய்ந்து வருகிறார்கள்.

பிரபல புவியியல் வல்லுநரான ஈஸ்வோர் ஸ்ரேஷ்டா என்பவர், 'எவரெஸ்ட் சிகரம் இவ்வாறு உயருவது சாத்தியமே' என்கிறார். கோடைக் காலத்தில் உயரம் குறைந்தும் மழைக்காலத்திலும், பனிக்காலத்திலும் உருகாத மற்றும் உடைக்க முடியாத பனிக்கட்டிகளின் காரணமாக இவ்வாறு 'உயர்ந்தும்' காணப்படும் என்கிறார்.

போலோ ராணா என்ற நேபாளப் பத்திரிகையாளர் கடந்த 25 வருடங்களாக மலையேறி வருபவர். "இந்தியத் துணைக் கண்டத்தில், கிழக்கிலிருந்து வடக்கு நோக்கி ஒரு புதிய தட்பவெப்ப மாறுதல் ஏற்பட்டு வருவதால், மலைப்பகுதிகளான இமாலயப் பகுதியும் அதிலுள்ள சிகரங்களும் உயரத் தொடங்கியுள்ளன" என்கிறார்.

இதற்கிடையில், இமாலயப் பகுதியில் நிலநடுக்கங்களைப் பற்றி ஆராய்ச்சி செய்து வரும் வல்லுநர்கள், அமெரிக்காவின் கொலராடோ பல்கலைக் கழகத்துடன் இணைந்து இமய மலைப் பகுதியில் நிலநடுக்கத்திற்கு வாய்ப்புள்ளதா என்றும், இதனால் நேபாளத்துக்கு நேரக்கூடிய ஆபத்து குறித்தும் விவர அறிக்கை தயாரித்து வருகிறார்கள்.

இவர்களது ஆராய்ச்சியில், இமயமலைப் பகுதியிலுள்ள இதர சிகரங்களையும் எவரெஸ்ட் சிகரத்தையும் ஆராய்ந்து, உயர அளவில் மாற்றமுள்ளதா என்று கண்டுபிடிக்க உள்ளனர். ஆனால் இவை பற்றி முடிவான ஒரு தீர்மானத்துக்கு வர இன்னும் சில வருடங்கள் பிடிக்கும் என்கிறார்கள்.

— 'அனுமன்'



மகர ராசிக்காரரான எழுத்தாளர் ஜெயாதன் வீட்டில் ஏதோ விசேஷம் வரப்போவுதாம்!

**மேஷம் :**  *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

கார், பங்களான்னு இருந்தாத்தான் சொத்தா? உங்க புத்திசாலித்தனம்தாங்க உங்களோட பெரிய சொத்து. இந்த வாரம் உங்க புத்திக் கூர்மை பல நெருக்கடியான சந்தர்ப்பங்களிலிருந்து உங்களைக் காப்பாத்தும். ஆபீஸ்ல புகழ் கூடப் போற நேரம் இது. பழைய பாக்கிகள் வசூலாகும். பெரியவங்க அன்பும் ஆதரவும் கட்டாயம் உண்டு. கணவன் மனைவிக்குள்ள சிறு மனஸ்தாபங்கள் தலை தூக்கலாம். விட்டுக் கொடுத்து நடந்துக்குங்க.

**ரிஷபம் :**  *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

உங்க ஆற்றல் மேலோங்கி இருக்கற வாரம். எதையும் வெற்றிகரமா செய்து முடிக்கற திறமை உங்ககிட்ட இருக்கறப்ப என்னங்க கவலை? அரசுப் பணியாளர்களுக்கு உத்தியோக உயர்வோட கூட இடமாறுதலும் வர சான்ஸ் இருக்கு. விவசாயிகள், எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்களுக்கு ஆதாயமான காலகட்டம். பணப் பிரச்னை இருக்காது. ஆனா செலவு அதிகமா இருக்கும். நீண்ட தூரப் பயணம் சிலருக்கு இருக்கும். பெண்களுக்கு உடல் நலன்ல சில கோளாறுகள் வரலாம். கண்ட தண்ணி குடிக்காதீங்க.

**மிதுனம் :**  *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

நண்பர்களால ஏதோ ஒரு பெரிய உதவி இப்ப கிடைக்கும். பண உதவியா கூட இருக்கலாம். ஏன்னா, இந்த வாரம் உங்களுக்கு அவசரத் தேவைக்குத் தட்டுப்பாடு வர்றாப்பல வெள்ளையப்பன் கொஞ்சம் ஆட்டம் காட்டுவான். உத்தியோகஸ்தர்களுக்கு, மேலதிகாரிகளால ஏதோ நல்லது நடக்கப் போவுது. பெண்களுக்குப் புடவை யோகம் தெரியுது. மாணவர்கள் போட்டி, பந்தயங்களில் வெற்றி பெற வாய்ப்பு இருக்கு. பயணத்துல மட்டும் எச்சரிக்கையா இருங்க. குறிப்பா டூ வீலர் ட்ராவலைத் தவிர்க்கப் பாருங்க.

**கடகம் :**  *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

எதிர்பாராத ஒரு கடிதம் உங்களுக்குப் பெரிய மகிழ்ச்சியைத் தரப் போகுது. வெளிநாட்டுல உறவினர்கள் உண்டா? அவங்க மூலம் ஏதாவது ஒரு நல்ல காரியத்துக்குப் பிள்ளையார் சுழி போடப்படும். அது அநேகமா உங்க மகன்/மகள் திருமணம் சம்பந்தமா இருக்கலாம். பார்ட்டி, ரிசப்ஷன்னு இந்த வாரம் நீங்க ஒரே உல்லாச மனிதராத்தான் இருப்பீங்க. கையிருப்பு ஐஸ் மாதிரி கரையத்தான் செய்யும். ஸோ வாட்? அதான் எதிர்பாராத அதிர்ஷ்டம் ஏதோ அடிக்கப் போவுதே! வயிறு சம்பந்தமான உபாதைகள் சிலருக்கு ஏற்படலாம். கவனம்.

**சிம்மம் :**  *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

கொஞ்சம் சிரமமான வாரம்தான். எல்லா காரியங்களிலும் இழுபறி இருக்குன்னாலும் சமாளிச்சிடுவீங்க. உங்க புத்திக் கூர்மை ரொம்ப ஹெல்ப் பண்ணும். புதிய நபர்கள் விஷயத்துல ரொம்ப எச்சரிக்கையா இருங்க. முன்பின் தெரியாதவங்களுக்குப் பண உதவி செய்ய வேண்டாம். யாருக்கும் வாக்குக் குடுக்காதீங்க. ஜாமீன் கையெழுத்து போடாதீங்க. வீட்டுல கூட அநாவசியமான விவாதங்கள் வேணாம். உறவுக்காரங்ககிட்ட அறவே வம்பு வெச்சுக்காதீங்க. இப்ப உங்க முதல் எதிரி உங்க நாக்குதான். பேச்சுலயும் சாப்பாட்டுலயும் படுகவனமா இருக்கணும்.

**கன்னி :**  *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

சுமாரான வாரம். பெரிய பிரச்னை ஒண்ணும் வராது. ஆபீஸ்லயும் வீட்டுலயும் சுமூக நிலைதான். வழக்கு விவகாரம் ஏதும் இருந்தா வாய்தா வாங்கிடறது நல்லது. ஷேர் மாதிரியான முதலீடு செய்யற யோசனை இருந்தா நாலு பேர்கிட்ட கேட்டு செய்ங்க. போட்டி பந்தயங்கள் வேணாம். பயணத்துல எச்சரிக்கை அவசியம். இரவுப் பயணத்தை தவிர்த்துடறதே கூட நல்லது. கலைஞர்கள், எழுத்தாளர்களுக்குப் புகழ் கூடும் வாரம் இது. சினிமாக்காரங்களுக்குப் புதிய ஒப்பந்தங்கள் நடக்கலாம்.

**துலாம் :**  *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

## பிப்ரவரி 17 முதல 23 வரை

# அக்னிசர்மா பக்கம்

நீங்க ரொம்ப கவனமா இருக்கணும். கிட்டத்தட்ட வாஜ்பாயி நிலைமைல இருக்கீங்கன்னு சொல்லலாம். எப்படா ஆளு ஏமாறுவான்; கவுத்து விடலாம்னு உங்க 'அனுகூல சத்ருக்கள்' காத்துட்டிருக்காங்க. புதிய முயற்சிகள் எதையும் இப்ப தொடங்க வேணாம். யாரையும் எடுத்தெறிஞ்சி பேசாதீங்க. கடன் குடுக்கறதோ, வாங்கறதோ வேணாம். அதே போல, வீடு, மனை வாங்கற யோசனை இருந்தாலும் தள்ளிப் போடுங்க. ஆபீஸ்ல யார்கிட்டவும் அநாவசியப் பேச்சு வெச்சுக்காதீங்க. பத்து நாள்ல நிலவரம் கொஞ்சம் சீராகலாம்.



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

பிரச்னை இல்லாத வாரம். நினைச்சது நடக்கும். புதிய திட்டங்களைச் செயல்படுத்த சரியான நேரம் இது. கூட்டுத் தொழில் செய்யறவங்களுக்கு லாபம் கூடும். இரும்பு, மின்சாரம் தொடர்பான வேலைல இருக்கறவங்களுக்கும் பிரமாதமான நேரம். நல்ல பலன்கள் உண்டாகும். சிலருக்கு திடீர் அதிர்ஷ்டம் அடிச்சி ஃபாரின் போக சான்ஸ் வரலாம். வயசானவங்களுக்குக் கோயில் குளம்னு சுத்தற யோகம் இருக்கு. கல்யாண வயசு இளசுங்களுக்கு டும்டும் சான்ஸ் இருக்கு. ஹனிமூனுக்கு ஃபாரின் போக விசா சுலபமா கிடைக்கும். மொத்தத்துல இந்த வாரம் ஓஹோ!



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

செவ்வாய் பலமா உங்களை சப்போர்ட் பண்றதால உங்க பீல்டுல நீங்கதான் நம்பர் ஒன்னா நிப்பீங்க! எதிரிங்க காணாம போயிடுவாங்கன்றது மட்டுமில்லை. புதிய புதிய வாய்ப்புகளும் முன்னேற்றத்துக்கான பாதையும் உங்களைத் தேடி வரும். பெண்களுக்குப் பிரமோஷன் உறுதி. வீட்டுலேயும் சரி; ஆபீஸ்லேயும் சரி – ஆண்களுக்குப் புகழ் மழைதான்! விளையாட்டுத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு வெற்றி வாய்ப்பு கூடி வரும். பொதுவா, நீங்க சக்கை போடு போடப்போற வாரம் இது!



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

செயல் திறமை வெளிப்படும். போட்டி, வழக்குகள்ல வெற்றி உங்களுக்கே! நண்பர்கள் உங்களை ரொம்ப சப்போர்ட் பண்ணுவாங்க. அவசியமான நேரத்துல பண உதவிகள் தாராளமா கிடைக்கும். வீட்டுல ஏதோ விசேஷம் வரப் போவுது. விருந்து, கேளிக்கைன்னு ஜமாய்க்கப் போறீங்க. ஆபீஸ்ல அரியர்ஸ் பாக்கி இருந்தா இப்ப வந்துடும். மாணவர்களுக்கு இது ஜாலியான வாரமா இருக்கும். ஆனா, விஷ ஜந்துக்கள் விஷயத்துல எச்சரிக்கையா இருங்க. பிக்பாக்கெட்காரங்களையும் சேர்த்துத்தான் சொல்றேன்.



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

சமூக சேவைல நாட்டமுள்ளவங்களுக்குப் புகழ் கூடும் வாரம் இது. உங்க அந்தஸ்து குப்புனு உயரும். நீங்க போடற திட்டங்கள் நல்ல பலன் தரும். வீட்டுல மகிழ்ச்சிக்குக் குறைவு இருக்காது. ஆனா, செலவு கட்டுக்கடங்காம இருக்கும். மருத்துவச் செலவும் சிலருக்கு இருக்கும். வயசானவங்களுக்குப் புனித யாத்திரை போகும் வாய்ப்பு வரும். ஆனா, பயணத்துல எச்சரிக்கையா இருங்க. வெளில எதையும் வாங்கிச் சாப்பிட்டு வயித்தைக் கெடுத்துக்காதீங்க. அரசுப் பணியாளர்களுக்கு இடமாறுதல் இருக்கலாம். வெளியூர்ல இருந்து ஏதாவது நல்ல செய்தி வரலாம்.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

சுமாரான வாரம்தான். எதிலும் அகலக்கால் வைக்காதீங்க. பெரிசா திட்டம் போட்டுட்டு, நடக்கலையேன்னு பின்னால வருத்தப்படாதீங்க. எதையும் தீர யோசிச்சி செயல்படுங்க. வீட்டுல ஏதோ விசேஷம் வரப் போகுது. சுபச் செலவுகள் இருக்கும். மனைவியின் உறவுக்காரங்க உங்க வீட்டுல வந்து டேரா போடுவாங்க. உத்யோக ரீதில பெரிய அபிவிருத்தி இருக்காது. போலீஸ்காரங்களுக்கு 'மாமூல்' நிலைமை தொடரும். வழக்கறிஞர்கள், சட்ட வல்லுநர்களுக்குச் சாதகமான வாரம். சமயச் சொற்பொழிவாளர்களுக்கு நல்ல புகழ் கூடும் நேரம் இது. ○

நடக்குமென்பார், நடக்கும்!

டிரேட் ஃபேர் போயிருந்தேன், போன ஸண்டே. அதனோட charm எல்லாம் காணாம போய், இப்பல்லாம் வருஷாந்தர திவச சடங்கு மாதிரிதான் ஆயிடுச்சு. அரசாங்க ஸ்டால்ல எல்லாம் ஈ, காக்கா உள்ள நுழையறதில்லை. பொதுப் பணித்துறை, மாநகராட்சி, ஊராட்சித் துறை 'செட்'டுல எல்லாம் வெறும் ஃபோட்டோஸ் – ஸ்டுடியோ மாதிரி மாட்டி வெச்சிருக்காங்க. ரொம்பப் பரிதாபம், செய்தித்துறை அரங்கு. பொறுப்பாளரா இருந்த ஆசாமி, ரொம்பப் பொறுப்பா தூங்கிட்டு இருக்க, தப்பித் தவறி உள்ளே நுழைஞ்சிட்ட ஒரு கோஷ்டிக்கு அவரோட சயனக் காட்சிதான் பெரிய அட்ராக்ஷனா இருந்தது. இந்த மாதிரி பொருட்காட்சியினால சில ஆர்ட் டைரக்டர்களுக்கு வேலை கிடைக்கும்ங்கறதைத் தவிர வேற ஒரு உபயோகமும் இருக்கறதா தெரியலை.

டைனோஸர் காட்சி – இந்த வருஷப் புது ஐட்டம். பிரமாதமா இருந்தது. (அரசு சம்பந்தப்படாதது.) 73 அடி உயர டைனோஸரும், அதை விடக் கொஞ்சம் கொஞ்சமா சைஸ் குறைஞ்ச வேற நாலஞ்சு டைனோஸர்களும் எலக்ட்ரானிக்ஸ் தயவில் பிளிறல் சப்தம் கொடுத்து, கண்ணை உருட்டி, கையை – கழுத்தை அசைச்சி சுவாரஸ்யமா பயமுறுத்திச்சுங்க.

சுவாரஸ்யமான இன்னொரு ஐட்டம் டைனோஸர் ஷோ நடந்த இடத்துக்கு எதிரே சோளாபூரி பொரிச்செடுத்த இளைஞரோட லாகவம். உருளைக் கிழங்கு சைஸுக்கு மாவை உருட்டி எடுத்து, வெறும் கையால தட்டித் தட்டியே ஒரு மந்தார இலை சைஸுக்குப் பெரிசாக்கி, ரிங்-பால் போடறாப்பல அதை அப்படி ஒரு லாகவமா எண்ணெய்ல விட்டெடுஞ்ச காட்சி கண்ணுலயே நிக்குது. ஒரு நிமிஷத்துக்கு சுமார் எட்டு சோளாபூரி செய்து காட்டினார். (செஞ்ச விதம் சூப்பர். But, டேஸ்ட் சுமார்தான்.)

* * *

# களையிழந்த பொருட்காட்சி!

சுப்ரபாலனோட 'புல்வெளிப் பயணங்களை'ப் படிச்சுட்டு, ஒரு ராத்திரி, கொஞ்ச நேரம் தூக்கம் வராம அவஸ்தைப்பட்டேன். நமக்கு ரொம்பக் கிட்டக்க இருக்கற சமாசாரங்களை, நாம கவனிக்கத் தவறி விடும் அற்புதமான கணங்களை இந்தா, இந்தா, இந்தான்னு ஒரு மேஜிஷியன் மாதிரி எடுத்துத் தந்துட்டே இருக்கார், தம் கதைகளில். 'அட, இது நமக்குத் தெரிஞ்ச விஷயமாச்சே? அட, இதை எப்படி கவனிக்காம விட்டோம்? ஐயோ, இது நம்ம பக்கத்து வீட்டுக்காரனாச்சே? இது நம்மை மாதிரியே இருக்கேன்னு ஒவ்வொரு கேரக்டரையும் சுலபமா ஐடன்டிஃபை பண்ண முடியுது இவர் கதைகள்ல. புல்வெளிப் பயணங்கள், புஷ்பக விமானத்தில் போனேன், மைலா – இன்னும் ரெண்டு மூணு கதைகள் ரொம்பத் தரமா வந்திருக்கு. கவனிக்கப்பட வேண்டிய தொகுதி. (கங்கை புத்தக நிலைய வெளியீடு.)

* * *

“சுமி, நான் எங்கே உன்னை கோச்சிக்கிட்டேன்? இப்படி எனக்கெதிரா ரசிகர் மன்ற உறுப்பினர்களைப் போன வாரம் உசுப்பி விட்டுட்டியே, இது நியாயமா?”ன்னு சிட்லப்பாக்கம் ஷண்முகசுந்தரம் பதறி லெட்டர் போட்டிருக்கார். சிஷ்யவோட்டது செல்லக் கோபம்தான்றதால விட்டுடலாம்.

அவர் லெட்டர்ல ஒரு போர்ஷன் ரொம்ப இன்ட்ரஸ்டிங்கா இருந்தது. அப்படியே தரேன் :

‘..... ரசிகர் மன்ற உறுப்பினர்களை உசுப்பி விட்டிருக்கிறீர்களே, இது நியாயமா? தொண்டர்கள் உணர்ச்சிவசப்படக்கூடியவர்கள். “ஆணையிடுங்கள், ஆணையிடுங்கள்!” என்று அவர்கள் கேட்டுக் கொண்டே இருக்க வேண்டும். ஆனால், அண்ணா போல் ஆணையிடவே கூடாது. பால்தாக்கரே போல் ஆணையிட்டு விட்டால் பிரச்னையாகி விடும்...’

– இந்த மாதிரியான நுணுக்கமான அப்ஸர்வேஷன்ஸ் எனக்கு ரொம்பப் பிடிக்கும். இதைப் படிச்சி, வாய் விட்டே சிரிக்க முடியறதுக்குக் காரணம், அடிப்படைல உண்மை – ஜீவத் துடிதுடிப்போட இருக்கறதுதான். ஹாட்ஸ் ஆஃப் ஸார்.

* * *

புத்திசாலித் தொழிலாளிகள் எப்படி இருப்பாங்க? நாப்பது வருஷத்துக்கு முந்தைய ரீடர்ஸ் டைஜஸ்ட்லேருந்து ரொம்பத் தமாஷான ஐட்டம் எடுத்து அனுப்பியிருந்தார். நம்ம மன்ற உறுப்பினர் மும்பை கே. ஸ்ரீனிவாசன். (புது சீஃப் மினிஸ்டர் பரவாயில்லையா சார்?)

ஆனா ரீடர்ஸ் டைஜஸ்ட் ஸ்ட்ரிக்ட்லி காபிரைட்டட் – நாற்பது வருஷத்துக்கு முந்தையதா இருந்தாக் கூட...! வேற ஏதாவது அனுப்புங்க ஸ்ரீனிவாசன். தாக்கரே இருக்கிற இடத்துல ஹ்யூமருக்கா பஞ்சம்! தாக்கரேன்னு சொன்னதுமே அவர் மஹாராஷ்டிரா எழுத்தாளர்களோட போடற சண்டை ஞாபகத்துக்கு வருது. எழுத்தாளர் சம்மேளனத்துக்கு மஹாராஷ்டிரா அரசு 25 லட்சம் நிதி கொடுத்திருக்கு. எழுத்தாளர்களைக் கட்டுப்படுத்தி சென்ஸார் பண்ற தாக்கரேயை சம்மேளனத்துல புடிச்சு விடுவிடுன்னு விட, அவர் இருபத்தஞ்சு லட்சத்தைத் திருப்பிக் கொடுத்துட்டுப் பேசுங்கன்னு கண்டிஷன் போட, “சர்தான் போய்யா, இப்படி மிரட்டி எங்க வாயை அடைக்க முடியாது; உங்கப்பன் வீட்டுச் சொத்தா, கவர்மெண்டு பணம்... எங்க அபிப்பிராய சுதந்திரத்துல நீ தலையிட முடியாது”ன்னு கவிஞர் வஸந்த் பாபட் எழுத்தாளர்கள் சார்புல புடிச்சு விளாசிட்டார்.

இதுவே தமிழ்நாட்டுல நடந்திருந்தா என்ன ஆகியிருக்கும்...? உங்க கற்பனைக்கு விட்டுடறேன்! ○

— சுமி

பணக்கார நண்பர்களுடன் தனது வாழ்க்கை முறையை ஒப்புநோக்கிப் பார்க்கும் குழந்தையை திசை திருப்புகிறோம். ஆனால், நாமே குழந்தையைப் பிறருடன் ஒப்பு நோக்கிப் பார்க்காமல் இருக்கிறோமா...?

"பாரு! தீபாவோட கையெழுத்து எவ்வளவு முத்து முத்தா இருக்கு... நீயும் அதுமாதிரி எழுதணும்..."

"ஹாஃப் 'இயர்லி' எக்ஸாம்ல நீ எப்படியாவது ஃபேர்ஸ்ட் ராங்க் வரணும். குமார் உன்னை முந்திக்கிட்டானேன்னு உனக்கு வெட்கமாயில்லையா!"

- இப்படி ஒப்பு நோக்கிச் சிறிதும் பெரிதுமான சுமை மூட்டைகளைக் குழந்தைகளின் தலையில் வைப்பதைத் தங்கள் பிறப்புரிமையாகக் கருதும் பெற்றோர் உண்டு.

தாழ்வு மனப்பான்மைக்கு வழி வகுக்கும் இந்த ஒப்புநோக்கல் அபாயகரமானது.

குழந்தைகளின் மனத்தில் ஏற்கெனவே நிறைய அழுத்தங்கள். அப்படியிருக்க, நமது கனவுகளையும் எதிர்பார்ப்புகளையும் சேர்த்து அவர்கள் மீது சுமத்துவது அநீதி.

'குழந்தைக்குக்கூட மன அழுத்தம் இருக்குமா?' என்று அவநம்பிக்கையோ ஆச்சர்யமோ பட வேண்



# இதமான பொய் உதவாது!

டாம்.

"அண்ணா அந்த புத்தகத்தைப் பார்த்து அப்படியே புலி படம் போட்டுட்டான்மா... எனக்கு வர மாட்டேங்குது..." என்றோ;

"ஏன்மா எனக்கு மட்டும் பேப்பர் கப்பல் செய்ய வரலை...?" என்றோ அவர்கள் சிறு விஷயங்களுக்கு நொந்து போகிறார்கள். இத்தகைய சமயங்களில் இதமளிப்பதற்கு மாறாக வேறு விஷயங்களுக்காகப் பிறருடன் அவர்களை ஒப்புநோக்குதல் கொடுமை. படம் வரைய வரவில்லை என்கிறபோது,

"உனக்கெல்லாம் கட்டுப் போட்டாலும் வராது" என்றும் பதில் சொல்லக்கூடாது;

"வரும் வரும் போ" என்றும் விரட்டி விடக் கூடாது.

வைரக் கம்மலையோ பை நிறைய பணத்தையோ தொலைத்தால் நாம் படக்கூடிய இழப்புணர்வும் கவலையும் எத்தனை தீவிரமாயிருக்கும்...? தன்னால் சித்திரம் வரைய முடியவில்லையே என்ற குழந்தையின் கவலையும் அதேயளவுக்குத் தீவிரமானது.

இழந்த பொருள் கிடைக்குமா கிடைக்காதா என்பது கேள்விக்குறிதான். ஆனால், அதைத் திரும்பப் பெறுவதற்கான முயற்சிகளைச் செய்தாக வேண்டும். இழப்பினால் விளைந்த கவலை இதர வேலைகளைப் பாதிக்க விடக்கூடாது– இந்தப் பக்குவ நிலை பெரியவர்களுக்குக் கைவருவதே கஷ்டம் என்கிறபோது சின்ன உலகத்தில் வண்ணக் கனவுகளுடன் உலவும் சிறுவர்களின் பாடு...?

அணுக்கமான அரவணைப்பும் அளவான ஊக்குவிப்பும் அளித்து உதவுவதோடு, மிக மிக மென்மையாக உண்மையையும் அவர்களுக்குத் தெரிவித்தாக வேண்டும் – அவர்களுடைய ஆற்றலின் அளவு என்ன என்பது குறித்த உண்மை.

"வா, நான் உன்னோட உட்கார்ந்து பார்க்கிறேன் – என்ன வரையறேன்னு..." என்று சில நிமிடங்கள் முழுக் கவனம் அளியுங்கள்.

"நல்லாத்தானே வரைஞ்சிருக்கே – கிளி பொம்மை..."

"ஆனால் அண்ணாவுடையது மாதிரி வரல்லியே..."

"அண்ணாவுடையது மாதிரி வர லேன்னா பரவாயில்லை... நீ திரும்பத் திரும்ப வரைஞ்சு பழகு... உனக்கும் அதே மாதிரி போட வருதா பார்ப்போம்..."

"வரலைன்னா...?"

"முதல்ல வரைஞ்சு பாரேன்..."

"இல்லே, எனக்கு வராது."

"இதோ பாரு! வரைஞ்சு பழகினாத்தான் தெரியும். வருமா வராதான்னு... அப்பவும் வரலைன்னா போயிட்டுப் போகுது...! ரன்னிங் ரேஸ்ல எப்பவும் நீதானே முதல்ல வர்றே! அண்ணாவாலகூட உன்னைத் தோற்கடிக்க முடியலியே...!"

"உம்..."

"உனக்கு வேகமா ஓட வருதுன்னா அண்ணாவுக்கு நல்லாப் படம் போட வருது. உன் ஃபிரண்ட் மீரா எப்படி அழகா பாடறா...? அப்புறம் கிரீஷ் இருக்கானே பக்கத்து வீட்லே, அவன் டென்னிஸ் நல்லா ஆடறான் இல்லையா? ஒவ்வொருத்தருக்கு ஒவ்வொரு விஷயம் நல்லா செய்ய வருது... அவங்க எல்லாரும் உன்னை மாதிரி ரன்னிங் ரேஸ்ல ஃபர்ஸ்ட் வர்றதில்லியே..."

இந்த விளக்கம் திருப்தியளிக்க, குழந்தை தடம் மாறி வரும்.

"அப்ப நான் உனக்கு வேற கிளி வரைஞ்சு கலர் பண்ணித் தரட்டுமா அம்மா!"

"கண்டிப்பா பண்ணிக் கொடு... நான் அதை பத்திரமா சுவத்துல ஒட்டி வைக்கறேன்..."

– குழந்தைகள் இருக்கும் எல்லா வீடுகளிலேயும் கேட்கக் கூடிய உரையாடல்தான் இது.

ஊக்கமளிக்கிற உத்வேகத்தில் "நீ வரைஞ்ச படம்தான் பெஸ்ட்" என்ற பொய்யை மட்டும் சொல்லி விடாதீர்கள்

தாற்காலிகமாய் இதமளிக்கிற பொய் நிரந்தரமான பிரச்னைக்குக் காரணமாகி விடும்.

(அடுத்த வாரம் வரை...)

# தமிழ்வாணனின் கறுப்புக் கண்ணாடியும் தொப்பியும்!

எம்.ஜி.ஆர், கருணாநிதி, பித்துக்குளி முருகதாஸ் என்று பல்வேறு பிரபலங்களும் கறுப்புக் கண்ணாடி அணிபவர்கள்தான் என்றாலும் கறுப்புக் கண்ணாடியைப் பார்த்ததும் முதலில் நினைவுக்கு வருபவர் தமிழ்வாணன்தான்!

தமிழ்வாணன் ஏன் கறுப்புக் கண்ணாடி அணிய ஆரம்பித்தார்?

"நான் நல்ல உயரமுமில்லை; குள்ளமும் இல்லை; சிவப்பும் கிடையாது; கறுப்பும் கிடையாது; குண்டுமல்ல; ஒல்லியுமல்ல. பின், நாலு பேருடன் நான் நிற்கிறபோது எப்படி என்னை அடையாளம் சொல்ல முடியும்? எனவே, என்னைப் பிரத்யேகமாய் அடையாளம் காட்டிக் கொள்ள விரும்பினேன். யோசித்தேன். கறுப்புக் கண்ணாடியும் தொப்பியும் அணிய ஆரம்பித்தேன்!" இதுதான் மேற் சொன்ன கேள்வியை தமிழ் வாணனிடம், அவரது மூத்த மகன் லட்சுமணன் (அதாங்க லேனா தமிழ்வாணன்) ஒருமுறை கேட்டபோது, அவர் சொன்ன பதில்.

ஆனால் வீட்டில் இருக்கிற போதும் சரி, ஆபீசில் இருக்கிற போதும் சரி, தமிழ்வாணன் கறுப்புக் கண்ணாடி அணிந்து கொள்ள மாட்டார். பொது இடங்களிலும், பெரும்பாலும், தம்மை அடையாளம் காட்டிக் கொள்ளாமல், சாதாரண மக்களோடு பேசுவதை அவர் மிகவும் விரும்புவார். எனவே அந்தச் சமயங்களிலும் அவர் கண்ணாடியைத் தவிர்த்து விடுவார். ஆனால், பொது நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளுகிறபோது, கண்டிப்பாக கறுப்புக் கண்ணாடி, தொப்பி அணிந்தே தோன்றுவார்.

கல்கண்டு அலுவலகத்துக்கு வரும் சில வாசகர்கள், கறுப்புக் கண்ணாடி அணியாத தமிழ்வாணனை வேறு யாரோ என்று நினைத்து, அவரிடமே, தமிழ்வாணனைச் சந்திக்க வேண்டும் என்பார்களாம். இவரும், 'அவர் கொஞ்சம் பிஸி; கொஞ்சம் காத்திருங்க. உள்ளே போய் தகவல் சொல்லுகிறேன்' என்று சொல்லிவிட்டு உள்ளே போவாராம். மறுபடி தொப்பி, கறுப்புக் கண்ணாடி சகிதம் வந்து, வாசகர்களைச் சந்திப்பாராம்.

தமிழ்வாணனின் அயல்நாட்டு நண்பர்கள் சொல்லியதன் பேரில் அயல்நாட்டினர் பலர், தமிழ்வாணனிடம் ஜோதிடம் பார்க்க வருவதுண்டு. அப்படி ஒருவர், தமது உள்ளூர் நண்பர் ஒருவருடன் தமிழ்வாணனிடம் ஜோதிடம் கேட்க வந்தார். கறுப்புக் கண்ணாடியுடன் வரவேற்ற தமிழ்வாணனைப் பார்த்துவிட்டு, அந்த அயல்நாட்டுக்காரர், தமது நண்பரிடம், "கண்பார்வை இல்லாத போதும், இவர் கைரேகை பார்க்கிறாரே? ஆச்சரியமாக இருக்கிறதே!" என்று கூறினாராம். அப்புறம், விஷயத்தை விளக்கினாராம் தமிழ்வாணன்!

இன்னும் சில சமயங்களில் கறுப்புத் தொப்பி, கறுப்புக் கண்ணாடியைப் பார்த்துவிட்டு "நீங்கள் துப்பறியும் நிபுணரா?" என்பார்களாம். இப்படிப் பலரும் அடிக்கடி கேட்க ஆரம்பித்தவுடன், தமது துப்பறியும் கதைகளில் வருகிற டிடெக்டிவ் சங்கர்லாலுக்கு பதிலாக தாமே துப்பறிவதாய் மாற்றி எழுத ஆரம்பித்தார்.

தமிழ்வாணன், கறுப்புக் கண்ணாடியை அடுத்து, வெள்ளை நிறத்தில் ஃபைபர் தொப்பிதான் முதலில் அணிந்து வந்தார். ஆனால், எம்.ஜி.ஆரும் அதே போலத் தொப்பி அணியத் தொடங்கியவுடன், கறுப்புத் தொப்பிக்கு மாறிவிட்டார். 1970ல் ஜப்பானில் நடந்த எக்ஸ்போ 70



கண்காட்சிக்குச் சென்றிருந்தபோது, அங்கேதான் ஃபைபர் இழையாலான

கறுப்பு நிறத் தொப்பியை வாங்கினார். அது முதல், அதே தொப்பியைத்தான் இறுதி வரை பயன்படுத்தி வந்தார்.

"இரவு நேரங்களிலும் கூட கறுப்புக் கண்ணாடி அணிவது சிரமமாக இல்லையா?" என்று ஒரு தடவை தமிழ்வாணனிடம் கேட்டபோது,

"இல்லை. கண் பார்வை இல்லாத வருக்கு, காது கேட்கும் சக்தி கூர்மை யாக இருக்குமே அதுபோல, இரவானா லும், கறுப்புக் கண்ணாடி அணிந்திருக் கிறோம் என்பதால் தடுமாற்றம் கூடாது என்று நான் கொஞ்சம் எச்சரிக்கை யாகவே இருப்பேன். இப்போது அந்த உணர்வு, என்னுள்ளேயே ஒன்றிப் போய் விட்டது" என்பார் அவர்.

ஆனாலும் காலம் சென்ற குமுதம் ஆசிரியர் எஸ்.ஏ.பி. மீது கொண்டிருந்த மரியாதை காரணமாக, அவர் முன்பு, கறுப்புக் கண்ணாடி அணிய மாட்டாராம் தமிழ்வாணன்.

அவர் மரணமடைந்தபோது கூட உடலுக்கு தொப்பியும், கறுப்புக் கண்ணாடியும் அணிவிக்கப்பட்டிருந்தது. சிதைக்கு எரியூட்டுவதற்கு முன்பாக, அவை இரண்டையும் எடுத்துக் கொண்டு விட்டார்கள்.

"அந்தத் தொப்பி, இன்னமும் எங்களிடம்தான் உள்ளது. ஆனால் அவருடைய கறுப்புக் கண்ணாடி எங்களிடம் இல்லை. தந்தையாரின் மறைவுக்குச் சில காலம் கழித்து, மலேசிய நாட்டைச் சேர்ந்த அப்பாவின் பரம ரசிகரான மணி அரசு என்பவர் எங்களைச் சந்தித்து, 'தமிழ்வாணனின் நினைவாக அவரது கறுப்புக் கண்ணாடியை எனக்குக் கொடுங்கள்' என்று கேட்டார். எங்களுக்கு ரொம்பவும் தயக்கம். ஆனாலும் அவரது உணர்வு களுக்கு மதிப்புக் கொடுத்து, அவரிடம் அப்பாவின் கறுப்புக் கண்ணாடியை மட்டும் கொடுத்து விட்டோம்" என்கிறார் லேனா தமிழ்வாணன். (லேனா அணிவது வேறு கண்ணாடிங்க!)

— மௌலி

# குறையொன்றுமில்லை

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

**வே**தத்துக்கு ஸ்வரம் முக்கியம். இப்படி இப்படித்தான் சொல்ல வேண்டும் என்று நியமம் உண்டு. ஆனால் சஹஸ்ர நாமத்தை எப்படி வேணுமானாலும் சொல்லலாம். ராகமாகப் பாடுகிறார் ஒருத்தர். இன்னொருத்தர் நிறுத்தி நீட்டிச் சொல்கிறார். அவரவருக்குத் தெரிந்த பிரகாரம் சொல்கிறார்கள். இதிலே எந்த தோஷமும் இல்லை. ஏன் இப்படிச் சொல்கிறீர்கள் என்று கேட்க முடியாது. ஆனால் வேதத்தில் அப்படி இல்லை கிரமப்படி அந்தந்த ஸ்வரத்திலே சொன்னால்தான் ஈச்வரனுக்குத் திருப்தி. இல்லையானால் விபரீதமான பலன்களெல்லாம் ஏற்படும்.

சஹஸ்ரநாமத்தை எளிய முறையிலே உச்சரிக்கலாம் என்று சொன்னேன். ஆனால் சஹஸ்ரநாமத்தில் வேத மந்திரமே நாம ரூபமாக வந்திருக்கிறது. அதைச் சொல்வதன் மூலம் பரம சுலபமாகப் பலனை அடையலாம்.

சுலபமாக வருவதனாலேயே அதற்குப் பெருமை இல்லை என்று நினைத்துவிடக் கூடாது! அந்த சுலபமான விஷயத்தை நாம் பலமாகப் பிடித்துக் கொள்ள வேண்டும்.

விச்வம் .விஷ்ணு வஷட்கார: என்று மூன்று பதம். இதிலே இடையிலே இருக்கக் கூடிய அவனுடைய பெருமையைச் சொல்லித்தான் எல்லாம் நடக்கிறது. விஷ்ணு சஹஸ்ரநாமம் என்றுதானே அதற்குப் பெயர்; வஷட்கார சஹஸ்ரநாமம் என்று பெயர் உண்டோ!

ஆகையினாலே இடையிலே இருக்கிற விஷ்ணுவினுடைய பெருமையைச் சொல்ல வந்தது அது. எங்கும் நிறைபவன் அவன் என்பதை ஆசார்யர்கள் எட்டு விதமாகப் பேசுகிறார்கள்.

விஷ்ணு என்பவன் ஜகத்காரண வஸ்து. ஜகத்துக்கெல்லாம் காரணன் அவன் என்பதை இன்னொன்றை வைத்து நாம் தெரிந்து கொள்ள வேண்டியதில்லை. விஷ்ணு என்ற நாமாவே போதும்.

இரண்டாவது–அவன் சர்வ ரக்ஷகன் என்கிற விஷயமும் விஷ்ணு சப்தத்தால் தெரிகிறது. ஜகத்காரணன் மட்டுமல்ல, அனைத்தையும் ரக்ஷிக்கக் கூடியவன்.

மூன்றாவது அர்த்தம். சர்வ வியாபி. எங்கும் பரவியிருக்கிறான் என்பதும் விஷ்ணு சப்தத்தினால் நமக்குக் கிடைக்கிறது.

நான்காவது சர்வசேஷி. எல்லாவற்றையும் தனக்கு சேஷமாய்–உரியதாய்–உடையவன். அவன் எடுத்தாளும்படியாக, அவன் ஆனந்தத்துக்காக எல்லாவற்றையும் பெற்றிருக்கக் கூடியவன்.

ஐந்தாவது–சர்வாந்தர்யாமி. எல்லாவற்றினுள்ளும் வியாபித்திருக்கக் கூடியவன். முதலில் சொன்னது சர்வ வியாபி என்பது. அது பகிர் வியாப்தியைச் சொல்கிறது. பகிர் வியாப்தி என்றால் வெளியே தெரிகிற தோற்றங்களில் இருப்பவன். சர்வாந்தர்யாமி என்றால் உள்ளுக்குள்ளே அவன் உறைவதைச் சொல்கிறது. இப்படி உள்ளுக்குள்ளே உறைந்து நிற்பது சர்வாந்தர்யாமித்வம்.

ஆறாவது விஷயம் வேத வேத்யன். வேதத்தினால் அறியப்பட வேண்டியவன். வேதம் ஒன்றினால் உணரப்பட வேண்டியவன் என்கிற விஷயமும் இந்த விஷ்ணு சப்தத்தினாலே நமக்குக் காணக் கிடைக்கிறது.

அதற்கடுத்து ஏழாவது– வேதாந்த வேத்யன். வேதத்தினுடைய அர்த்தம் எது என்றால் சுருதி சிரஸி–அதாவது சுருதிக்கெல்லாம் சிரஸாய் இருக்கக் கூடியது–அதுதான் உபநிஷத் பாகம். உபநிஷத் பாகமாகச் சொல்லப்படக் கூடியவன் விஷ்ணு.

எட்டாவதாக நமக்குக் காட்டித் தரப்படக்கூடியது ஸ்ரீயப்பதித்வம். லக்ஷ்மியோடு சேர்ந்திருக்கக் கூடியவன் என்கிற உயர்ந்த பெருமை அவனுக்கே உண்டு– என்கிற அந்தப் பெருமையினால்தான் அவனுக்கு இவ்வளவு பெருமையும்! அதனால் தான் எட்டாவதாகப் பெரியவர்கள் அதைச் சொன்னார்கள்.

முன்னே சொன்ன ஜகத்காரணத்வமோ



4

சர்வ வியாபாகத்வமோ சித்திக்க வேண்டுமானால் லக்ஷ்மிபதியாக அவன் இருப்பதனாலேதான் இதெல்லாம் சித்திக்கிறது அவனுக்கு என்று காட்டிக் கொடுக்கிறார்கள்.

–இப்படி எட்டு விதமான பெருமையும் விஷ்ணு என்கிற சப்தத்தினாலே கிடைக்கிறது. அதனால்தான் பிரும்மாண்ட புராணத்திலே நாரதர் விஷ்ணு சஹஸ்ரநாம சப்தங்களை உள்ளடக்கிய உபதேசத்தை எடுத்துச் சொன்னார்.

**வி**ஷ்ணுவே வேத வேத்யன் என்பதையும் நாம் தெரிந்து கொள்ள வேண்டும். வேதமே எல்லாவற்றுக்கும் மூலம். அதனால் அறியப்பட வேண்டியவனும் அவனே. அவனே அதைச் சொல்லியிருக்கிறான் கீதையிலே. 'வேதஸ்ச சர்வைஹி' என்று

பகுவசனத்தில் சொன்னதாலே 'ரிக், யஜுர், சாம அதர்வண வேதங்களால்- நான்கு மறைகளால் அறியப்பட வேண்டியவன் நானே' என்று ஆகிறது.

நான்மறைகளும் தேடியோடியும் காண மாட்டாத எம்பெருமான். அத்தனை வேதங்களும் அவனைத் தெரிந்து கொள்ள முடியாமல் திரும்பி ஓடி வருகிறது! அப்படி மறைகளாலே உணர முடியாத பெருமை எம்பெருமானிடத்திலே இருப்பதாலே எல்லா மந்திரங்களும் அவன் திருவடிக்கே உரியது என்று ஏற்படுகிறது.

முதலில் ரிக் வேதத்தை எடுத்துக் கொள்ளுங்கள். அதிலே சாமானியமாக சில மந்திரங்கள் எல்லோருக்கும் தெரியும்.

ஒரு யக்ஞத்திலே போய் நாம் உட்கார்ந்தோமானால் நான்கு வேதங்களுக்கும் அதிலே வினியோகம்-நான்கு வேதங்களுக்கும் சம்பந்தம் உண்டு. அப்படி நான்கு வேத சம்பந்தம் இருந்தால்தான் யக்ஞம் சிறக்கும்-

முதலில் ரிக் வேதம் வருகிறது- ரிக் வேதத்தினாலே தேவதைகளையெல்லாம் ஸ்தோத்திரம் பண்ண வேண்டும். அப்படி ஸ்தோத்திரம் பண்ணும்போது அவர்கள் சந்தோஷமாக இருக்கிறார்கள்.

தேவதைகள்தான் ஸ்தோத்திரப் பிரியர்கள் என்றில்லை, மனிதர்களும் ஸ்தோத்திரப் பிரியர்கள் அல்லவோ என்கிறது வேதம். அதனால்தான் விச்வாமித்திரர் தசரதனைப் பார்க்க வருகிறபோதே ஏகமாக ஸ்தோத்திரம் பண்ணுகிறார்.

வேதமும் நிறைய ஸ்தோத்திரம் பண்ணுகிறது. திரும்பத் திரும்ப ஸ்தோத்திரம் பண்ணினால் தேவதைகள் சந்தோஷமடைகிறார்கள், பகவானும் ரௌத்ரம் அடங்கி மங்களமான மூர்த்தியாக மாறிப் போய் விடுகிறான். சமகம் மொத்தமும் சொல்லி முந்நூறுக்கும் மேலான பிரார்த்தனைகளைச் செய்யும்போது ஆனந்தமாகிவிடுகிறான். அந்த சமயத்தில் நாம் கேட்பதை வாரி வழங்குகிறான்.

தேவதைகளும் அதே மாதிரி ஸ்தோத்திரப் பிரியர்கள்.

சஹஸ்ரநாமத்திலும் பின்னாலே ஸ்தவ்ய: ஸ்தவ்ய ப்ரிய: என்ற நாமங்கள் வரும். ஸ்தோத்தரிக்கத் தகுந்தவன், ஸ்தோத்திரம் பண்ணினால் கேட்பவன்-என்று பொருள்.

பகவான் ஸ்தோத்திரப்ரியனாயிருக்கிறதாலே தான் நாமெல்லாம் வந்து உட்கார்ந்து இப்படி சஹஸ்ரநாமத்தைப் பற்றிப் பேசுகிறோம்! இல்லையானால் சஹஸ்ரநாமம் தோன்றியிருக்குமா! நாம் சஹஸ்ரநாமம் சொல்கிறபோது அவன் எங்கேயோ திரும்பிப் பார்த்துக் கொண்டிருந்தானானால் கேட்க மாட்டேன்- என்று திருப்பிக் கொண்டானானால், நாம் எங்கே போய்ச் சொல்வது அதை...?! ஆகையினாலே, பகவான் ஸ்தோத்திரப் பிரியன்.

இங்கே யக்ஞத்திலும் ரிக் வேதத்தினாலே, யக்ஞ வாடிகைக்கு வரக் கூடிய தேவதைகளையெல்லாம் ஸ்தோத்திரம் பண்ணுகிறோம்.

அப்படி ஸ்தோத்திரம் பண்ண வேண்டுமானால் முதலில் அவர்கள் வரவேண்டுமல்லவா! வந்த பிற்பாடுதானே ஸ்தோத்திரம் பண்ணலாம். வரவழைக்க வேண்டுமென்றால் கூப்பிடவேண்டும். கூப்பிடுவதற்கு என்ன பண்ணுவது...? சாம வேதத்தால் அழைக்க வேண்டும். கானமாகச் சொல்வது சாம வேதம். கானத்தினாலே கூப்பிட வேண்டும். ரம்யமானது சாமவேதம். அப்படி இனிமையான, ரம்யமான சாம வேத்தினாலே, உத்கீதத்தினாலே கானம் பண்ணி அழைக்க வேண்டும்.

உத் என்றால் மஹாலக்ஷ்மி. மஹாலக்ஷ்மியினுடைய உயர்ந்த சாந்நித்யம் விளங்கும்படியான மந்திரம் இது. ஆகையினால், அப்படிப்பட்ட உத்கீதத்தினால் அழைக்க வேண்

## அருள்வாக்கு

இப்போது நாம் எல்லோரும் நம் நிஜ ஸ்வரூபத்தை விட்டுவிட்டு வேஷத்தில் இருக்கிறோம். நமக்கு வேண்டியவர்களை விட்டு விட்டால் தவிக்கிறோமே, நம்மையே விட்டு விட்டதற்கு எவ்வளவு தவிக்க வேண்டும்? நம் ஆனந்த ஆத்ம ஸ்வரூபத்தோடு, அதுவே நாமாக எப்போது கலக்கப் போகிறோம் என்கிற தவிப்பும், அதைப் பற்றிய நினைப்பும் நமக்கு ஸதா இருக்க வேண்டும். பரமாத்மாவுடன் கலப்பதற்காக இப்படிச் சகிக்க முடியாமல் தவிப்பதுதான் உண்மையான பிரேமை. அந்தப் பிரேமைக்குத்தான் பக்தி என்று பெயர்.

இதற்கு முதல் படியாக வெளிப் பூஜை, கோவில் வழிபாடு எல்லாம் வேண்டியிருக்கிறது. உலக நினைப்பே



ஓயாத காரியமாக இருப்பவர்களுக்கு ஆரம்பத்தில் இவைதான் பரமாத்மாவை நினைக்கச் சாதனங்களாகும். இந்தக் கட்டத்தில் ஸ்வாமி கோவிலில் மட்டுமின்றி எல்லா இடத்திலும் வியாபித்திருக்கிறார். நாமும் கூட அவரேதான் என்று நாம் உணராவிட்டாலும் பரவாயில்லை. மூலவிக்கிரகத்தில்தான் ஸ்வாமி இருக்கிறார் என்று நினைத்து, கோவில் தூணிலேயே நாம் பிரசாதக் கையைத் துடைத்து விட்டு வந்தாலும் பாதகமில்லை. மூல விக்கிரகத்திலாவது ஸ்வாமி இருக்கிறார் என்று பயப்பட்டு அங்கே கையைத் துடைக்காத அளவுக்கு வந்திருக்கிறோமல்லவா? ஸ்வாமி இல்லவே இல்லை என்று நினைக்காமல் எங்கேயோ ஓரிடத்திலாவது ஸ்வாமி இருக்கிறார் என்று பயபக்தியுடன் ஆரம்பித்தாலே போதும் – சிரத்தை தளராமல், நம்பிக்கை மாறாமல், அப்பியாசம் செய்து கொண்டேயிருந்தால் நாளாவட்டத்தில் ஸ்வாமி எங்கும் இருக்கிறார், எல்லாமாக இருக்கிறார் என்பது புத்திக்குப் புரியும். புத்திக்குப் புரிவது அநுபவமாக ஆவதற்கு, "என்னையே எனக்குக் கொடு" என்று பிரார்த்தித்துக் கொண்டேயிருக்க வேண்டும். ஞானாம்பிகை கிருபை செய்வாள்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

டும்.

திருவாய்மொழி மொத்தமும் சாம வேத சாரம்!

சாம வேதத்தினாலே தேவதைகளையெல்லாம் அழைக்க வேண்டும்; அவர்கள் வந்தவுடனே ரிக் வேதத்தினாலே ஸ்தோத்திரம் பண்ண வேண்டும்; தேவதைகளுக்கு ஹவிஸைக் கொடுக்க வேண்டும். எதனாலே கொடுப்பது என்றால், யஜுர் வேதத்தினாலே. அக்னையே ஸ்வாஹா, ப்ருத்விவை ஸ்வாஹா என்று யஜுர் வேத்தினால் திருப்தி பண்ண வேண்டும்.

இதெல்லாம் சரியாக நடக்கிறதா? அதாவது கானம் சரியாக நடக்கிறதா? ஸ்தோத்திரம் சரியாக நடக்கிறதா? ஹோமங்கள் சரியாக நடக்கிறதா? அந்தந்த மந்திரங்கள் சரியாகச் சொல்லப்படுகிறதா என்பதைப் பார்த்துக் கொண்டேயிருக்க வேண்டும். அதற்கு நியமிக்கப்படுபவரை யக்ஞத்திலே ஹோமத்துக்குத் தெற்குப் பக்கமாக உட்கார வைப்பார்கள். அவரும் எழுந்திருக்கக் கூடாது; ஹோமம் செய்கிறவர்களும் எழுந்திருக்கக் கூடாது. இப்படி, எல்லாம் தெரிந்து, எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருப்பவர் அதர்வண வேதம் தெரிந்தவராக இருக்க வேண்டும்.

ஆக, ரிக், யஜுர், ஸாம, அதர்வண வேதம் நான்குக்கும் யக்ஞத்திலே சம்பந்தம். நான்கும் யக்ஞத்திலே உபயோகப்படும். நான்கினாலும் அறியப்பட வேண்டியவன் விஷ்ணு.

**வி**த்யாரண்யர் எழுதிய பாஷ்யத்தில் அழகாக வருகிறது– 'பிரத்யக்ஷமாக தெரிகிற ஹோம அக்னி!' என்று அழைத்துச் சொல்கிறார்:

'அக்னியை ஸ்தோத்திரம் பண்ணுகிறேன்.'

நம்மை முன்னுக்கு அழைத்துச் செல்வதனாலே அவனுக்கு அக்னி என்று பெயர்.

அக்னி என்ற சப்தத்துக்கே, இப்போது இருக்கிற நிலையைக் காட்டிலும் மேலானதைக் கொடுக்கக் கூடியவன் என்றுதான் அர்த்தம்.

'அப்படிப்பட்ட அக்னியை ஸ்தோத்திரம் பண்ணுகிறேன்' என்று சொல்லும் மந்திரத்தில், புரோஹிதம் என்ற பதம் வருகிறது.

புரஹ என்றால் மேலே

ஹிதம்–நன்மையைப் பயக்கக் கூடியவன்.

புரோஹிதான் என்று ஏன் பெயர் வந்தது என்றால், மேல் வரும் காலத்திலே நமக்கு நன்மையை உண்டு பண்ணக் கூடியவர்கள் என்பதனாலே...

(தொடரும்)



# அப்பா



இதய வடிவ பிஸ்கட் விளம்பரம். "உங்களுக்குப் பிடித்த வில்லன் யார்?" கேமெரா ஓர் இளைஞனை நெருங்குகிறது. தலையைத் தடவுகிறான். "எங்க அப்பா... படம் பார்க்க காசு தரமாட்டாரே..." கெக்கெலிக்கும் சிரிப்பு. "நேராக இதயத்திலிருந்து" என்று பின்னால் குரல். டி.வி பார்த்துக் கொண்டிருந்த கௌரி சிரித்துக் கொண்டாள். எத்தனை முறை அவள் அப்பாவை 'வில்லன்' என்று திட்டியிருப்பாள். அப்பா இல்லாத நேரத்தில், 'எப்படிம்மா நம்பியாரும், அசோகனும், வீரப்பாவும், மனோகரும், ராம்தாஸும் மிக்ஸில போட்டு அரைச்ச கலவையில் பண்ணின ஆளைப் போய் கல்யாணம் பண்ணின...' என்பாள். 'சத்யராஜ், ஆனந்த் ராஜ், ரகுவரன்... எல்லாரையும் விட்டிட்டியே' என்பாள் அம்மா, சிரிக்காமல்.

மணியைப் பார்த்துக் கொண்டாள் கௌரி. இப்போது கிளம்பினால் சரியாக இருக்கும். எளிமையான அரக்குப் பாலிகாட் புடைவை, பொருத்தமாய் ப்ளவுஸ். சின்னத் திலகம். முத்துத் தோடு. லேசாய் பெர்ஃயூம். 'மிகச் சிறந்த இளம் நிர்வாகி' விருது வாங்கப் போய்க் கொண்டிருக்கிறாள். இந்தியா முழுவதும் ஐம்பதுக்கும் மேற்பட்டவர்கள் கலந்து கொண்ட போட்டி. இவள் வெற்றியைப் பற்றி இகனாமிக் டைம்ஸ் எழுதியிருந்தது. பிசினஸ் வேர்ல்ட் பத்திரிகை ஒரு பேட்டிக்காகக் கேட்டிருந்தது. இன்றைய நிகழ்ச்சி முடிந்ததும் பேட்டி வேறு. 'அம்மா ரெடியா' என்றாள் கௌரி. பட்டுப் புடைவையில் அம்மா வெளிப்பட பின்னால் நல்ல வெள்ளை வேட்டியில் அப்பா! "அப்பா நீங்களும் வர்ரீங்களா?" என்று கௌரி வாயைப் பிளந்தாள்.

நினைவு தெரிந்து அப்பா எந்த நிகழ்ச்சிக்கும் வந்ததில்லை. பள்ளியில் பரிசு வாங்கும் போது வந்ததில்லை. பெஸ்ட் அவுட் கோயிங் ஸ்டூடண்ட் என்று பள்ளியில் சர்டிபிகேட் கொடுத்தபோது வரவில்லை. கல்லூரியில் பரிசு வாங்கும் போது, பல்கலைக் கழகத்தில் மெடல் கொடுத்தபோது... எதற்கும் வந்ததில்லை. 'இது ஒண்ணுமில்லைம்மா, இதை விடப் பெரிசா பரிசு வாங்கும் போது வர்ரேன்' என்பார். அவருக்கு எப்போதும் வேலை இருக்கும். கல்யாண சமையல் மற்றும் இதர கான்ட்ராக்டர் வேம்பு ஐயர் கோஷ்டியில் அவருக்கு வேலை. நாற்பது வாட் பல்பு மங்கலாக எரியும் அழுக்கான சமையல் அறையில், கௌரி அம்மாவின் பக்கத்தில் உட்கார்ந்து படிக்கும் போது, மேல் துண்டில் சுற்றிய ஜாங்கிரியையும், லட்டுவையும் எடுத்துக் கொண்டு வருவார். 'கொஞ்சமாத் தின்னு. வயிறு கெட்டுப் போய், நாளைக்கு ஸ்கூலுக்கு மட்டம் போடாத என்பார். என்ன உடம்பு சரியில்லை என்றாலும் கௌரியைத் தூக்கிக் கொண்டு போய் பள்ளியில் உட்கார வைப்பார். 'அப்பா, கோல புஸ்தகம் வாங்க வாம்பா. என் ப்ரெண்ட்ஸ் எல்லாரும் வாங்கியிருக்கா' என்றால், 'அட அசடே, இன்னிக்கு சமையல் பண்ணப் போன வீட்டில் பேசிண்டா, ரீடர்ஸ் டைஜஸ்ட் படிச்சா நல்லா நாலெட்ஜ் வளரும், இங்கிலீஷ் பாஷையும் நல்லா வரும்னு. வாட்சை வித்து ஆறு மாச சந்தா கட்டிட்டேன்' என்பார்.

பாரதி பாஸ்கர்

பத்தாம் வகுப்பு முடிந்து லீவில், 'டைப், ஷார்ட் போறேன்ப்பா. காலனில எல்லாரும் போறா' என்றால், 'மூளை கெட்டவனே, நீ சொல்லி நாலு பேர் நோட்ஸ் எடுத்துக்கணும். உனக்கு எதுக்கு? ஆடிட்டர் ஆக சிஏ படிப்பாளே, அதுக்கு இப்போ ப்ளஸ் டு முடிச்சா நேரா போகலாமாம். ஒரு ஃபௌண்டேஷன் பரீட்சை எழுதணுமாம். அதுக்கு இப்பவே பிடிச்சு படி. ஒரு கோச்சிங் சென்டரில் பணம் கட்டிட்டேன். வேம்பு அண்ணா கிட்ட அட்வான்ஸ் வாங்கி' என்பார். 'பெண் குழந்தையாச்சே, குழம்பு, ரசம் வைக்கத் தெரிய வேணாமா? கடலைப் பருப்புக்கும், துவரம் பருப்புக்கும் வித்யாசம் தெரியலை அவளுக்கு' என்று அம்மா புலம்பினால் 'குழம்பு, ரசம் வைக்க உன்னை மாதிரி ஆயிரம் பெண்களும், என்னை மாதிரி ஆயிரம் ஆண்களும் இருக்கா. இவ வித்யாசமா இருக்கட்டும். சமையல் உன்கிட்ட வரக்கூடாது' என்பார். அப்போதெல்லாம் கௌரிக்கு ஆச்சரியமாயிருக்

# என்னும் ஒலங்

கும். இவர் மனிதரா இல்லை எதாவது சின்த்தெடிக் விஷயமா என்று? ஈவு, இரக்கம் கிடையாதா, படிப்பு தவிர எனக்கு ஒன்றும் கிடையாதா? பெண்ணுக்கு நீளத் தலைமுடி இருப்பதால், அலசவும் சீவவும் நேரம் ஆகிறது, படிப்பு பாழாகிறது என்று தட்டையாய் வெட்டச் சொல்லும் அப்பா உலகில் உண்டா? எந்த வீட்டுக்குச் சமைக்கப் போனாலும் வெட்கமின்றி, 'உங்க வீட்டுக் குழந்தைகள் என்ன படிக்கறா? என்ன படிச்சா என்ன ஆகலாம்? கொஞ்சம் எழுதித் தரேளாண்ணா?' என்று கேட்க ஆரம்பிப்பார். 'நீ ஆடிட்டராவோ, பாங்க் அதிகாரியாவோ எஞ்சினீயராவோ ஆகணும்.' இதுதான் அவர் அவளுக்கு நாளும் ஆயிரம் தடவை சொல்லும் மந்திரம்.





'அப்பா, முதல் ரேங்க் வந்திருக்கேன்.'

'மார்க் எத்தனை?'

'எண்பத்தஞ்சு பர்சன்ட்.'

'எஞ்சினீயரிங் காலேஜ் வாசல்ல பெருக்கக் கூட அனுமதி கிடைக்காது. பொறந்த குலம் ஞாபகம் இருக்கா? தொண்ணூத்தி அஞ்சுக்குக் குறைஞ்சா, உனக்கு புத்தியும் இல்ல, ஆர்வமும் இல்லைன்னு அர்த்தம்.'

குத்திக் கொண்டே இருப்பார். வில்லன், வில்லன் என்று சதா கௌரி பழிப்பாள். ராத்திரி, விடிகாலை என்று படிக்கும் போது கூடவே உட்கார்ந்திருப்பார். 'ஏம்பா, உங்க கூட இருக்கறவா எல்லாம் சீட்டு ஆடறா, சினிமா போறா. நீங்க என் கூடவே இருக்கேளே, போர் அடிக்கலயா?' என்றால் 'எனக்கு இதுதான் குழந்தை எல்லாமே' என்பார். சலிக்காமல் கடன் வாங்குவார். இவள் படிப்புக்காக என்றால் யார் காலிலும் விழுவார். கௌரியும் அப்பாவை வெறுத்துக் கொண்டே, திட்டிக் கொண்டே, பயந்து கொண்டே படித்தாள். எவ்வளவு மார்க் வாங்கினாலும் அவருக்குப் போதாது. எந்தப் பரிசு வாங்கினாலும், இதை விடப் பெரிய பரிசு வாங்கும் போது வர்றேன்' என்பார். பத்தாம் வகுப்புக்குப் பின் 'இப்போ ரிசர்வேஷன் இல்லாத இடங்கள் ரெண்டு. ஒண்ணு சிஏ படிப்பு. இன்னொண்ணு கம்ப்யூட்டர். இப்போ எல்லாம் கம்ப்யூட்டர்ல விழறதுகள். நீ சிஏ படி' என்றார். சிஏ பரீட்சைக்குப் படித்துக் கொண்டே மாலைக் கல்லூரியில் பி.காம் படிக்கும் போதுதான் கௌரி காதல் வயப்பட்டாள்.

ரவி, வீட்டுக்குப் பக்கத்தில் வசித்த பெரிய புள்ளியின் மகன். அப்பா வெளியூர் வேலைகளுக்குப் போகும் போது அம்மாவும் இவளும் அவன் வீட்டுக்கு டி.வி. பார்க்கப் போவது வழக்கம். உடற்பயிற்சி செய்த நல்ல உடல்வாகு, உயர்தர டீ ஷர்ட்டுகள் என்று நன்றாய் இருப்பான் பார்க்க. அப்பாவின் பிஸினஸ், கடை இவற்றை கவனிக்கிற போர்வையில் பைக்கில் ஊர் சுற்றுவான். பேசாய் அவன் 'ஐ லவ் யூ' சொன்ன உடனேயே கௌரி சந்தோஷமாய் சம்மதித்து விட்டாள். அன்றே அவளின் பலவீனத்தையும் ரவி புரிந்து கொண்டு விட்டான். அவன் அத்து மீறும் போது, 'வேண்டாம் ரவி' என்பாள் மெதுவாக. 'ஏன், அப்பா கிட்ட பயமா?' என்றால், 'அதெல்லாம் இல்லை. சரி, உங்க இஷ்டம்' என்பாள். அவளுக்கு ஏற்பட்டிருப்பது ரவி மீது காதலா, அப்பா மேல் உள்ள வெறுப்பின் வெளிப்பாடா என்ற பயங்கரக் கேள்விக்கு அவளிடம் பதில் இல்லை.

ஒரே மாதத்தில், இருவர் வீட்டுக்கும் இடையே இருந்த இருட்டான இடத்தில் அவன் அவள் தோள் மீது கை போட்டு இழுத்தபோது அப்பா பார்த்து விட்டார். கௌரிக்குக் கொஞ்சம் ஆறுதலாகக் கூட இருந்தது. குலம், கோத்திரம் என்பார். எதையும் மதிக்கக் கூடாது. 'காதலுக்கு ஜாதி, மதம் தெரியாது. பெற்றோர் தெரியாது என்று கண்ணீர் மல்கக் கத்துவதாய்க் கற்பனை செய்தாள். அவர் அடிக்கிறார், திட்டுகிறார். ரவி ஓடி வந்து அவளை கட்டிப் பிடித்து அத்தனை அடிகளையும் வாங்கிக் கொள்கிறான். அடித்து அடித்து அப்பா சோர்ந்து போகிறார். அவளின் புத்தகங்களை மிதித்தவாறு ரவியோடு கைகோத்துக் கொண்டு இருவரும் கடல் நோக்கி நடக்கிறார்கள். சினிமாக்களில் இதற்குப் பிறகு காட்டுவது கிடையாதாகையால் இவள் கற்பனை அதோடு நின்றது.

வீட்டிற்குப் போனால் அப்பா வழக்கம் போல் 'பரீட்சை நல்லாச் செய்தியா?' என்றார். சாப்பிட்டார். எங்கே பூகம்பம்? எங்கே இடி... இவளுக்கு ஆத்திரம் பற்றியது. தானாகவே பேச்சை ஆரம்பித்தாள்.

'என்னையும் ரவியையும் பாத்தீங்களா?'

'ம்.'

'அவரைத்தான் கல்யாணம் பண்ணிக்கப் போறேன்.'

'தாராளமாய்.'

'என்ன மூளை பிசகிப் போச்சா உங்க

''தலைவரே! எங்க மேலே நம்பிக்கை இல்லையா? எல்லா அடியாட்களும் ஜப்பான்காரங்களாவே இருக்காங்களே...!''

''ச்சே... ச்சே... நாளைக்கு கோர்ட்டு கேசுன்னு வந்தா ஜப்பான் மொழியிலே குற்றப் பத்திரிகை கேட்டு இழுத்தடிக்கலாம்லே!''

– தஞ்சை தாமு



ளுக்கு? அவன் யார், குலம் என்ன..' அம்மா கத்தினாள். கௌரி மடமடவென்று தன் வசனத்தைத் தொடங்கினாள். ஜாதி, மதம், அப்பா, அம்மா, எதுவும் அவள் பார்க்க மாட்டாள். இவள் ஏழை என்று அவன் பார்க்க மாட்டான். அவனைத்தான் அவள் மணப்பாள்....

அப்பா அம்மாவைப் பார்வையால் அடக்கினார்.

'கௌரி நீ யாரை வேணுமானாலும் கல்யாணம் பண்ணிக்கோ. எனக்கு ஒரே ஒரு கண்டிஷன்தான்.'

'என்ன?'

'நீ சீஏ படிப்பை முடிக்கணும். வேலை தேடிக்கணும். ஒரு வருஷம் வேலை பார்க்கணும். அப்புறம் என்ன செஞ்சாலும் எனக்குக் கவலை இல்லை.'

கௌரி ஒரு நிமிஷம் அலை மோதினாள். நினைத்தது என்ன? நடப்பது என்ன? மறுக்காதவரிடம் எப்படி சண்டை போடுவது. என்ன சொல்லி இந்த கண்டிஷனை மறுப்பது? 'ஒரு வருஷம். சரியா ஒரு வருஷம் வேலைக்குப் போயிட்டு, நான் வேலையை விட்டுடுவேன். வேலைக்குப் போறது ரவிக்குப் பிடிக்காது!'

'அப்புறம் நீ என்ன செஞ்சாலும் எனக்குக் கவலை இல்லை.'

அம்மா வாயடைத்து நிற்க, கௌரி ஓடிப் போய் ரவியிடம் சொன்னாள். 'முட்டாளே, இது மரோ சரித்ரா ஸ்டைல். கிழவன் இல்லாடி. நீ ஒத்துக்காதே. நீ எப்ப படிப்பை முடிக்கறது? எப்ப வேலை தேடிக்கறது? எப்ப ஒரு வருஷம் முடியறது? நான் கிழவனாயிடுவேன்.'

அப்பாவிடம் சொன்னபோது, 'நான் மரோ சரித்ராவையோ வேற ஒண்ணையோ கண்டதில்ல குழந்தை. ஆனா பார்க்கக் கூடாது, பேசக்கூடாது, லெட்டர் எழுதக் கூடாதுன்னு நான் சொல்லலை. நீ வழக்கப்படி பழகலாம். ஆனா உன் அம்மா மேல சத்தியமா வேலை பார்த்து ஒரு வருஷம் முடியற மட்டும் கல்யாணம் கூடாது' என்றார். 'வழக்கப்படி' என்பதில் அழுத்தம் கொடுத்து.

ரவியிடம் போனாள். 'இன்னும் ஒரு மாசத்தில் ஃபைனல் பரீட்சை. பாஸ் பண்ணறேன். வேலை தேடறேன். கிடைக்காம போனா, நான் பயிற்சி எடுத்திட்ட நிறுவனத்திலேயே ஆடிட் அஸிஸ்டெண்ட்னு வேலை செய்யறேன். ஒரே வருஷம். அப்புறம் வில்லனின் மூக்கை உடைச்சிட்டு வர்றேன்' என்றாள்.

கௌரி வெறி பிடித்தது மாதிரி படித்தாள். பரீட்சையில் அகில இந்திய ரேங்க வாங்கி பாஸ் செய்ததும், ஒரு பிரபல கன்ஸல்டன்ஸி கம்பெனியில் வேலை கிடைத்தது. வேலை கிடைத்த செய்தியை ரவியிடம் தான் சொன்னாள் முதலில்.

'ரவி, ஒரே வருஷம். ஒவ்வொரு நாளா கேலண்டரில் அடிச்சிட்டே வருவேன். அப்புறம் கல்யாணம். உங்களுக்கு சமைச்சுப் போட்டுக்கிட்டு, துணி தோச்சுப் போட்டு, குழந்தைகளைப் பெத்துக்கிட்டு ஜாலி, ஜாலி' என்றாள்.

முதல் நாள். அதி நவீன அலுவலகத்தை முதல் பார்வையிலேயே வெறுத்தாள். எல்லாரும் ஆங்கிலம்தான் பேசினார்கள். ஆனால் அது வேறு பாஷை. இவள் இவளின் சாதாரணப் பள்ளி, கல்லூரிகளில் கற்ற பாஷை இல்லை. தன் அதிகாரிக்காகக் காத்திருந்த போது கௌரிக்கு அப்போதே ராஜினாமா செய்துவிட்டு ரவியிடம் ஓட வேண்டும் போல இருந்தது. வேலை பற்றிய புத்தகங்கள் அவளுக்குக் கொடுக்கப்பட்டன. மாலை ஐந்து மணி ஆனபோது, அலுவலகம் அப்போதுதான் காலை போல சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டிருந்தது. ஒரு பிராணி வீட்டுக்குக் கிளம்பவில்லை. மேலதிகாரி கௌரியிடம் 'ஒரு ஐந்து நிமிடம் - ஒரு மீட்டிங் முடித்துவிட்டு வருகிறேன், காத்திரு'



''தூங்கும்போது கூட ரொம்ப குழப்பமா இருக்கு, டாக்டர்!''

''ஆச்சர்யமா இருக்கே! அதெப்படி?''

''ரெண்டு கண்ணும் வெவ்வேறு கனவு காணுதே!''

– அம்பை தேவா

# ஓர வஞ்சனையுடன் ஒரு பந்தயமா?



"ஒரு பந்தயக் காட்சியைக் கற்பனை செய்து கொள்ளுங்கள். ஓர் ஆண், ஒரு பெண், ஓடத் தயாராக இருக்கிறார்கள். ஆனால் அந்தப் பெண்ணின் இடுப்பில் ஒரு குழந்தை; கையில் ஒரு குழந்தை. தலையில் ஒரு மூட்டை! இந்தப் பந்தயம் நியாயமானதா? இந்த நிலையில் உள்ள பெண்களுக்கு, இட ஒதுக்கீடு அவசியமா? இல்லையா?'' என்று கூட்டத்தினரைப் பார்த்துக் கேட்க, கூட்டம் ''அவசியம்!'' என்று பதில் குரல் கொடுத்தது.

— பெண்களுக்கான இட ஒதுக்கீடு பற்றி நடந்த கருத்தரங்கில் கேட்டவர் :

**பாரதி மௌலி**

என்று போனார். ஆறு மணிக்கு ரவியை சந்திப்பதாகச் சொன்னதை நினைத்துக் கொண்டே கௌரி எட்டே முக்கால் வரை காத்திருந்த பின் மேலதிகாரி பாடிக் கொண்டே வந்தார். 'ரொம்ப சாரி, டியர் யங் லேடி... கொஞ்சம் தாமதமாகி விட்டது' என்றார். 'கொஞ்சமா, கிராதகா' என்று கௌரி வெம்ப, வெம்ப – நிறுவனத்தைப் பற்றிய நீண்ட அறிமுகம் தந்துவிட்டு அவர் கௌரியைப் போகச் சொன்னபோது மணி பத்து! அன்று காலண்டரில் கௌரி தேதியை அடிக்கும் போது, 'ஒரு வருஷத்துக்குள் நான் செத்துப் போவேன்' என்று நினைத்துக் கொண்டாள்.

வரவர நிலைமை மோசமானது. தினம் தினம் நேரமானது. ஒன்று கம்ப்யூட்டர் வேலை செய்யவில்லை அல்லது மேலதிகாரி மும்பை போய் ஒரு மீட்டிங்கில் பேச, குறிப்பு கள் தயாரிக்க வேண்டியிருந்தது. அதுவும் இல்லையென்றால் யாருக்காவது பிரிவுபசார பார்ட்டி அல்லது அமெரிக்காவில் இருக்கும் தலைமையகத்துக்கு ரிபோர்ட் தயாரிப்பது... கௌரி முப்பது நாட்கள் காலண்டரில் அடிப்பதற்குள், பத்துத் தடவை ரவியைச் சந்திக்க முடியாது போனது. 'அஞ்சு மணிக்கு நீ பாட்டுக்கு கிளம்பி வா. அது என்ன வியா பாரம் உங்க ஆபீஸ்ல, பொம்பளைங்களை அஞ்சு மணிக்கு மேல வைச்சு' என்ற ரவியை ஆயாசத்துடன் பார்த்தாள் கௌரி. 'இவ னுக்கு என்ன சொல்லிப் புரிய வைப்பது. மதியம் வீட்டில் லஞ்சம் பிறகு ஓய்வும் என்று இருக்கும் இவனது பகல்களுக்கும், சாண்ட்விச்சை கடித்தபடி ஓர்க்கிங் லஞ்ச் என்று ஓடிக் கொண்டிருக்கும் எனது பகல் களுக்கும் என்ன வித்யாசம்' என்று நினைத் தாள்.

மூச்சைப் பிடித்துக் கொண்டு வேலை செய்தாள். ஏதோ தவறு செய்து மேலதிகாரி யிடம் திட்டு வாங்கி வீட்டில் வந்து அழுத போது அம்மா வெடித்து விட்டாள். அப்பா வைப் பார்த்து, 'அவளுக்குக் கல்யாணம் பண்றதா முடிவு செய்தாச்சில்லையா, அப் புறம் என்ன ஒரு வருஷ வேலை. விட்டுத் தொலைக்கச் சொல்லுங்கோ' என்றாள். 'அம்மா, ஒரு நல்ல பேர் எடுக்காம நான் பாதியிலே விட மாட்டேன்' என்று கௌரி விசும்பலிடையே சொன்னபோது அப்பா கிட்டே வந்து அவள் தலையை வருடினார்.

'இதுதான் உன் சுபாவம் குழந்தை. உன்னைக் குத்தினா, ஜெயிக்காம இருக்க மாட்டேன்னு நீ கிளம்புவ. அது தெரிஞ்சு தான் நான் உன்னைக் குத்திண்டே இருந் தேன். அதுவே நீ ரொம்ப நல்லா படிக்க காரணமா இருந்தது. இப்பவும் நீ ஜெயிக்கத் தான் போற. ஒரு விஷயம் சொல்றேன் புடிச் சக்கோ. நான் வேம்பு மாமா கிட்ட சேரும் போது இப்படித்தான் ரொம்ப அவமானப் பட்டேன். நான் இல்லாம் இந்த சமையல் கோஷ்டி இல்லைன்ற நிலைக்குக் கொண்டு வரணும்னு கரு வைச்சேன். வேம்பு மாமா வுக்கு ஸ்வீட்தான் பலவீனம். சரியா வராது. நான் அதைப் புடிச்சேன். முனைஞ்சு உழைச்சு ஸ்வீட்டுனா நான்தான்னு ஒரு நிலை வர எட்டு மாசமாச்சு. அப்புறம் வேம்பு மாமா என்கிட்டே சரண்டர் ஆயிட்

டார். எதுக்குச் சொல்றேன்னா...'

எதுக்குச் சொல்கிறார் என்று அவர் முடிக்காமலே கௌரி புரிந்து கொண்டாள். தன் மேலதிகாரியின் பலவீனம் எது? சட்ட சம்பந்தமான விஷயங்கள், வருமான வரி சம்பந்தமான விஷயங்கள் அவருக்குப் புரியாது. வெளி வல்லுனர்களைத்தான் நாடுவார். தான் பிடிக்க வேண்டிய கொம்பு எது என்று கௌரி புரிந்து கொண்டாள். பத்து மாசம் முடிந்து காலண்டரை அடிக்கும் போது, 'லீகல் விஷயம், டாக்ஸ் விஷயம் புரிஞ்ச ஒரே ஆளு கௌரிதாம்பா. அவள் இல்லாமல் எந்த பிராஜக்ட்டும் சரி வராது' என்ற நிலை வந்திருந்தது. அந்த பாரத்தில் பல நாள் காலண்டரில் தேதி அடிக்க மறந்து போனாள் கௌரி.

'உன் பாஸ் என்கிற சொட்டைத் தலையனோடு நீ காரில் வரக்கூடாது.'

ரவி சொன்னபோது இருவரும் ஒரு ரெஸ்டாரெண்டில் சாப்பிட்டுக் கொண்டு இருந்தனர். 'ரவி, என் வேலையைப் பற்றி உங்களுக்கு ஒன்றும் தெரியாது. தலையிடாதீர்கள் ப்ளீஸ்' என்றாள். 'உன் சமையற்கார அப்பனுக்கு நன்றாய்ப் புரியும் இல்லையா? பெண்ணின் சம்பளத்தில் காலம் தள்ள' என்று ரவி கேட்டதும் 'ஷட் அப்' என்று கௌரி கத்தியதை அந்த ஹோட்டலில் எல்லாரும் கேட்டார்கள். இவ்வளவு மாச சம்பளத்தில் அப்பா ஒரு பைசா தொடாததை, டீ.வி என்றும் சாப்பாட்டு மேஜை என்றும் இவள் வாங்குவதை ஒரு நாளும் உபயோகிக்காமல் இருப்பதை நினைத்துக் கொண்டே கௌரி வெளியேறினாள்.

ஒரு வாரத்தில் அவள் வேலையை விட்டு வந்தால் மட்டுமே இனி கல்யாணம் சாத்தியம் என்று அவனிடமிருந்து கடிதம் வந்த போது - யோசிக்காமல் கௌரி கடிதத்தை குப்பைத் தொட்டியில் வீசினாள். ஒரு மாசம் கழித்து ரவியின் கல்யாணப் பத்திரிகை வீட்டுக்கு வந்தபோது, அப்பா ஆபீஸிற்கு முதல் முறையாக வந்தார்.

'நான் வேணும்னா அவர்கிட்ட போய் பேசட்டா' என்றார். கௌரி அவரைப் பார்த்துச் சிரித்தாள். 'வேண்டாம்பா, விட்டதுன்னு நினைச்சுக்கிட்டு வீட்டுக்குப் போங்கோ' என்றாள். ரவியின் திருமணத்தன்று ஒரு முக்கியமான விவாதத்தில் இருந்ததால் அன்று அவளுக்கு திருமணம் என்பது ஒருமுறை கூட அவளின் நினைவுக்கு வரவில்லை. ஒரு வருஷம் முடிந்த நாளில் கௌரி ராஜினாமா தருவதற்கு பதிலாக அவள் நிர்வாகம் அவளுக்குப் பதவி உயர்வு கொடுத்தது. அப்பாவிடம் கடிதத்தை கௌரி கொடுத்த போது, வழக்கப்படி, 'இதெல்லாம் போதாது - மேலும் மேலும் பதவி உயரணும்' என்றார். இந்தியாவின் மிகச் சிறந்த இளம் நிர்வாகி போட்டியில் கலந்து கொண்டாள். பரிசு வென்றாள். விருது வாங்கும் போதுதான் அப்பா முன் வரிசையில் பெருமையோடு உட்கார்ந்தார்.

**வி**ழா முடிந்து பிஸினஸ் வோர்ல்ட் பத்திரிகையின் பேட்டி.

"மிஸ் கௌரி, இத்தனை பெரிய வெற்றிக்குப் பின்னால் குடும்பத்தின் முன்னோடிகள் யாராவது இருக்க வேண்டுமே. உங்கள்



***"இந்த மாசக்கடைசிக்குள்ளே தமது கட்சிக்குக் கேட்டிருந்த 'ரயில்வே துறையை'த் தந்திடணும்ன்னு பிரதமருக்குக் கெடு வச்சிருக்காராமே தலைவர். தரா விட்டால் என்ன செய்வாராம்?"***

***"கெடுவை மறு பரிசீலனை செய்வாராம்!"***

***- கே.ஜி.எஸ். கோவிந்தன்***

தந்தை ஆடிட்டரா, பாங்க் அதிகாரியா, இஞ்சினீயரா..." முதல் கேள்வி துவங்கியது.

கௌரி சிரித்தாள். "அவர் சமையற்காரர். மற்றும் நம்பியாரையும் அசோகனையும் வீரப்பாவையும் மிக்ஸியில் போட்டு அரைத்துச் செய்த வில்லன்."

"பெக் யுவர் பார்டன்."

"அவர் ஒரு சமையற்காரர் என்று சொன்னேன்."

கொஞ்ச நேர மௌனத்திற்கு பின் இரண்டாம் கேள்வி வந்தது. "இந்தப் பெருமை மிக்க விருதை வாங்க உங்களோடு 49 பேர் போட்டி போட்டார்கள். அவர்களிடம் இல்லாதது, உங்களிடம் இருப்பது என்ன?"

"என் அப்பா."

• உயர்ந்தவருக்கு இடமில்லை!

## எதிர்க்க ஒரு குரல் வேண்டும்

'பத்தே நாளில் நான் வானத்தை வில்லாக வளைக்கிறேன்' என்று சபதம் செய்த கையுடன், ராணே சுறுசுறுப்பாக 44–ல் 26 சுயேச்சைகளின் 'ஸப்போர்ட்டை'யும் எழுத்தில் வாங்கி விட்டார்; பிரிந்து போன கணேஷ் நாயக் கோஷ்டியையும் மறுபடியும் சிவசேனையுடன் இணைத்து விடுவார் போலிருக்கிறது. காங்கிரஸில் வேறு 'மராட்டா' தொண்டர்கள் இவர் பக்கம்தான்! எல்லாமாகச் சேர்ந்து, காங்கிரஸ்காரர்களைக் கவலைப்படச் செய்திருக்கிறது. ஜோஷி சாது! அவரை ஆட்டி வைத்ததுபோல் இவரிடம் வாலாட்ட முடியாதே! ஜோஷியின் பதவியிறக்கத்துக்கு, அவரைக் கேள்விகளால் துளைத்தெடுத்த புஜ்பலும் ஒரு காரணம் என்று ஒரு கோஷ்டி குரலெழுப்ப, வல்லவனுக்கு வல்லவனாய், புஜ்பலையே MPCC பிரசிடெண்ட் ஆக்க வேண்டும் என்று பிரிதொரு கோஷ்டி கூக்குரலிடுகிறது! ஆனால் புஜ்பல் சாஹிப், தொண்டை ரிப்பேராகி, பாலக்காட்டைப் பார்க்க ஓடி விட்டார். சரத்பவார் முட்டி வலிக்கு வைத்தியம் செய்து கொண்ட அதே இடத்தில், இவரது தொண்டை வலிக்கு மருந்து வாங்கப் போகிறாராம். (எதிர்த்து) குரல் எழுப்பினால்தான் புஜ்பல்; இல்லாவிட்டால் பூஜ்யபால்தான்!

## 'பஸ்'கரோ!

டில்லியிலிருந்து லாகூருக்கு நமது பிரதமர் பஸ்ஸில் போகப் போவதாகச் சொல்லி இருக்கிறாரா? உடனே தாக்கரே இங்கே தவிக்க ஆரம்பித்து விட்டார். 'ஒரு சாதாரணக் குடிமகன் போல நம் தலைவர் பஸ்ஸில் பயணிப்பதாவது?' என்று இவர் கேட்க, "ஆஹா... அதுவே உத்தமமான நல்லிணக்கப் பயணம்" என்று பவார் பதில் சொல்லியிருக்கிறார். "அண்மையில் கூட, காஷ்மீரில் நடந்த கொலைகள் பற்றி இஸ்லாமாபாத் சந்தோஷமாக கொக்கரிக்கையில், "அவர்களுக்கு நிரந்தரமாக பஸ் விடுவதாவது?" என்று தாக்கரே கொதிக்க, "இந்தச் சண்டை சச்சரவுகளுக்கெல்லாம் முடிவு கட்ட, பஸ் ஓடியே ஆக வேண்டும்" எனப் பவார் அறிக்கை விட்டிருக்கிறார்! இவர்கள் அடித்துக் கொள்வதைப் பார்த்து, வெறுத்துப் போன மக்கள் "பஸ் கரோ" (போதும் நிறுத்துங்கள்) என்பது இவர்கள் காதில் விழுமோ?



## பீஹார் வழியில்...

ஜோஷிக்கு, மாநில முதல்வர் பதவி போனாலென்ன? அவருடைய 'கோஹினூர்' கோச்சிங் கிளாஸஸ்' முதல்வர் பதவிதான் நிரந்தரமானதாயிற்றே? தினமும் 10லிருந்து 2 மணி வரை, கிளாஸுக்குச் சென்று விடுகிறாராம் இப்போது! பாடம் நடத்தும் ஆர்வம் அவருக்கு எப்போ

# "பஸ் கரோ! பஸ் கரோ!"

துமே உண்டு; மாநில முதல்வராயிருந்த போதும், தம் வீட்டில் முதியோர் கல்வி வகுப்புகள் நடத்தியவராயிற்றே! மாணவர்களுக்கு மட்டு மின்றி, ஏனைய பலருக்கும் இவர் "Sir" தான்!

ஹூம்... இதே நிலை ராணேவுக்கு நேர்ந் தால்? 11-வது கூடத் தாண்டாத ராணேவுக்கு அதோகதிதான்! மஹாராஷ்ட்ரா போன்ற மாநிலத் துக்கு முதல்வராயிருக்க, கல்வித் தகுதியும் ஓரளவு வேண்டும் என்று முணுமுணுக்காத மும்பைவாசிகள் இல்லை! மஹாராஷ்ட்ரா இன்னொரு பீஹாராக உருவாகி வருகிறது என்பது பொதுவான குமுறல்!

## ரேணுகாவும் ராணாவும்

'ஓ'பியட் பூனோ'வில் வரும் குழந்தை களைப் போல் குதூகலமாக "He is my best friend..." என்று சிரிப்பழகி ரேணுகா ஷஹானே, 'ஜீ' டீவி விழாவில் எல்லோருக்கும் அறிமுகப்படுத் தியது, இந்திப்பட வில்லன் அசுதோஷ் ராணேவை! "துஷ்மனில்" செய்த பலாத்காரங் களுக்கென்று அவார்டெல்லாம் வாங்கியவர், இந்த "சுயமரியாதை" 'தியாகி'! இவர்தான் ரேணு காவின் 'ரியல் லைஃப் ஹீரோ'வாகப் போகிற வர். "ஸ்பர்ஷ்" ஸீரியலில் சந்தித்தது, அதில் நடிக்க வேண்டாம் என முடிவெடுத்தது, நிஜ வாழ் வில் இணைவதாக ஒப்பந்தித்தது, எல்லாமே மின் னல் வேக நிகழ்வுகள் என்கிறார் ரேணுகா! 'உங்க மனைவி ரொம்ப புத்திசாலி போல இருக்கே?' என்று அசுதோஷிடம் சொன்னால், அவர் 'இன்னுமொருமுறை சொல்லுங்க' என்பாரா?

## 'உயர்'வாய் தாழ்வு!

'உயர்ந்தவர்'களுக்கு அரசியலில்தான் இடமில்லை என்றாகிவிட்டது; ஆஸ்பத்திரியி லுமா?... ஜிதேந்திரசிங், காலை ஒடித்துக் கொண்டு KEM ஹாஸ்பிடலுக்கு சென்றால், இவரைக் 'கொள்ளக்'கூடிய 'பெட்' இல்லாமல்

• ஷட்பியுடன் ரேணுகா ஷஹானே....



எல்லோரும் தவித்துத் தத்தளித்து விட்டனர். (இவரது உயரம் ஏழடி பதினொரு அங்குலம்!) ஜாம்ஷெட்பூரில், TISCO டீமில் பாஸ்கெட்பால் விளையாடிக் கொண்டிருந்தவர், ஆறடி உயர மனைவியுடன் மும்பையில், உறவினர் வீட் டுக்கு வந்திருக்கிறார். வந்தவர், பேப்பரில், சர்க் கஸ் கம்பெனியைச் சேர்ந்த யாரோ ஒரு ஏழடி ஏழு அங்குல மனிதர், தான்தான் இந்தியாவி லேயே 'உயர்ந்தவர்' என்று சொல்லிக் கொண்டு, தன்னுடன் ஃபோட்டோ எடுத்துக் கொள்ள விரும்புபவர்களிடம் 50 ரூபாய் வசூ லிக்கும் விஷயத்தை படித்திருக்கிறார். உடனே சர்க்கஸ் நடக்குமிடத்துக்குச் சென்று விட்டார்; இவர் போய் நின்றதும், பாவம் அவரது பிசி னஸ் அம்பேலாகி விட்டது! அவர் இட்ட சாபமோ என்னவோ... திரும்பி வரும் வழியில், 'பைக்' விபத்துக்குள்ளாகி, காலில் அடி! தேசிய குழுவில் விளையாடும் இவருக்கு இப்போது, வேலைக்கே உலை!

## ஆட்டம்! கொண்டாட்டம்!

மேடை நாடகங்களில்தான் நகைச்சுவை ஒரு "saturation point" ஐத் தொட்டு விட்டதே யென்று, அந்த இடத்தை மும்பையில் இப் போது நாட்டியம் பிடித்து வருகிறது. தாணா விலுள்ள 'கலாமண்டலம்'காரர்கள் நடத்திய கலை விழாவில், கடைசி நாளன்று வைஷாலி நிகேதன் குழுவினர் நடத்திய நாட்டிய நிகழ்ச்சி யைப் பார்த்தவர்கள், முதலிரண்டு "ஸீரியஸ் காமெடி"களில் காணாமல் போயிருந்த ஹாஸ்யத்தை எதிர்பாராதவிதமாகக் கண்டெ டுத்த மகிழ்ச்சியில், வயிறு வலிக்கச் சிரித்து மகிழ்ந்தனர். கும்பலாக ஏழெட்டுப் பத்துப் பேர் அரங்கேறினர்; குஜராத்தி, மராத்தி, பஞ் சாபி, சிந்தி, தமிழ்... என இன வேறுபாட்டைச் சொல்லவில்லை; ஒன்று கட்டை ஒன்று குட்டை ஒன்று நெட்டை என்று உருவ வேறுபாட்டை யும் குறிப்பிடவில்லை; அட்லீஸ்ட் ஆடுகின்ற ஆட்டத்திலாவது ஒற்றுமை இருந்திருக்கலாமல் லவா? ஒருவர் மற்றொருவரைப் பார்த்து, திரு திருத்து, முழித்து... முகத்தில் தெரிந்ததோ பாத ரசம்... (நவரசத்துக்கு ஸ்பெல்லிங்கே மறந்து விட்டது). அறிவிப்பாளர் வேறு 'ஜாதிஸ் வரம்' அது இதுவென்று ஜாதி மதத்தை எல்லாம் புகுத்தி கலவரப்படுத்தினார்! போதிய பயிற்சியுமில்லாமல், விஷய ஞானமுமில்லாமல் ஏன்தான் இப்படி எல் லாம் ஆடியன்சை வதைக்கிறார்களோ!

— ஜெயஸ்ரீ ராஜ்

**மும்பை மசாலா :**

அறை இருட்டில் இருந்தது.

தனம் எங்கே போனாள்?

சிவராம் யோசனையுடன் ஸ்விட்சைப் போட்டான். அறைக்குள் பளீரென்ற வெளிச்சம் பரவியது.

நடு ஹாலில் மேஜையின் மீது ஒரு கேக். பக்கத்தில் ரோஜாப்பூ இணைத்த கத்தி.

அறையின் நான்கு மூலைகளையும் இணைத்த கலர் காகிதங்களின் பளபளப்பு.

"ஹேப்பி பர்த்டே டு யூ."

கோரசாய்க் குரல்கள். அறைக்குள்ளிருந்து ராஜப்பா, ஸ்வேதா, தனம் சிரிப்புடன் வெளியே வந்தனர்.

திகைப்புடன் தேதியைப் பார்த்தான்.

"ஆமாம். இன்றுதான்!"

# நிலா வட்டம் 10

"வா..."

ராஜப்பா ஒரு பக்கம் கையைப் பிடித்துக் கொள்ள, இன்னொரு புறம் தனம் பிடித்துக் கொண்டாள்.

மேஜையின் முன் கொண்டு வந்து நிறுத்தினர்.

கத்தியை எடுத்துக் கொடுக்க கேக் வெட்டினான். தனம் அவனுக்கு ஊட்ட, அவளுக்கு சிவராம் ஊட்டிவிட்டான்.

ராஜப்பா குறும்பாய்ச் சிரித்தார்.

"நான் வேண்டுமானால் கண்ணை மூடிக் கொள்கிறேன்."

ஸ்வேதாவிற்கு அர்த்தம் புரியச் சிரித்து விட்டாள்.

"இன்று உங்களுக்கு ஸ்பெஷல் டிரீட்..." என்றான் உற்சாகமாய்.

ஹோட்டலுக்குச் சென்று திரும்பியபோது இரவு ஒன்பது மணியாகி விட்டது.

தனம் சாவியை வாங்கிக் கொண்டு ஏ பிளாக்கினுள் போனாள்.

ராஜப்பா 'குட் நைட்' சொல்லி விட்டுப் போனார்.

ஸ்வேதா தயங்கி நின்றாள்.

"ம்.. அப்புறம்..." என்றான்.

"இன்னிக்கு ஒரு கவிதை படிச்சேன்."

"என்னது?"

"இறக்கைகள் அற்ற மனசு
என்னமாய் பறக்கிறது.
நேசத்தைச் சொல்லும் போது
ஆதிவாசி மொழிக்குக் கூட
அழகு வந்து விடுகிறது.
இந்த உலகம்
நக்கீரர்களுக்காக மட்டுமில்லை...



நமக்காகவும்தான் கண்ணே..."
என்றாள் லேசான படபடப்புடன்.
"நைஸ்..."
"உங்களுக்குக் கவிதை பிடிக்குமா?"
"ஸ்வேதாவையா? ம். பிடிக்கும்."
"கவிதை எழுதி இருக்கிறீர்களா?"
"ப்ச். எப்பவோ. ஆனால் வரிகளின் அழகில் எப்பவுமே மயக்கம் உண்டு. ஹாலில் பார்த்திருப்பாயே. இந்த வீடு செங்கற்களாலும் சிமெண்டாலும் மட்டும் கட்டப்படவில்லை. சுதந்தரத்தாலும் சந்தோஷத்தாலும் கட்டப்பட்டதும் கூட."
"ஒரு உதாரணம் சொன்னால் கூட அதற்கும் சிமெண்ட், செங்கல் தானா."
சிவராம் சிரித்தான்.
"உன்னைப் பார்க்கும் போது கூட ஒரு ஃப்ளாட்டைப் பார்க்கிற மாதிரி... அளவுகள் தான் முதலில் ஞாபகத்துக்கு வரும்."
"அப்போது.. என்னை மனுஷியாய்ப் பார்க்கவில்லை. அப்படித்தானே?"
"ஸ்வேதா."
ஏன் கோபித்துக் கொண்ட மாதிரி பாவனை காட்டுகிறாள் என்று அவனுக்குப் புரியவில்லை. என்ன சொல்லி சமாதானப் படுத்துவது என்றும் புரியவில்லை.
"ஸ்வேதா. எனக்குப் பேசத் தெரியவில்லை. எதையாவது உளறிக் கொட்டுகிறேன்."
"உங்களுக்கா?"
"ஒரு கூட்டத்தையே என்னால் சமாளிக்க முடியும் ஸ்வேதா. உன் எதிரில் தடுமாறிப் போகிறேன்."
கம்பீரமானவன் அவள் எதிரில் சின்னக் குழந்தை போல் தடுமாறி நின்றான்.
"எனக்குப் பரிசு ஒன்றும் கிடையாதா?"
"என்ன வேண்டும்" என்றாள்.
"ஏதாவது."
ஸ்வேதா பதில் பேசாமல் நின்றாள்.
"என்ன யோசனை."
"இந்த நிமிஷம் என்ன தர முடியும்."
நகர முயன்றவனைக் கையைப் பற்றி நிறுத்தினாள்.
"ஸ்வேதா."
"ஐ லவ் யூ... ஐ லவ் யூ ஸோ மச்."
போய் விட்டாள். சிவராமுக்குள் அனலடித்த மாதிரி உணர்ந்தான்.



# ரிஷபன்

**கோ**குல் வேகமாய் வளர்ந்து கொண்டிருந்தது.
ராஜப்பா ஊருக்குப் போய் விட்டார்.
கிளம்பும்போது சொன்னார்.
"சீக்கிரம் நான் இங்கு வரணும். நீதான் அதற்கு ஏற்பாடு செய்யணும். புரிகிறதா? பத்திரிகை அனுப்பு."
சிவராம் வெட்கத்துடன் தலையசைத்தான்.
தனம் படிப்பில் நல்ல ஆர்வம் காட்டினாள். கார்டியன் என்று சிவ

ராம் பெயர் போடப்பட்டு இருந்தது.

'அவர்கிட்டே சொல்லு. நீ நல்லாப் படிக்கிறேன்னு. டீச்சர் சொல்லச் சொன்னாங்கன்னு'.

தனம் வந்து சொன்னதும் சந்தோஷமாய் இருந்தது.

"உனக்கு என்ன வேணும்?"

"எனக்குத்தான் எல்லாம் இருக்கே."

"ம்ஹூம். வேற ஏதாவது ஸ்பெஷலா."

"ஒண்ணும் வேணாம்."

"புது டிரஸ். சைக்கிள். ஏதாச்சும் கேளேன்."

தனம் பேசாமல் நிற்கவும் சிவராம் அவளை அழைத்துக் கொண்டு கிளம்பி விட்டான்.

'நீ வா. அங்கே என்ன பிடிக்கிறதோ. சொல். வாங்கி விடலாம்.'

புரபசரைப் பார்க்கக் கூடும் என்று முதலில் எதிர்பார்க்கவில்லை.

"ஹலோ.. ஸார்."

இவனைப் பார்ப்பதற்கு முன் தனத்தைப் பார்த்தார். தனம் சிவராமின் பின்னால் ஒடுங்கிக் கொண்டாள்.

"யாரது? புதுசா இருக்கு."

"வேண்டியவரோட பெண். இப்போது என்னோடுதான் தங்கியிருக்கிறாள். என் தங்கை போல."

"ஓ. தங்கையா!" என்றார் தங்கைக்கு அழுத்தம் கொடுத்து.

"ம். தங்கையேதான்."

"என்ன படிக்கிறாய், குட்டிப் பெண்ணே?"

முன்னுக்கு நகர்ந்து அவளைத் தொட முயன்றார். தனம் சிவராமைச் சுற்றி வந்து அவர் கைக்குள் அகப்படாமல் நின்றாள்.

"என்னோடு பேச மாட்டாளா."

"புது நபர் என்பதால் இருக்கலாம். தனம்... இப்படி வாயேன்" என்றான்.

தனம் நகரவில்லை.

"சரி. அவள் அப்படியே இருக்கட்டும். என்ன... இரண்டு பேரும் இந்த நேரத்தில்."

"அவளுக்கு ஏதாவது பிரசண்ட் செய்யலாமென்று."

"இன்று என்ன விசேஷம்?"

"விசேஷம் ஒன்றும் இல்லை. நன்றாய்ப் படிக்கிறாள். உற்சாகப்படுத்தலாம் என்று."

"ஓ. அப்படியானால் நானும் ஏதாவது வாங்கித் தருகிறேன். வாருங்கள்."

தனத்தின் முகம் இருண்டு விட்டது.

புரபசர் கூட வருவது அவளுக்குப் பிடிக்கவில்லை என்று புரிந்தது.

சிவராமைப் பிடித்து இழுத்தாள்.

"வாங்க. வீட்டுக்கே போகலாம்."

"இரு. ஏதாவது வாங்கலாம்."

"ம்ஹூம். எனக்கு வேணாம்."

"ஊஹூம். பேசாமல் வா."

அதிகம் தேடவே விடவில்லை. கண்ணில் பட்டதைச் சுட்டிக் காட்டினாள்.

"இதோ... இதுவே போதும்."

"இதையா..." என்றான் சுவாரசியம் இழந்து."

"இதுதான்."

பில்டிங் செட் போல இருந்தது. சிவராமுக்கு அவ்வளவாய் திருப்தி தரவில்லை. தனம் விருப்பப்படுகிறாள் என்பதால் சமாதானமானான்.

"இந்தா..." என்றார் புரபசர்.

ஒரு லாரி வடிவ பொம்மைக்குள் ஐந்து பார் சாக்லேட்டுகள்.

"தேங்க்ஸ் சொல்லு தனம்."

தனம் கை நீட்டி வாங்கவுமில்லை. பேசவுமில்லை.

"சரி. நீயே கொடுத்து விடேன். வரட்டுமா."

தனம் எதிர்பார்க்காத நேரத்தில் அவளருகில் வந்து கன்னத்தைத் தட்டிவிட்டு போய் விட்டார்.

"என்ன ஆச்சு. உனக்கு..." என்றான் புதிராகப் பார்த்து.

தனம் உர்ரென்ற முகத்துடன் அவனுடன் வந்தாள்.

"இந்தா. நன்றாக இருக்கிறதா?"

புரபசர் வாங்கித் தந்ததை அவனிடம் கொடுத்தான். தனம் கையை இறுக மூடிக் கொண்டாள்.

"தனம்."

ஏன் இப்படி இறுக்கமாய் நிற்கிறாள். சிவராம் திகைப்புடன் அவளையே பார்த்தான்.

ஸ்வேதா வந்து அழைக்கவும் முதலில் புரிபடவில்லை.

"என்ன சொல்கிறாய்?"

"என் அப்பாவேதான். உங்களைப் பார்க்க வேண்டுமாம்."

குழப்பமாய்ப் பின்தொடர்ந்தான்.

"வாங்க..."

உற்சாகமாய் வரவேற்றார்.

"உட்காருங்க."

சிவராம் உள்ளுக்குள் படபடப்புடன் அமர்ந்தான்.

"எனக்கு சுற்றி வளைத்துப் பேசத் தெரி

யாது. ஸ்வேதாவுக்கு உங்களைப் பிடித்திருக் கிறது. கல்யாண விஷயம் பேச உங்கள் அப்பாவைப் பார்க்க வரவேண்டும். எப் போது வரலாம். கேட்டுச் சொல்கிறீர்களா?''

"ஸார்."

ஆச்சர்யமாய்ப் பார்த்தவனைக் கண்டு சிரித்தார்.

"ஏன். நான் தடையாய் இருப்பேன் என்று நினைத்தீர்களா?"

"இல்லை... வந்து."

"என் பிரதரும் சொன்னார். இருந்தாலும் எனக்கு ஸ்வேதாவின் சந்தோஷம்தான் முக் கியம் என்று சொல்லி விட்டேன். தெரியும் இல்லையா. புரபசர் என்னுடைய..."

"தெரியும்."

"அவன் போக்கே வேறு. நான் கொஞ்சம் பிராக்டிகல். போகட்டும். சீக்கிரமாய் முடித்து விடலாம். என்ன."

கையைப் பற்றிக் குலுக்கியவருடன் ஒட்டுதல் உணர்ந்தான்.

வெளியில் வந்ததும் சொன்னான்.

"ஸ்வேதா, உன் அப்பா ரியலி கிரேட்."

**சி**வராமை ஆவேசமாய் வழிமறித்தார். 'பி' பிளாக்கில் குடியிருப்பவர்தான்.

"உங்களை செகரட்டரின்னு போட்ட தோட சரி. எப்ப தேடினாலும் கிடைக்க மாட்டேங்கறீங்க."

"என்ன வேணும்?"

சிவராமின் குரலில் மென்மை மாற வில்லை.

"மீட்டிங் கால் ஃப்பார் பண்ணுங்க. நான் மட்டுமில்லே. நிறையப் பேர் பேசணும்."

"நீங்களே ஒரு டைம் சொல்லுங்க. நான் வரேன்."

தலைக்குத் தலை இரைச்சல்கள்.

"ராஜப்பாவின் இடத்திற்கு வேறு நபர் நியமிக்கப்படவில்லை. அவர் மட்டும் இருந் திருந்தால் இப்படியா விட்டிருப்பார். பக்கத் தில் அவர் இருப்பதே ஒரு தைரியம்."

"பிளீஸ். ஒவ்வொருத்தராப் பேசினா நல்லது" என்றான் எழுந்து நின்று.

"டாங்க்ல வாட்டர்... போதுமான அளவு இருக்கிறதேயில்லை. பைப்பைத் திறந்தா... கலங்கலா வருது."

"என்ன ஸார். ஹவுஸ் டாக்ஸ் மத்த ஃப்ளாட்ஸை விட நம்மதுல அதிகமா இருக்கு."

எல்லோரிடமும் சின்னதாகவோ. பெரிய தாகவோ குறைகள். சொல்லப்பட இருந்தன.

"வாட்ச்மேனை பர்சனல் வேலைக்கெல்



"டாக்டருக்கு ஞாபக மறதி இருக்கலாம். அதுக்காக வயிற்று வலிக்கு ஆபரேஷன் செய்துக் கிட்டு இருக்கும்பொழுது பேஷண்டை எழுப்பி அந்தப் பக்கம் வலிக்குதா, இந்தப் பக்கம் வலிக்கு தானு கேட்கிறது நல்லா இல்லை."

- கு. உதயபாரதி

லாம் அனுப்பிடறாங்க. கண்டவன்லாம் உள்ளே வரான்."

சேர்ந்து பேசி வைத்துக் கொண்டு வந்திருப்பது போலத் தோன்றியது.

"ப்ளீஸ் வீ ஆர் ஹியர் டு ஸால்வ்... எனி பிராப்ளம். ஐயாம் வித் யூ."

மீண்டும் இரைச்சல்கள்.

**கோ**குல் அபார்ட்மெண்ட்ஸிலும் திடீரெனச் சிக்கல்கள்.

"என்ன, வேலைக்கு வரலியா."

பத்து நபர்கள் சேர்ந்தாற்போல வேலைக்கு வரவில்லை என்று புரிந்ததும் சிவராமுக்கு எரிச்சலானது.

"எத்தனை நாளா?"

மேஸ்திரி தயங்கிய குரலில் சொன்னார்.

"ஒரு வாரமாங்க."

"ஏன் என்கிட்டே முன்னாலேயே சொல் லலே."

"ஆரம்பத்துல ஒருத்தர், ரெண்டு பேராத் தான். இப்பத்தான் ரெண்டு நாளா."

"வேற ஆளைப் போடுங்க."

"என்னவோ வதந்திங்க. பயத்துல..."

"என்ன?"

"அய்யா. எனக்கு இதுல எதுவுமே தெரி யாதுங்க. கெட்டதா ஒண்ணு நடக்கப் போவு துன்னு யாரோ சொன்னதாத் தகவலுங்க. நான் வேற ஆளைப் போட்டுடறேனுங்க."

அங்கே ஃப்ளாட்டிலும் பிரச்னைகள். இங்கே கட்டுமிடத்திலும் சிக்கல். யாரோ தூண்டி விட்ட மாதிரி. யாரோ என்னை மிகத் தெரிந்த நபர். புரபசரின் வேலையா?

ஏன் இப்படிச் செய்கிறார்? சிவராம் புரப சரை நேருக்கு நேர் மோதத் தீர்மானித்தது, அப்போதுதான்.

(தொடரும்)

# — இல. கணேசன் விமர்சிக்கிறார்



**க**ள்ளழகர் கோவில் திருவிழாவில், தீவிரவாதிகள் வெடிகுண்டு வைக்க முயல்வதும், அதிலிருந்து மக்கள் காப்பாற்றப்படுவதும்தான் 'கள்ளழகர்' படத்தின் கதை. இப்படத்தைப் பார்த்துவிட்டு, விமர்சிக்கிறார் தமிழ்நாடு பா.ஜ.க. பொதுச் செயலாளரான இல. கணேசன்:

நான் அபூர்வமாகத்தான் சினிமா பார்ப்பேன். ஒரு பிரச்னைக்குள்ளான படம்; தீவிரவாதிகள் பிரச்னை பற்றிய படம் என்று சொல்லித்தான் என்னை கள்ளழகர் படம் பார்க்க அழைத்தார்கள். பெரிய எதிர்பார்ப்புகள் எதுவுமில்லாமல் பார்த்தேன். விறுவிறுப்பில்லாத, எதார்த்தத்துக்குக் கொஞ்சமும் பொருந்தாத கதையோட்டத்துடன் தான் இடைவேளைவரை கதை நடை போட்டது. கள்ளழகர் கமலக் கண்ணன், உண்மையில் கமால் ஹுஸைன் என்று தெரிந்தபோது, நிமிர்ந்து உட்கார்ந்தேன். ஆக, இடைவேளைக்குப் பிறகுதான் படம் சூடு பிடித்தது.



# கள்ளழகர்

எந்த ஒரு மதப்பிரிவினரிடமிருந்தும், ஆட்சேபம் வந்து விடக்கூடாது என்று இயக்குனர் சிந்தித்த காரணத்தால்தான் தீவிரவாதத்தை எதிர்த்துப் பேசுகிற அத்தனை வசனங்களையும் ஒரு முஸ்லிம் வாயிலாகவே சொல்ல வைத்திருக்கிறார். சம்பந்தமில்லாமல், கிறிஸ்தவ மதமும் இணைக்கப்பட்டுள்ளது. சாதாரண வாழ்க்கையிலிருந்து சற்று மாறுபட்ட விஷயங்களைக் காட்டுவதுதான் சினிமா என்பதால்தானோ என்னவோ, சர்ச்சில் கூட பாதிரியார் தேசபக்தி பற்றிப் பேசுகிறார். ஆனாலும், இந்தக் காட்சியை அமைத்திருக்கும் இயக்குனர் பாரதி, பாராட்டுக்குரியவர்.

வசனங்கள் (டைரக்டர் மகேந்திரன்) சிறப்பாக இருக்கின்றன. தீவிரவாதத்தை ஒழிக்க வேண்டுமானால் அவன் எந்த மதத்தைச் சேர்ந்தவனோ, அந்த மதத்தினர் ஆர்த்தெழுந்து, தீவிரவாதிகளைப் புறக்கணிக்க வேண்டும் என்பது எனது நீண்ட நாள் கருத்து. அது இந்தப் படத்தில் மிக நன்றாக எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் நடைமுறையில் அது இல்லை என்பது வருந்தத்தக்கது.

காவல் துறை எந்த முயற்சியும் செய்யாமலேயே மக்களே முன் வந்து, தீவிரவாதிகளின் முயற்சிகளைத் தடுப்பதாய் காட்டப்பட்டுள்ளது. படம் முழுக்க ஒரு காவலர்கூட வரவில்லை என்பது யதார்த்தமாய் இல்லை.

கமலக் கண்ணன் அதாவது கமால், கடைசியில் ஆண்டாளின் கைப்பற்றியிருந்தால், ஒரு மதப் பிரச்னை எழக்கூடும் என்று கருதியோ என்னவோ, ஆண்டாளை சாகடித்து விட்டார்கள். கமலக்கண்ணனாகவே கமால் நீடிக்கப் போவதாய்ச் சொல்வதை அனைத்துத் தரப்பினரும் ஏற்றுக் கொள்வார்களா என்பது சந்தேகம்தான்.

நகைச்சுவை என்ற பெயரில், படத்துக்குப் பொருந்தாத, தரமில்லாத விஷயங்கள் சேர்க்கப் பட்டுள்ளன. பாடல் காட்சிகளில் விசேஷமாக, ஒருசில விநாடிகள் வரும் 'பாலே' நடனத்தைச் சொல்லலாம். மிக அருமையாக கலைநயத்துடன் இருக்கிறது.

மதுரை அழகர் திருவிழாவுக்கு நேரில் சென்றால்கூட காணக் கிடைக்காத திருவிழாக் காட்சிகளைப் படம் பிடித்திருப்பதைப் பாராட்டியே ஆக வேண்டும்.

கோயில் பட்டராகக் கூட தீவிரவாதிகளால் ஊடுருவ முடியும் என்று எச்சரிக்கிறது படம். எல்லா மதத்தினரும் பார்க்க வேண்டிய படம்.

தொகுப்பு: **கௌதம்**

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623;
Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1900/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 950/- (Air Mail)

**வழங்குகிறோம்**

## அனைத்தும் அடங்கிய ஒரே தீர்வு...




## ... பலவித பணத் தேவைகளுக்காக.

# பீமா நிவேஷ்

ஓர் இணையற்ற, குறுகியகால, பல்வித - ஆதாயங்கள் கொண்ட காப்பீட்டுத் திட்டம்.

**சிறப்பம்சங்கள்:**

- ரூ. 25,000 முதல் ரூ. 5,00,000 (ரூ. 5,000ன் மடங்குகளில்) வரையிலான உத்தரவாதம் அளிக்கப்படும் தொகைக்கு ஒரே முறை பிரிமீயம் செலுத்தினால் போதும்.
- திட்டத்தின் காலவரை: 5 வருடங்கள் மற்றும் 10 வருடங்கள்.
- பிரிவு 88ன் கீழ் வரிச்சலுகைகள் கிடைக்கின்றன.
- விசுவாசத்தொகை எனப்படும் கூடுதல் தொகைகளுக்கான வாய்ப்பு.
- இத்திட்டத்தின் காலவரையில் ஆயுள் காப்பீட்டு வசதியும் உண்டு.
- உத்தரவாதமான கூடுதல் தொகைகளுக்கு வரியில்லை. ஆண்டுக்கு ஆயிரத்துக்கு ரூ. 85/-. முதல் 5 ஆண்டுகளுக்கு மற்றும் அதன்பின்பு ஆண்டுக்கு ஆயிரத்துக்கு ரூ. 90/- (கூட்டு வட்டி முறை)
- சேரும் தகுதி: 35 வயது முதல் 70 வயது வரையிலான தனி நபர்கள். தாங்கள் ஆரோக்கியமாக இருப்பதாக ஒரு எளிய உறுதிப் படிவம் அவசியம்.

**பீமா நிவேஷ்** - விவேகமான தீர்வு.

விபரங்களுக்கு உங்கள் எல்ஐசி முகவர் அல்லது அருகிலுள்ள கிளை அலுவலகத்துடன் தொடர்பு கொள்க.



**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**

மக்களின் மகத்தான சேவையில்

Please visit us at www.licindia.com

Registered with the Registrar of Newspaper of India under No. 1011/57 * Registered No. TN / MS (S) M4392/ 99 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka

# உங்கள் குழந்தைக்கு புதிய ஃபாரெக்ஸ் நியூட்ரி-பௌல் பரிசாகக் கொடுங்கள். அவன் அதைக் கண்டு மகிழ்வதைப் பாருங்கள்.






புதிய ஃபாரெக்ஸ் நியூட்ரி-பௌல் பாதுகாப்பானது. நீடித்து உழைக்கக் கூடியது. ஆரோக்கியமானது. ஃபாரெக்ஸ் உணவைக் கலந்து உங்கள் குழந்தைக்கு ஊட்ட முற்றிலும் சரியானது.

ஃபாரெக்ஸ் வீட் அல்லது ஃபாரெக்ஸ் ரைஸ் பேக்குடன் மட்டுமே இலவசம்.

**Farex®**
GROWING UP RIGHT

CONTRACT.FRX.25269.TA

ஆஃபர் 28.2.99 அல்லது சரக்கு உள்ள வரை மட்டுமே.
இந்த ஆஃபர் இல்லாமலும் பேக்குகள் குறிப்பிட்ட மார்க்கெட்களில் கிடைக்கின்றன.